திராத அசாத்திய கருங்கிரந்தியின் குணம்

## தன்வந்திரி

எண்சீராசிரியவிருத்தம்.

பாரோ நீ கருங்கிரந்திக்குணம் ஏதென்றால் பனிபோலே சீறியழும் மூலை புண்ணாகு, ஆரோதான் முறிமுறித்து உடலும் விம்மும் அரிய நாவரட்சியுடன் கண்விழிக்கும், வாரோதான் மலர்முகமும் வாடிக்காணும் வல்வினையாம் *குக்கில் புழுவினையும்பாவம், மாரோதான் மைந்தன் அஞ்சுநாளில் சாவும் மடவா கொடிது கருங்கிரந்தி யுனாத்தோம் நாமே..............................(ருக)

* குக்கில் - வயிற்றில்

கிரந்தி வகுப்பு

முற்றிற்று.



இனிதோஷம்வருமாறு

அகத்தியர் திருவடிகளே சரணம்.

# தோஷ வகுப்பு

## பட்சித்தோஷகுணம்

அறுசீராசிரியவிருத்தம்

*உதகமாய்க்கழிவதன்றி உவாந்தியுமிக உண்டாகி..........................*
இசமொடு தலையெடாமல் இருகண்ணில பீளைக்கட்டி..............................*
விதவிதமாகமேனி வெதும்பியே பேய்போல்சீறும்..............................*
பதமிது முனிவன் சொன்னப் பட்சியின் தோஷந்தானே..................(ருஉ)

* உதகம் - சலம்

இதுவுமது.

பெருகிவயிறுசான்போகும் பேதம் உடம்பு சன்னுழியும்..........................*
பெருகுந்தமூத்தும் முகஞ்சிறுக்கும் பேரானகுரல் பேசச் சீறியழும்...............*
அருவி முலைப்பும் உண்ணாது அலறும் தண்ணீர்க் குடியாது......................*
பருவவிடயோன் தான் அறியப் பகரும் பட்சித்தோஷமிதே..............(ருங)

பட்சித்தோஷ நிவர்த்தி
## குளிசமும் மருந்தும்

பட்சியின் தோஷந்தீரப் பனையின்வேர்க்குளிசம் ஆடி..........................*
உச்சிதமணித்தக்காளி உகந்திடும் வேரோடுள்ளி..........................*
பிச்சியின் வேரோடெண்ணெய்ப் பிசைசதிர் புடமேசெய்து..........................*
உச்சியில் இட்டுப் பின்னும் உள்ளுக்குங்கொடுத்திடாயே..........................(௫௪)

இதுவும் பட்சித்தோஷநிவர்த்தி குளிசமும் சாந்தியும்

## தன்வந்திரி

எண்சீராசிரியவிருத்தம்

காணவே செப்பேடு தகடுவாங்கிக் கண்மணியே எண்கோணம் அதன் மேல்வட்டம், பூணவே சிங் கிரீயும் ஸ்ரீயுஞ்சவ்வும் பூட்டியே எண்கோணம் அதிலேயூன்று, தோணவேநான்சொல்வேன் தருமமாக தூக்கான ஐயுமென்று நடுவிற்போடு, மாணவே பொட்டதிலே பஞ்சநூலால் மகிமையாய்ச் சுற்றிநல்ருய்க் குளிசம்ஆடே.......................................... (௫௫)

இதுவுமது

ஆடுகிற உழுந்தோடு அரிசிப்போட்டு அச்சமறசமைத்து ஒருபாண்டந் தன்னில், வாடுகிற எருக்கிலேயில் சாதம்வைத்து வளமாக மூவிளக்கு மாவால்ஏற்றி, நாடவே மந்திரத்தால் நூற்றெட்டோதி நயமாக சாந்திசெய்துக்குளிசங்கட்டுப், பாடுகிறதில்லேயந்த பட்சித்தோஷம் பலத்தநோய்ப் பறந்தோடும்வித்தைத்தானே.......................................... (௫௬)

## பறவைதோஷகுணம்

அறுசீராசிரியவிருத்தம்

* குஞ்சியின் உடம்புநொந்துக் குடல் தனில் பாலுந்தங்கா..........................*
நெஞ்சையுஞ்சுழியாய் வாங்கும் நெற்றியும் வலிப்புண்டாகும்..........................*
† துஞ்சிடும்போதுசற்றே துணக்கெனவலித்துச்சீறும்..........................*
பஞ்சின் மெல்லடியிறுளேபறவையின் தோஷந்தானே..........................(௫௭)

* குஞ்சி குழந்தை † துஞ்சிடும் தூங்கும் இம்மூன்று மொழிதொடர்

இதுவுமது

குடித்தபால் எதிரொடுக்கும் குழிந்திடுந் தலையுங்கண்கள் ......................*
அடிக்கடி திடுக்கிட்டேங்கும் அகமதில்தாகமாகும்......................................*
விடுத்திடக்கையில் தங்கா எதிரிளைப்பெடுக்கும்பிள்ளை................................*
கடுத்துடன்வயிறுபோகும் கருதுநீ பறவைதோஷம்............................(ருஅ)

இதுவுமது

## தன்வந்திரி

உச்சிமூளைத்தனைப்பற்றி உடலம் எங்கும் வெதுப்புண்டாம் .................. *
எச்சமாக நாவுலர்ந்து இரண்டுகண்ணும் வெளுப்பெய்தும்.........................*
பச்சைமஞ்சள் முறித்தால் போல் பசும்பொன்னிறமாய் முகமினுக்கும்......*
இச்சைப்புரியுங்குழல் மாதே இதுவேபறவை தோஷமென்றே.............(ருக)
இஃதொன்றுமொருதொடர்

---

பறவை தோஷத்துக்குக் குளிசமுங் கியாழமும்

பறவையின் தோஷந்தீர பயன் உரைத்திடுவேன் இந்த .........................*
துறையைநீகேளாய் ஆலின் துளிர் தனைக்குளிசம் அடித்..........................*
திறமைசிரகம் சருள்ளித் திகழ் வரப்பூலாவேரும்............................ *
உறவதாய்க்காய்ச்சியேதான் உறுபிணிக் * குழவிக்கியே .................. (சுய)
* குழவி - பிள்ளை

இதுவும் பறவைதோஷநிவர்த்தி

## தன்வந்திரி

வருந்தும் வெள்ளைக்குன்றியதை வளமாய்ப்பலியும் பொங்கலிட்டு ............*
மறுத்தசாபம் நிவர்த்திச்செய்து மகிமைவடக்கின் வேர்வாங்கிக் ................*
சறுத்த செவ்வாய் நாளது தான் * கனகமதனிற் குளிசமிட்டுக் ................*
கருத்தக்குளிசமதுகட்டிக் கழிப்புங்கூடக்கழித்திடுமே.......................(சுக)
* கனகம் - பொன்.

## எட்சித்தோஷ குணம்

தேயும் உடம்பு மிகநாறும் செல்வன் முலைப்பால் மறந்திருக்கும் ............*
* தாயைக்கண்டாலொவ்வாது சற்றே வயிறு தானெழுகும் ....................*
பாயும் புலிபோல் பதறியழும் பாலனைக்கண்டால் பார்த்திருக்கும்............*
பாயும்விடையோன் தான் அறியப் பகராய் எட்சித்தோஷமிதே.........(சுஉ)

### இதுவுமது

வித்தாந்தேகமிகநாறும் மெல்லிமுலைப்பால் அருவருக்கும்.........................*
சத்தேவயிறு தான் கழியுஞ் சண்டாளம்போல் சுரங்காயும்.........................*
தத்துந் தாயைக்கண்டாலே தவனம் அதுவாய் சீறி அழும்.......... .. ........*
மற்றுங்கண்ணேப்பிலைசயிசைந்துமண்ணில் புரளும்பாலனதே.............(௬௩).

### இதுவுமது

மண்ணில் புரண்டே * மண்ணைப்போல் மடிந்துமடிந்து தான்புரளும்......*
கண்ணிக்குணமாம் மாந்தமிது தான்சண்டாளசிசுரோகம் .......................*
வெண்ணிவேததன்வந்திரி விளம்பும் இந்நோய்க்கண்டுக்கொள்.................*
என்னிப்பறக்கும்பட்சி யென்ற இயல்பாந் தோஷமிதுதானே ... ........(௬௪)

* மண்ணை - பேய்

### இதுவுமது

#### எண்சீராசிரிய விருத்தம்

போமேதான் எட்சித்தோஷகுணத்தைக்கேளு பேரான உதிரத்தில் சூடுகொண்டு, வாமேதான் மயக்கிவித்துத் தலையெடாமல் வரண்டுமே கண்பீளைக்கட்டிமூடும், காமேதான் உடல்வற்றிக் கனலேமீறுங் கர்மாதிவினையிது தான் சிசுகட்கெல்லாம், ஆமேதான் விதவிதமாய் மேனிவற்றும் ஆசவுநீ எட்சித்தோஷ குணந்தான்பாரோ.............................................................. (௬௫)

## எட்சித்தோஷ நிவர்த்தி குளிசம்

---

#### அறுசீராசிரிய விருத்தம்

தானேசுக்கிரவாரமதில் தனித்த * அசுவகெந்தித்தான்.........................*
மானேகாப்புமீந்திட்டு - ம - ந - சி - வ - ய - வென்றுருவேற்றுப்......... *
பானே நூற்றெட்டுருவேற்றிப் பண்பாய் வடக்கின் வேர்பிடுங்கித்............ *
தேனேபட்டுநூல் குளிசமிட்டுத் தேவிநிறுத்தி அருகில்வையே......... (௬௬)

* அசுவகெந்தி - அமுக்கரா

### இதுவுமது

வைட்யேபூசைநேமமதாய் வாழைக்கனிகள் அதுபடைத்து.....................*
துய்யச்செம்பில் சலமொண்டுத் தோஷநிவர்த்தித் தான்செய்து................ *
தையல்தேவிதனை நினைந்து தண்ணீர் ஓதி தான்தெளித்து...................... *
மெய்க்குளிசந்தனை யெடுத்து மைந்தன் தனக்குக்கட்டிவிடே.... ......... (௬௭)

இவ்வேழுமொருதொடர்

### இதுவும் எட்சித்தோஷ நிவர்த்தி வேறு

## குளிச்சமும் குளிப்பாட்டவும்

எண்சீராசிரிய விருத்தம்.

வேலமரப்புமுக்கூட்டில் கன்னிநூல் சுற்றி விளங்கு மஞ்சள் அறுகுமி ந்தூபஞ்சாட்டிச், சாலவுமே முக்குளநீர் மந்திரித்துத் தலைமீதேசொரிகறிய ஆலம்விழுதைப், பாலனுக்குக் குளிசங்கட்டிக்கோழிப் பலிகொடுத்துந்தலைச்சு ற்றி அப்பால்போட்டு, மேலுக்கு நிலவிளா ஆதல் வில்வ இலையாதல் போட்டு க்குளிப்பாட்டநன்றே.................................. .................... (௬௮)

எட்டுவகைப் புள்ளின் பெயர்

### கூறுகின்றார்

அறுசீராசிரிய விருத்தம்

வீங்குப்புள் தூங்குப்புள்ளும் விளக்கொளிக்கணன் வெங்கண்ணன்......... *
தீங்குசொல் கருடக்கண்ணன் செங்கணன் வரட்புள்தோஷம்................. *
பாங்குடன் தொடுபேய்ச்கண்ணன் பட்டதோர் எட்டுப்புள்ளும்.................*
ஈங்குள்ளக் குணங்கள் கண்டால் இன்னமும் இசைக்கின்றேமே.........(௬௯)

## வீங்குப்புள்ளின் தோஷகுணம்

உச்சியுங்குழிந்துநாவு உலர்ந்திடும் உவாந்திப்பண்ணும் ......................*
பச்செனமலமுந்தானும் பாலதுபோல ஆகும் ................................. *
பிச்சுடன் எடுக்கும்பாலும் பின்னையால் முகந்துடைக்கும்......................*
நிட்செயம்வீங்குப்புள்ளின் நிகழ்குண மென்று சொல்லே....................(௭௰)

## வீங்குப்புள் தோஷத்துக்குக் குளிகை

வேறு

மதுரமுத்தம் அதிவிடையம் மானேகடுக்காய் மாவசம்பு.........................*
உதிருந்தேவதார மஞ்சள் உடனேவகைக்கு ஓராளவாய்...... .......................*
அதிருங் குறிஞ்சிப் பொடுதலைச்சாறதனு லரைத்து உண்டைசெய்து.........*
சதிரமுலைப்பால் தன்னிலிடதணியாதோஷந் தணிந்திடுமே................(௭௧.)

இம்மருந்து சகலதோஷத்திற்குமாகும்

## தூங்குப்புள்ளின் தோஷகுணம்

வாங்குத்தாகம்நீர்குடிக்கும் வயிறுங்கழியும் வாந்தியுமாம்.......................*
பாங்காய்த்திரும்பிமுகம் பார்க்கும் பயமாய் அழுது வீரென்னும்................*
தூங்கித் * துஞ்சிப்பாயல் மிசைச் சோர்ந்தே யலறியெழுந்திருக்கும்.........*
தூங்குப்புள்ளின் தோஷமெனச்சொன்னார் அரனார் தோகைக்கே.........(எஉ)

* துஞ்சி - சோம்பி

இதுவுமது.

அரண்டெழுந்திருக்குஞ்சோரும் அநுர்திய எல்லாம்கக்கும்...................*
இருண்டிடும்கண்கள் தானும் இமையின்மேல்சொருகிக்கொள்ளும்............*
முரண்டெழும்வீரிட்டேதான் மூர்ச்சமாய்ப் பல் கடிக்கும்.........................*
சுருண்டுதான்கிடந்தோக்கும் தூங்குப்புள் தோஷந்தானே...............(எங)

இதுவுமது

## தன்வந்திரி

ஓமிம் உறக்கம் மயக்கமுடன் ஓகோ உவாந்திவயிறிழியும்.........................*
பாடுஞ்சிரசுப்பள்ளமதாய்ப் புாங்காட்மேல் மூச்சேறிட்டு...........................*
வாடும்பாலன் எந்நேரம் வகையாய் அழுகும் முகம்வேறும்........................*
சூடுமலர்வேல்விழியாளே தூங்குப்புள்ளின் தோஷமிதே ...............(எச)

## தூங்குப்புள்ளின் தோஷநிவர்த்தி

தோஷந்தணிய * ரோசினியும் தூவு மஞ்சள் வசம் பேலம்.......................*
வாசவேப்பின் ஈர்க்கோடு வகையாய் ஓமம் விளாவோடு.......... ...........*
பாசமதுவாய் அரைப்பரைத்துப் பாலன் தனக்குமுழுக்காட்டிக் ..................*
கோசமதுவாய் நூற்றெட்டுக் குணமாஞ்சாந்தித்தான்செய்யே............(எரு)

* ரோசினி - கோரோசினி
இவ்விரண்டுமொருதொடர்

இதுவும் தூங்குப்புள்ளின் தோஷநிவர்த்தி

*வவ்வால்சிறகுநன்னில் ஊமத்தின் அறுகம் வேர் சுருட்டிச் ......................*
செவ்வாய்க்கல்வீட்பெண் நூற்றநூலால் சிறகுதனில்சுற்றிக்... ..............*
கவ்வாய்ப்புனலும் சொரிகுளிசம் கட்டிக்கோழிப் பலிகொடுத்து................*
நவ்விவிழியாய்க் † கூவிளவேர் நன்றாய் அரைத்துப் புகட்டுசெவே......... (எசு)
* வவ்வால் வெளவால்(சிற்றகத்தியர்) போலியெழுத்தைப்போற்றுதல் கடனே. † கூவிளம் வில்வம்.

## விளக்கொளிக்கண்புள்ளின் தோஷகுணம்

குடித்தப் பால் எடுக்கும் மெய்யும் கூர்மையாய்க்காயும் ஓயும் ……………*
அடிக்கடிக்காயும் அன்றி அரிய தாய்ச் சிந்தைநோக்கும் ……………*
பிடித்துநல் முலை உண்ணுதப் பெருவிடாய்க் கொண்டுச்சோரும்……………*
விடுத்திடும் எழுந்தநோய்தான் விளக்கொளிக்கண்ணன் தானே……………(எஎ)

### விளக்கொளிக்கண் புள் தோஷநிவர்த்தி

வெண்பா

சின்னிவசம்புள்ளிச் சிறுவிளாதான் நாலும்……………*
நன்னு வேமுடிந்து நற்சிலைத் - தன்னுலே ……………*
மார்பில்படக் கட்ட வாராது தோஷமெல்லாம்……………*
காரிழையாய்ச் சொன்ன திதைக்காண்……………(எஅ)

## வெங்கண்புள்ளின் தோஷகுணம்

அறுசீராசிரியவிருத்தம்.

வெளுச்செனக் கழியும் பால்போல் விளர்மெய்த்துவண்டுக்காயும்……………*
குளுக்கென இளைச்சல் உண்டாம் குடித்தவ் வண்ணம்பேதிக்கும் ……………*
அளித்திடும் வயிற்றின் உள்ளே ஆனதோர்வலியும் ஆகும் ……………*
வெளிப்படை ஆமே என்றில் வெங்கண்ணன்குணமும் ஆமே……………(எகூ)

### வெங்கண் புள் தோஷ நிவர்த்தி

வெண்பா

* கன்னி அன்னம் தன்னுடனே கடுக்காய்ப் பொடிச்கூட்டி……………*
உன்னிதமாய்த் தான்பிசைய ஊறுநீர் - மின்னேகேள்……………*
திப்பிலித்தூள் இட் டருந்த சேர்ந்தசிறுவோர்க்கு……………*
ஒப்பில்லா தோஷமெலாம் ஓடும்……………(அ௦)

* கன்னியன்னம் - கற்றுழஞ் சோறு

## கருடக்கண்புள்ளின் தோஷகுணம்

அறுசீராசிரியவிருத்தம்

புதுப்புனல்வடிந்துக்கொன்டு புகழ்முலைப்பாலெடுக்கும்……………*
எதுப்படக்கண்ணுந்தாழும் இருப்பக்கம்பீளைக்கட்டும் ……………*
முதிர்ப்பிள்ளைப்படும்பாடாக முந்தியேபற்றிநிற்கும்……………*
விதத்தினைக்கருடக்கண்ணன்மிகுத்திடுந்தோஷந்தானே ……………(அக)

கருடக்கண் புள் தோஷத்துக்கு

## மருந்து

வேறு

தனியுங்கோரோசினையுடனே சாற்று மதுரந்திப்பிலியும்……………………*
கனிவாட்பெண்முலைப்பால் தன்னில் கலந்தே அரைத்து ஒருச்சங்கு…………*
பிணியாங்குழவிக்கிடும்போது பெரும் அதிநகதோஷமெலாம்…………………*
பிணியுந்தணியுமென்றேதான் பேதைக்கரனு மொழிந்தனரே…………(௮௨)

இம்மருந்து சகலதோஷத்திற்குமாகும்

## செங்கண்புள் தோஷகுணம்

---

சிவந்து கண்ணீர்ச்சொரிந்து சிரங் குளிர்ந்திருக்கும்வெப்பி ………………*
தவழ்ந்துபோய் நிலத்தில் வீழ்ந்து தடக்கையால் முகந்துடைக்கும் …………*
விவர்த்தியாய் அழுதபாலன் வெப்புநீராய் பேதிக்கும் ………………………*
சிவந்தநோர் குணங்கள் கண்டால் செங்கண்புள் தோஷமாமே…………(௮௩)

செங்கண் புள் தோஷத்துக்கு

## எண்ணெய்

வேறு

மொழியுமதுரம் சீரகமும் முத்தம் ஏலம் பத்திரிக்காய் ……………………*
பொழியும் கிராம்பு சண்பகமும் பொன்னே லவங்கப்பட்டையுடன்…………*
கிளிசேர் மொழியாய் விருகன் எடை கேளுமுசுக்கைபிலே நன்றாய்த் ………*
தெளிபுங்காணிசிறுகீரைச் சீந்தில்வேரும் பலமொன்றே………………… (௮௪)

இதுவுமது

பலமேசொல்லும் சருள்ளிப் படிகால் சாறுக் காரியின்வேர் ………………*
வளமாய எண்ணெய் இரண்டுபடி வாகாய் இவைகள் கலந்தடுப்பில்…………*
நலமாய் எரித்துக் குழவிகட்கு நன்றாய்ச்சங்கு புகட்டிடவே ………………*
வலுமையானபிணிதோஷம் வாராதென் றுவகுத்தனரே…………………(௮௫)

## வரட்புள்ளின் தோஷகுணம்

உடலதுவரண்டுமெத்த உறங்கிடுமேனிவற்றும்……………………………*
கடல் இரைந்தாற்போல்நந்தங் கறுதறு என்றேமீறி ………………………*
திடமுடன் நாவரண்டு திக்கெங்கும்பார்த்திருக்கும்…………………………*
விடம்து போலகாயும் விரண்டிடும்வரட்புள் தானே …………………(௮௬)

இதுவுமது
வேறு

வேப்பம்பூப்போல்வயிறுரும் விடாதவெப்புத் தலைவலியும் ..............*
பூப்புனல் * மாந்திப்புறங்கையால் பொருந்தமுச்சையே நடைக்கும் .........*
கோப்பாய் நாவுவரண்டு சலங்குடிக்கக்கண்டேப்பறதவிக்கும்...................*
சேப்பங்கயத்தின்முகமாதே செப்பாய்வரட்புள் தோஷமிதே................(அஎ)

* மாந்தி - குடித்து

இதுவுமது

தன்வந்திரி

வேறு

பாலகன்மேனிவாடிப் பசலைவாய் விழிகள் நீராய் ..........................*
சீலமாய்விலாகுளிர்ந்து சிறும்பால் எதிர் எடுக்கும் ..............................*
கோலமாய்க்கண்குழிந்து குணமதுபலவேசெய்து......................................*
மாலுறவயிறுபோகும் வரட்புள்ளின் தோஷந்தானே .....................(அஅ)

இதுவுமது

கழித்தபின்புமேனிவற்றிக் கண்ணின்மணிகள் நீர்கலங்கித்...................*
துளிர்த்தத்துளிராய்க்குளிர்ந்துமிக தொண்டைநாவுமிகவரண்டு..............*
வழுத்தவேப்பம்பழச்சாற்போல்வயிறுபோம்விடாதலையசைக்கும்..............*
அழுத்த உடம்புமிகவெதும்பும் ஆன்குரல்போல் வேற்றுக்குரலே .........(அகூ)

இதுவுமது

குரலேகையால் முகந்துடைக்குங் குழறிப்புறங்கையாலுந்துடைக்கும்.........*
வரலே நாவுமிகவரண்டு வாயால்குடிக்க மிகதவிக்கும்...........................*
அரலே அஞ்சித்தானழுகும் அன்னத்திரோஷவிடாய்ப்போலே.....................*
எரலே இந்தகுணங்கண்டால் என்றேம் வரட்புள் தோஷமென்றே ...... (கூ௰)

வரட்புள் தோஷ நிவர்த்தி குளிசம்

மென்றேவட்ட * நரிவிரட்டி வியாழந்தன்னில் காப்பிட்டு......................*
துன்றுஞ்சேவல்பலிகொடுத்து தோஷந்தீரவெணப்பணிந்து ...................*
குன்றின்மஞ்சள் அஞ்சோதிக் குழைந்தைத்தாயைக் குளிப்பித்து...............*
மன்றில்வேரைப்பிடுங்கிக்கட்ட வரட்புள் தோஷம்போய்விடுமே.........(கூக)

வட்ட * நரிவிரட்டி வட்டக்கிலுகிலுப்பை
இந்தான்குமொருதொடர்

## அந்திப்புள் தோஷகுணம்

பாலகன்மேனிவாடி பசைந்து கண்விழித்துப்பின்னும் .................... *
சீல கை கால் குளிர்ந்து சிறுப்பால் எதிரெடுக்குந் தம் .................... *
மேலெல்லாம் நரம்புந்தோன்றி மேனியும்வெளுத்துங்காயும் .................... *
ஆலமேயுண்டகண்ணே அந்திப்புள்தோஷந்தானே .................... (கஉ)

### அந்திப்புள்தோஷநிவர்த்தி

வருந்துந்தூவாலை தின்றசேறு மானேசின்னி விளாநொச்சில் .................... *
பருக்குஞ்சிந்தில் தான்வெப்பு பெபரநாக்கி வசர்புள்ளி .................... *
நொருக்கத்துவளைத்தாளிடித்து தவ சேர்க்கண்டங்கால் தன்னில் .................... *
மிருக்க முடிந்து கட்டிடவே விரைந்துதோஷம்போயிடுமே .................... (கங)

## நீர்ப்புள்தோஷகுணம்

---

நெஞ்சுவரண்டு கண்குழிந்து நீடிப்பெருமூச்சுண்டாகி .................... *
பஞ்சுப்போலே கண்வெளுத்துப் பாலுங்குடியாதேயலறி .................... *
குஞ்சாதிரவுபகலுந்தான் சுருங்கப்பண்ணிமிகவேர்க்கும் .................... *
செஞ்சொற்கிளியே மொழிமாதே செய்யநீர்ப்புள் தோஷமிதே ............ (கச)

### நீர்ப்புள் தோஷநிவர்த்தி

எண்சீராசிரியவிருத்தம்

பச்சை சாத்திதனிலே ஹ்ரீங்காரஞ்சொல்லிப் பாங்குடனே பிடித்துவந்து மஞ்சள் நூல்சுற்றி, அச்சமறப்புறமடைநீர் வழுதரஞ் சொரிந்தழகான செஞ்சேவல் பலிகொடுத்து, நிட்செயமாய் இயந்திரம் கட்டத்தீரும் நிகரானமருந்ததனை பிடுங்குங்காலே, வெச்சனவிட்டுஞ்சாரத்தை * சிரங்கூட்டி வேறெநீக்கொடுத்திடவே வியாதிபோமே .................... (கரு)

* சிரம் - சிரகம்

### இதுவும் நீர்ப்புள் தோஷநிவர்த்தி

## தன்வந்திரி

அறுசீராசிரியவிருத்தம்

தோதமுசுலைக் கொழுப்போடு தூருவவட்ட துத்தியின்வேர் .................... *
மாதேயிதனைக் குளிசமிட்டு மருவப்போட்டுக் கட்டினபின் .................... *
ஓதிதோஷமந்திரத்தால் ஒருநூற்றெட்டுச் செபித்திடுவாய் .................... *
பாதேநீர்ப்புள் தோஷமது பயந்துபறந்து ஓடிடுமே .................... (கசு)

## புள்ளின் தோஷகுணம்

---

உச்சிக்கண்ணுந்தான்குழியும் உண்ணும்பாலுந்தங்காது ........................*
பச்சைநிறம்போல்வயிறுவிடும் பறவைக்குரல்போல்சீறியழும்......................*
* எச்சம் இளைக்குந்தன்னிளா எடுத்துக்குடிக்கும் மெய்மறக்கும் ............ *
கச்சையணிந்தமுலைமாதே காணும்புள்ளின் தோஷமிதே....................(கூஎ)
* எச்சம் பிள்ளை

### புள்ளின் தோஷநிவர்த்தி

புள்ளின் தோஷம் தீர சிறு புள்ளடிவேர்க்குளிசஞ்செய்து .....................*
மெள்ள ஒரிதழ் தாமரையும் வெந்தயமுடனேவிடத்தேரும் ......................*
எள்ளத்தோரளவாய்மிளகும் இசமாயதனைக்குடிநீராய்..............................*
உளத்தோர்மனதாகியநீர் உண்டிடநன்றென ஓதுமிதே...................(கூஅ)

---

பக்ஷி - பறவை - புள் - இம்மூன்றும் - ஒருபெயராயினும்;

பக்ஷியென்பது - கழுகு, நாரை, முதலாயின.

பறவையென்பது - புருமுதலாயின.

புள்ளென்பது - காடைமுதலாயினவு மெனக்கொள்க, [அன்றியும்] அந்தியிற் சிலும்பும் சிலபக்ஷி, சந்தியிற்சிலும்பும் சிலபக்ஷி, [அங்ஙனம்] என்வகைப்புட்குணங்களைச் சொல்லுமிடத்து.

வீங்குப்புள்-கழுகு, நாரைமுதலாயின, பார்ப்புப்படுங்குணம்போல, பிள்ளையுடல்கனக்கும்.

தூங்குப்புள் - கொக்கு முதலாயின பார்ப்புப்படுங்குணம்போல பிள்ளைக்கண்ணையாய்த்தூங்கும்.

விளக்கொளிக்கட்புள் - காடை, கரடமுதலாயின பார்ப்புப்படுங்குணம்போல பிள்ளை விளக்கைநோக்கா

வெங்கட்புள் - ஆந்தை முதலாயின பார்ப்புப்படுங்குணம்போல, பிள்ளைப், பகலைநோக்கா.

கருடக்கட்புள் - நாமனத்திமுதலாயின, பார்ப்புப்படுங்குணம்போல, பிள்ளை வயிறுந்தலையுங் கனத்துக்கழியும்.

செங்கட்புள் - குயில்செம்போத்து முதலாயின, பார்ப்புப் படுங்குணம்போல பிள்ளைக்கண்ணுந் தேகமுஞ்சிவக்கும்.

வரட்புள் - சாக்குரீஇமுதலாயின பார்ப்புப்படுங் குணம்போல பிள்ளை உடலி ளைக்கும்

பேய்க்கட்புள் - கோட்டான்முதலாயின பார்ப்புப்படுங்குணம்போலப் பிள்ளை யரற்றும் எனக்கூறுப)தாய் தந்தையிருவரால் பிள்ளைக்குவந்தநோயை பட்சிகளின் ஞேஷமென அந்நோய்களின் குணக்குறிக ளறியும்பொரு ட்டுவமித்துக்கூறினர்.

இதற்கு மேலிட்டக்கருத்து மேலோர்க்கே) இப்பட்சியின் ஞேஷ குணத்தையும் (உஉசு)ஞ் செய்யுளிற்சொல்ன கர்ட்டமாந்தஜுணத்தையும்பார்க்க.

---

## புருஷ தோஷகுணம்

---

தன்வந்திரி

போமே உச்சிக்கண்குழியும் பொருந்துன் பாலுந் தங்காது.................*
போமே வயிறுபச்செல்றுப் பொருமியழுகும் பறவைகுரல் ................*
நாமேகுறுகும் ஒருவேளைத் தனியே தனியே சீறியழும்......................*
காமேகறுத்தக்குயிலாளே கருவால்புருஷ தோஷமிதே.................... (கக)

புருஷ தோஷ நிவர்த்தி

எண்சீராசிரியவிருத்தம்

புருஷனென்ற உடும்பினுடநாக்குவாங்கிப் புகழான எருக்கனுர்க்குளி சமாடிப், புருஷனென்ற தாம்பூலமுன்னே வைத்துப் புதுமையாய்ப்பூசைசெ ய்யச்சொல்வேன்கேளு, புருஷனென்ற நயவசிம நூற்றெட்டோதி பூமாலையா ய்ப் பாலகர்க்குக்கட்டுக்கட்டு, புருஷனென்ற குழைந்தைகட்குக் கட்டும்போது புகழ்பலி ஒறுன்கொடுக்க தோஷம்போமே.................................. (ர)

இவ்விரண்டு மொருதொடர்

## பெண்ணின் தோஷகுணம்

---

அறுசீராசிரியவிருத்தம்

நெஞ்சுவரண்டு கட்குழிந்து நீடும்பெருமூச்சுண்டாகிப் ........................*
பஞ்சுப்போலே கண்வெளுத்துப் பாலுங்குடியாதேயலறித் .....................*
துஞ்சாதிரவும்பகலுந் தால்சுருங்கித் தேகமுகம்வேர்த்துச் ....................*
செஞ்சொல் மயக்கமுண்டாகில் செப்பும் பெண்ணின்தோஷமிதே...... (ரக)

பெண்ணின் தோஷகுணம்

## தன்வந்திரி

அரிவையர்க்கும் ஆண்பிள்ளைக்கும் அதனில்தோஷமேதென்றால் ............*
கருவாம் அஞ்சுமாதத்தில் காணில் கலந்த தாய்முகத்தை ..................*
பெறுவாள் அந்தப்பிள்ளைக்குப் பேணில்சுளுக்கும் வயிற்றுவலி ..............*
எருது முசமும் பேயின் குணங்கண்டே யறிந்துச்செய்வீரே................ (௱உ)

பெண்ணின் தோஷநிவர்த்தி

எண்சீராசிரியவிருத்தம்.

செய்யவே பஞ்சவண்ண மலரெடுத்துச் சேகரமாய்ப் பஞ்சவண்ணமான அன்னம், ஐயமில்லா ஐந்துவெள்ளிப்பணமும் வைத்து அதனுடன் தீபத்தூபம்நெய்விளக்கு, வைக் * கதலியிலையில் உரு எழுதிதானே வளாதோறுஞ் சாம்பிராணி வர்த்திநட்டு, பொய்யல்லநான்சொன்னேன் பண்டிதர்க்குப்பொதுவாக முச்சந்தி அதில்வைப்பீரே....................................(௱௩)

* கதலி - வாழை

இதுவுமது.

வைத்திடவே தோஷமெங்கே கிரகமெங்கே வலியெங்கே நோயெங்கே பறந்துப்போகும், நைத்திடவே சிசுவுடையப் பருவந்தன்னை நாட்டமுடன் கண்டறிந்து கருத்திற்கொண்டு, மெய்த்திடமாய் வதிஷ்டனைப்போல்பொறுமைபூண்டு மேலானபத்மகுணஞ் சாருவோர்க்கு, பைத்திடவே மோட்சமுண்டு நரகம்போச்சுப் பாதகருக்கிந்நூல் தான்கிட்டிடாதே....................(௱௪)

இம்மூன்று - மொருதொடர்

இதுவும்பெண்ணின் - தோஷநிவர்த்தி - வேறு

குளிசமும் - குடிநீரும் - கைகாலிற்கட்ட

## மருந்தும்

பாவையின்தோஷந்திர பரித்திவேர்க்குளிசமாடி ...........................*
பூவைகேள் கஞ்சாங்கோரைப் புனலினிற் காய்ச்சியேதான் ....................*
தேவைநீ குடி கேள்சின்னி சிறுவிளா வசம் போடுள்ளி .......................*
மாவைசிலையில் முடிந்து மாறு கை காலிற்கட்டே..........................(௱௫)

இஃதொன்று மொருதொடர்

முட்டுத்தோஷகுணம்

## தன்வந்திரி

அறுசீராசிரிய விருத்தம்

போமென்றங் குழைந்தை மேனிப் பொன்னிறம் வாடிவேறாய் ...............*
தாமென்ற வயிற்றில்பாலுந் தங்காமல் வாயால்போகும் .......................*

நாமென்றக் கண்குழிந்து நாக்கு வாய்க்கருகித்தோன்றும் ........................*
காமென்ற மாதவிடையின் கன்னியொடுத்தக்கூறே........................ (ரசு)

முட்டுத்தோஷ நிவர்த்தி

---

எண்சீராசிரியவிருத்தம்.

கூறானமுன்மந்திரத்தினாலே குளிர்ந்த சலமொண்டுவேப்பிலையாலோது ...*
ஊரான தாய்ப்பிள்ளையிருவருக்கும் ஓதியேயிருவேளைச்சார்த்தி செய்நீ.........*
சீரானதிப்படியே ஏழுநாள்செய் சிவசிவாபறந்தோடுந்தோஷந்தானும்.....*
வேரானமந்திரமேயதில்வேறில்லை வெகுவானநோயெல்லாம் ஓடிப்போமே.()

## குளிர்தோஷகுணம்

---

அறுசீராசிரியவிருத்தம்

உச்சிபுங்குழிந்திருக்கும் உயர்விழி வளையமாகும்................ ..................*
மிச்சமாய் வாந்திசெய்யும் வேர்வையுமிகவே காணும் .......................... *
பச்சுப்பச்சென்றுதானும் பலபலவண்ணமாக..........................................*
எச்சமாய்க்கழிச்சலுண்டாம் இது குளிதோஷந்தானே.........................(ரஅ)

இதுவுமது

## தன்வந்திரி

---

வேறு

பாரோ உச்சிக்கண்ணிரண்டும் பரிவாய்ப்பள்ளம்வீழ்ந்திருக்கும் ...............*
சாரோகழிச்சல் மிக உண்டாம் தணல்போல் தேகம் மிகக்காயும் ...............*
வாரோக்குப்பிம்புண்ணுகும் வளமாயுடலுமிகவற்றும் .............................*
மாரோ துன்பமிகப்படும்பார் மனையாள் குளித்துக்கண்டதுவே ............ (ரக)

இதுவுமது.

வேறு

தண்ணீர்க்குடிக்குந்நெஞ்சலரும் தளர்ந்துபிள்ளைத்தான் உலரும் ...........*
கண்ணீர்ச்சொரியுங்கால்வீங்கும் கழியுஞ்சத்திமிகவுண்டாம்.....................*
அம்மனமேநீ அஞ்சாதே அறிந்துசொன்னேன்குளித்தோஷம் ..................*
பெண்ணேசுடலைவிடத்தலைவேர் பிடுங்கிக்கட்டுப்புகழ்பெறவே ...........(ரய)

குளிதோஷநிவர்த்தி

## தன்வந்திரி

எண்சீராசிரியவிருத்தம்

தோஷமிதுநமுதானைழக் குட்டிவிளாவேம்பு சோம்பு மஞ்சள்வசம்பு—மிளகுக்குக்கூட்டி, வாசமிது அரைப்பரைத்துவைத்துக் கொண்டுவோகையிலேபோட்டுநீர்க்காய்ச்சியேதான், நேசமிதுதாய்ப்பிள்ளையிருவருக்குந் தேய்த்துமேழுக்காட்டிச்சொல்லுவேன்கேள், பாசமிதுமுக்கிணற்றின் தண்ணீர்மொண்டுப்ப சுமஞ்சள் அரைத்ததிலேகலக்கிடாயே..................................(௱௰௧)

இதுவுமது.

கலக்கிடாய் மங் ஸ்ரீயும் ஐயும் சவ்வும் கண்மணியே அறுநாலே நூற்றெட்டோதி, வலக்கிடாட்மேல் தெளித்துக்கடுகவாருவாசமுறுந்தேகமோபசும்பொன்வீசும், அலக்கிடாய் சூரிவேர்ப்பிடுங்கிவந்து அப்பாகப்பஞ்சநூல்குளிசமாடி, வலக்கிடாய் பாலனுக்குக் கட்டிப்போடு மகத்தானகுளிர்தோஷம்பறந்துபோமே..................................(௱௰௨)

இவ்விரண்டுமொருதொடர்.

இதுவுங்குளிதோஷநிவர்த்தி

குளிதோஷந்தான் திரசுடலைதன்னில் குளித்துமுளைத்தறுகம்வேர்க்குளிசமாடி, புளிதோஷந்தனையகற்றிக் கீழ்க்காய்நெல்லிப் பு ழும்மாம்பச்சரிசிப்புள்ளினோடு, வள்ளிதோஷந்தனையகற்றும்வசம்பு உள்ளிவள்சாறுகொடுத்துமேல்துவாலைசெய்யச், குளிதோஷம் வாந்தியொடுதாகந்திருங் குறுமுனிவனுரைத்தபடிக்கூர்ந்துசெய்யே..................................(௱௰௩)

இதுவுங்குளிதோஷநிவர்த்தி

கேளுநீகருடனுடக்கூட்டுக்குள்ளே கிடந்ததோர்முட்டைத்தோடெடுத்துவந்து, ஆளவேசுட்டதனைச்சாம்பலாக்கி அழகாகருவழுந்தைகட்குத்தில தம்போடு, வாளவேமுன்கூட்டைச்சுட்டச்சாம்பல் மைந்தனுக்குநெற்றிபிடமயக்கந்தீரும், தாளவேகுளிதோஷம் பக்ஷித்தோஷம்தான்பறக்குந்தப்பாது நனித்துச்செய்யே..................................(௱௰௪)

இதுவுங்குளிதோஷநிவர்த்தி

சொரிந்தாவின்நெய் உரியில் நல்லெண்ணெய்ப்பாதி சுகமானநன்றாறித்தண்ணீர்விட்டான், கரந்தைபொன்னாங்கண்ணியுமே பலமொன்றுகக்கழுஞ்சுஏலரிசிச்சிரசமுங்கூட்டிப், பொருந்தவே ஆவின்பால்வார்த்தரைத்துப் புகழுடுப்பில் ஏற்றியே காய்ச்சிக்கொண்டு, திருந்தவேகுளிதோஷம்போவதற்கு சிறுகரண்டிப்புகட்டிடவேதெளியுங்காணே..................................(௱௰௫)

## இதுவுங்குளிதோஷநிவர்த்தி

---

### அறுசீராசிரியவிருத்தம்.

ஓமந்தண்ணீர்காட்டாத்தி உயர்ந்தபரித்தியற்றம்வேர் ........................*
அமேகுளிசமதுகட்டி அன்பாட்சொரியுப்புறமடைநீர் ...... ........................*
போமேகோழிப்பலிகொடுத்துப் புறமாட்சுற்றிப்போட்டாற்கால் ...... .....*
தாமேகுழவிபிழைக்குமென் றுத்தையற்கரனுர்சாற்றினரோ...............(௱௰௬)

## இதுவுங்குளிதோஷ நிவர்த்தி

வேப்பங்கொழுந்துப் பிடி யொன்று மிளகுபத்து வசம்பு சுக்கு ..............*
வாப்பமலையைத் தான் தாங்கி வளமாய் சமனுப் அரைத்திட்டு..............*
பாப்ப அதனை வடித்திட்டுப் பாங்காயுளளே புகட்டிடவே....................*
வாய்த்ததோஷங் கழிச்சல்களும் வயமாய் நிற்குங்கண்டாயே............(௱௰௭)

## குளித்தப்பெண்கண்ட தோஷகுணம்

## தன்வந்திரி

---

தாயின்முலையில்வாய்வைக்குஞ் சற்றேயுண் ணுந்திகைத்திருக்கும் ............*
தேய்வாய்தேயும்மெய்வேர்க்கும் சிறுகவெதும்பும்வயிறுளையும்....................*
சாய்வாய் உறங்குஞ் சந்திக்கும் சற்றேசென்றால் * விரோசிக்கும்...............*
பேய்நோய்க்கொண்டதல குளித்தப்பெண்ணுள் கண்டதோஷமிதே... (௱௰௮)

* விரோசிக்கும் - பேதிக்கும்

## குளித்தப் பெண்கண்ட தோஷ நிவர்த்தி

---

கணமாயிதனைக் கண்டுணர்ந்து காலமாலை யிருவேளை .........................*
குணமாயோது சடாட்சரத்தைக் குருநீர் அதனை மேல்தெளிக்க...................*
வணமாயிந்நோய் வர்க்கமெலாம் மாறிப்போகும் இதுதன்னுல்................*
தினமும் வேண்டாம் மூவைந்து தினந்தான்தெளிக்கநோய்போமே...(௱௰௯)

இவ்விரண்டு மொருதொடர்

## குளித்தவள் எடுத்த தோஷகுணம்

மதலையின்மேனிவாடி வயிற்றினில் பாலுந்தங்கா....................................*
சதலையிற்குழியுண்டாகி சத்தியும் எடுக்குநீராய்....................................*
* நுதலினிற்சலமுநண்ணி நோக்கியவிழியுந்தாழ்ந்து................................*
குதலைவாய்க்கருகித்தோன் றுங் குளித்தவளெடுத்தக்காலே...............(௱௨௰)

* நுதல் - நெற்றி.

இதுவுமது.

பாலகன்பவளவாயிற் பனியென வேர்க்கும் மூக்கும் ............ ............*
ஆலகண் வளையமாகும் அடிக்கடி வயிறுபோகும் ..............................*
காலதுபின்னிக்கொள்ளுங் கதரியே யலறிச்சீறும்..............................*
சீலமாய் விழித்துத்தாவுந் தீதவளெடுத்தக்காலே ......................(௱உக)

---

குளித்தவளெடுத்த தோஷநிவர்த்தி குளிசம்

எண்சீராசிரியவிருத்தம்

ஆரியதோர் இன்னமொருகிரியைகேளு அழகானபாலனுமேமெலிந் துவாடில், சீருடனேமாந்தகணதோஷமெல்லாந்தெறிப்பட்டுப்போவதற்குசே திக்கேளு, வேருவசைதூதுவளைக்குப்பைமேனி விளங்குகின் றக்குருவிச்சித்தும் பையோடு, நீருடனேயிவ்வேருகொண்டுவந்து நிட்செயமாய்க்குளிசம்நீ நிகழ் த்திக்கட்டே ............................................................(௱உஉ)

இதுவுங் குளித்தவளெடுத்த தோஷநிவர்த்தி வேறு குளிசம்

கட்டுவாய் திருகுகள்ளி வடக்குவேரைக் காப்பிட்டு ஞாயிறுநாட் பிடுங் கிவந்து, சுட்டுவாய்க்குளிசமுடன் நீர்ச்சொரிந்து சுகமாகக்கட்டிடவே நோய்க ள்தீரும், மட்டாக மூன்றுநாள் நீர்ச்சொரிந்து மதலைக்குச்சார்ந்திசெய்ய மயக் கந்தீரும், தொட்டிருந்த தோஷமெல்லாந் துடித்தே யோடுஞ் சொன்னபடிக் குளிசமு நீர்ச்சொரிந்திடாயே ..................................................(௱உங)

இக்கிரியை மாந்தகண தோஷத்துக்குஞ் செய்க

## கர்ப்பம் அழிந்த தோஷகுணம்

---

அறுசீராசிரியவிருத்தம்.

குடித்தபாலுந்தங்காது குஞ்சியுடம்புமிகநொந்து..............................*
மிடித்த நெஞ்சுயர்ந்தண்ணுந்து மிகவே நோகுஞ் சடநாறும் ..................*
படியுங் கைகால் அழுக்கேறிப் பதைத்து வருத்தப்படுமானால்..................*
துடிக்குச் சமனும் இடையாளே சொல்லாயழிந்தோஷமிதே ..........(௱உச)

இதுவுமது

காலும்பின்னும் உடம்பிளைக்கும் கழியுஞ்சத்திமிகவுண்டாம் ................*
மேலுஞ்சிவக்கும் உடல் நாறும் விழியுஞ்சொருகிமிகமயக்கும் ................*
வேலுஞ்சேல்போல்விழியாளே வில்போல் புருவமுடையாளே.................*
கேளுமிந்தகுணங்கண்டால் கெர்ப்பம் அழிந்ததோஷமிதே ............(௱உரு)

### *கர்ப்பம்அழிந்த தோஷநிவர்த்தி குளிசமும் குடிநீர்

கெர்ப்பமழிந்ததோஷத்தின் கிலேசந்நிரக்கிரியைக்கேள்.........................*
கர்ப்பர்காட்டாத்தியின்வேளைச் சதிக்கவே குளிசஞ்செய்து.........................*
அப்பப்பரித்திவேர் அரைத்து அருந்தக்குளிர்ந்ததண்ணீரா .........................*
கற்பப்பனையின்வெல்லமாதங்களைத்துதிரில் கொடுத்திடுமே...........(௱௨௬)

## தேரைத் தோஷகுணம்

———

தேனேர் மொழியாய்நீகேளாய் தேரைக்குணந்தான் இயம்புகிறேன் .........*
ஊனைவற்றியுடம்புலரும் உயர்ந்தே நெஞ்சு தான்கூடும் .......... .........*
காலேகண்ணும் பொடித்திருக்கும் கையுங் காலுஞ்சுரிமுடக்கும் ................*
மாலே வயிறுபுடைத்திருக்கும் மலமுந்தீயும் வாயுலரும்..................(௱௨௭)

### இதுவுமது

உலருந்தண்ணீர் தாகிக்கும் உந்திமலரும் குரல்வேறும்.........................*
மலர்ந்த தாமரைப்போல் முகமும்வாடி யொடுங்கிச்செவி தாழும் ...... .....*
முலையின்பாலும் உண்ணுது மூச்சுவாங்கும் இதுதிர.................................*
பலருஞ் சொன்னார் என்றால் * பழிச்சேதென்றுக் கேட்டிடுமே......(௱௨௮)

பழிச்சல் - துதித்தல்

### இதுவுமது

காலுங்கையுமிகவற்றிக் கட்டிப்போட்டால் போல்பிள்ளை ...................... *
மேலும் வற்றிவெளுப்பிட்டு வேறேகுணமாய்க் குரல் நெறித்து ................ *
சாலமுலைப்பால் குடித்தாலுஞ் சற்றுந்தேறுதிருப்ப தெனில் ................ *
நீலவட்டமுலைமாதேநிசமாம் தேரைத் தோஷமிதே...................... (௱௨௯)

### தேரைதோஷத்துக்கு

## மருந்து

### ஆசிரியவிருத்தம்

புள்ளடிச்சிறுகீரைநீராரைதன்னுடன் புகழ் காணி நீர்முள்ளியும் ............*
பொய்யாமல் இவ்வகைசமூலமுடனே களா * புனமல்லிக்குமிழ் † நிலியும்... *
மெள்ள வரு கரிசலாங்கண்ணியுடனே முடக்கொத்தானும்வேர் சமனதாய் ...*.
முந்நாழிநீர்தனை நாலிலொன்றாகவே முதல் பாகமாயிறக்கி......................*
மெள்ள அதிமதுரமும் திப்பிலிபிறேறுடேலம் மிளகுவகைக்கால் பலமதாய்...*
மென்பசும் பால்விட்டரைத்துக்கலந்துமே யிருநாழிநெய்யிலுடனே .........*
உள்ளபடிநன்றாய் எரித்ததைவடித்துபின் உரைத்திடுகரண்டி யளவாய்.........*
உண்டிடக்குளி தோஷந் தேரையின்தோஷமுடன் ஓடியேபோய்விடுமதே(௱௩௰)

* புனமல்லி - காட்டுமல்லி † நீலி - அவுரி

சகலதோஷ நிவர்த்தி

## தன்வந்திரி

எண்சீராசிரியவிருத்தம்

நிமையான தோஷசர் வாங்கமெல்லாம் நிமைப்போதில் திருதற்கு மூலஞ்சொல்வேன், வமையான - வ - ந - சி - ம - ய - என்றுதானே வங்- சிங்- என்று சி - வ - ய - ந - ம என்ன, துமையானதோஷநிவர்த்தித்தாநுச்சுசொல்லவும் போகுமோ சூட்சாசூட்சம், கமையான தோஷநிவர்த்தித் தலுலே கவலை நீக்கிக் காட்சிப் பெறுவாய் தானே ..............................(ாகக)

சகலதோஷத்துக்கும் குளிசம்

கீழ்க்காயினெல்லிவேர் முடக்கொத்தான்வேர் கிருபையுள்ளநாயுருவிகஞ்சாங்கோரை, தாழ்க்காயின் விடத்தலைவேர் நிலக்கடம்பு தழைத்தசிறுபுள்ளடி பேய்ச்சுரையின்வேரும், கோழ்க்காயின்எட்டிவிதவேரு வாங்கிக் குளிசமிட்டுக் குழைந்தைக்குத் தாய்க்குங்கட்ட, ஊழ்க்கான சகலதோஷங்களெல்லாம் ஓடிகடலிற்புக்கும் உண்மைதானே ........................................ (ாகஉ)

தோஷங்களுக்கெல்லாம்

## மாத்திரை

---

எண்சீராசிரியவிருத்தம்

அதிமதுரம் மரமஞ்சள் முத்தக்காசு அதிவிடையம் வசம்பு கடுக்காயும்நல்ல, புதிதேவதாரமெல்லாஞ்சமனுப்சேர்த்துப்பொடிதலைச்சாற்விட்டரைத்துக் குன்றிப்போல, கதிபெறவேயுண்டைசெய்து முலைப்பால்தேனில் கருணையுடனேகொடுக்கமதலைகட்கு, சதியானதோஷமெல்லாம்பறந்தோடி சமுத்திரத்திற்புக்குமெனச்சாற்றினோமே........................ ..................(ாகங)

சகலதோஷத்துக்கும் துவாலை கைகாலிற்கட்ட

## மருந்து

அறுசீராசிரியவிருத்தம்

அகுக்குந்துவாலைதனைக்கேளு மானேசின்னிவிளாநொச்சில் .................*
பகுக்குஞ்சீந்தில் தான்வேம்பு பையநறுக்கிவசம்புள்ளி .......................*
தொகுக்கத்துவளைத்தனையிடித்துத் துவாலைகண்டக்கால் தன்னில் ..........*
மிருக்கமுடிந்துக்கட்டிடவே விரைந்துதொஷம்போய்விடுமே............(ாகச)

## திராதோஷகுணம்

அறுசீராசிரிய விருத்தம்

செய்யங்கண்ணுமிகசொருகும் சீதந்தண்ணீராய்கழியும்.........................*
மையமேனிக்கறுப்பாகும் மாங்காய்ப்போலே ஆசனமாம்.........................*
வையதேகமிக இளைக்கும் வானப்போலேவயிறுகும் ..............................*
செய்யதோஷமிதுதானே திராதென்றுதான் உரையே ......................(ரு)

இதுவுமது

சேயினுடம்புமிகநாறுஞ் செல்லாமூலைப்பால் அருவருக்கும் ......................*
காயுமுடம்புகண்குழியுங்கண்டால் இதுதான் அறியாயோ...............................*
தேயுமிடையாய் சிவனுணைத் திராத்தோஷமென்றேதான்..............................*
ஆயுர் வேதத்தளவுகண்ட அகத்தீஸ்வரனுர் அருளினரே............... (ருசு)

தோஷவகுப்பு முற்றிற்று.

அகத்தியர் திருவடிகளே சரணம்.



# மாந்தவகுப்பு.

## மாந்தம்வருமாறுகூறுகின்றூர்

அன்னமும் பாலு நெய்யும் அழகிய பழமுந்தெங்காய் ..........................*
பின்னையுங்கடலைவெல்லம் பெரியதோர்க் கதலிப்பண்டும் ......................*
தின்னுமோர்க் காலந்தன்னில் தீயென வெதுப்புமாகில்...........................*
ஒண்ணில்லா பிள்ளைக்குத்தான் உகந்துமே மாந்தமுண்டாம்...........(ருஎ)

இதுவுமது

அன்னைப்பால் மலக்கட்டாகி அநல் உடல்கனத்துத்தோன்றி ...... ........*
* திண்ணத்தால்வாயுபண்டந் தின்றதனுலேமாந்தம் ..........................*
பின்னைத்தான்மயிர்க்குச்சிட்டுப் பிள்ளைக்குவெதுப்புங்காணும் ..................*
மின்னொத்த இடையாய்கேளாய் திருத்திடுங்கழிச்சல் தானே...........(ருஅ)

* திண்ணம் - வலி.

இதுவுமது

மாதாவயிற்றின்மந்தமுலைப்பாலையருந்திவருமாந்தம் ...................... *
சூதாம் அரம்பைத்தெங்கிளநீர் * சுரபி மாங்கிஷங்கனி கவிச்சு................. *
பேதா மலைத்துவளைக்கடலைப் பேசுமொச்சைப்புளியங் கொட்டை............ *
மாதுரக் கொள்ளில் பிள்ளைக்கு வருங்காண்மாந்தந்தப்பாதே ............ (௱௩௪)
* சுரபீ = கள்

இதுவுமது

தன்வந்திரி

எந்தநோயும்வருவிதந்தான் இனித்தவெல்லமுர்தெங்காய் ...................... *
சொந்த உண்டை உளுவைபுடன் துள்ளுவாளை வரால் கெண்டை................... *
சுந்தமேதிப்பால் இறைச்சி சருருந்தண்ணீர்ப்புளி மோர்தான்..................... *
வந்தபாகல்சுரைக்கதலி வருகுமாந்தமிவைதின்றால் ..................... (௱௩௰)
இஃதொருதொடர்

மாந்த தொகை (உக) கூறுகின்றார்

―――

என்னுமாந்தவகைகேளு இயலும் வாதமாந்தமுடன் ............................ *
உன்னியபித்தமாந்தம் உயர்செறி சேஷ்மமாந்தம் .............................. *
பன்னியவிஷமா மாந்தம் பாடுதுபோரின்மாந்தம்................................. *
துன்னியவாலைமாந்தம் சுரமாந்தம் இன்னங்கேளே........................ (௱௩௧)

இதுவுமது

எண்சீராசிரிய விருத்தம்.

கேளேநீர் மாந்தமுடன் செரியாமாந்தம் கேடுபுரிகட்டுமாந்தத்தி னோடு, பாளானபால்மாந்தம் துலையாமாந்தம் பகரரிய எரிமாந்தந் தலையின்மாந்தம், தாளான கணமாந்தம் வலிப்புமாந்தம் சதியானசுழிமாந்தம் முக்குமாந்தம், வேளான சன்னிமாந்தம்ஊதுமாந்தம் வீக்கமுறு மாந்தமுடன் இருபத்தொன்றே............................................................ ...(௱௩௨)

வாதமாந்த குணம்

―――

அறுசீராசிரியவிருத்தம்.

ஒன்றும் வாதமாந்தகுணம் உரைக்கக்கேளு * திருக்கறவே .................. *
பொன்று கால் கை குளிந் † துதரம் பொருமும் விழியால் பார்த்தழுகும்...... *

குன்றுமெய்யில் வேர்வையுமாம் குழியவலிக்கும் பலவிதமாய்......................*
துன்றுதுடிக்குங் கோட்டாவி †தூளையுநாசிப் புண்ணுமே......................(௱௪௩)
* திருக்கு - குற்றம் † உதரம் - வயிறு

## பித்தமாந்த குணம்

ஆமேபித்தமாந்தகுணம் அடுத்தேவாந்திபேதியுமாய்..............................*
தாமேமூர்ச்சையாய்க்குரலுந் தயங்கிக்கம்மலாகிவிடும்..............................*
போமேமேனிமஞ்சனித்துப் புசியும்வேர்வையாய்க்கடுக்கும்......................*
வாமேகுழவிதேகமெங்கும் வலிக்குங்குளிருமயக்கிடுமே......................(௱௪௪)

## சேஷ்மமாந்த குணம்

மயக்கிடுஞ் சேஷ்மமாந்தம் வகையினை தகையாய்க்கேளு ........................ *
முயக்கிடுநளிருண்டாகும் முழுதுடல் சிலுசிலீர்ப்பாம்......................*
பயக்கு நாவுங்வெளுக்கும் பயந்தே * அரலைதான்கொடுக்கும்...................... *
சயக்கவயிறுகழிந்துவருந் தளராபொருமும் வயிறதுவே.............. (௱௪௫)
* அரலை - கோழை

## மாந்தகுணங் கூறுகின்றார்

பிள்ளையுங்கனத்திருக்கும் பிரண்டைபோல் காலும் பின்னி......................*
உள்ளமுங் கண் சிவந்து உடம்பினில் தோயுங் காட்டும் ......................*
துள்ளியே கையில் தங்கா துடிக்கெனச் சுழலுமாகில் ......................*
கள்ளமாய்க்குரலுந் தாழ்ந்துக் கண்குழிந் திருக்குமாந்தம்......................(௱௪௬)

### இதுவுமது

மாந்தத்தின்குணமேகேளாய் வயிறுபோம் வெப்பு நாறும்......................*
சோர்ந்து கைகால்குளிர்ந்து தோசையேமுலையுண்ணாது ...................... *
வாந்தியுமிகமேபண்ணும் வாயுமே யுலர்ந்துக்காயும்......................*
மாந்தியேமயக்கமுண்டாம் மாந்தத்தின்குணமதாமே......................(௱௪௭)

### இதுவுமது.

வேறு

மாந்தத்தின் குணமேதென்றால் வயிறுகழியுமயக்கமதாய் ......................*
கார்த்துப் பசியுமில்லாமல் காமவிசாரங்கொண்டவர்போல்...................... *
சோர்ந்துகிடக்குங்கைகாலுங் குளிர்ந்தேகாணுந்தொல்லுலகில்.............. *
காந்தள் மலர்போல் கையுடையாய்க்கனத்தமாந்தகுணமிதுவே...... (௱௪௮)

இதுமவுது

## தன்வந்திரி

பாரோசிதமலமுடனே பதமாய்க்கழியும் பலவிதமாய் ..........................*
தேரோ கெட்டப்பாலதுபோல் தெளிந்ததண்ணீர்ப் போலவுமே ...............*
வாரோகழியுங்குணம்பாரு வளமாய் உள்ளங்கைகாலும் ..............................*
நேரோகுளிர்ந்தத்தண்ணீர்போல் நிசந்தானென்றுத் தான்பாரோ..........(௱சுக)

இதவுமது

பாரோவெதும்பும் கண்சுழலும் பனிபோல் தேகமிகவேர்க்கும் ..................*
பாரோமுகமும்பலவிதமாய்ப் * பளிங்குபோலே ஒளிமினுக்கும் ..................*
பாரோயிந்தக்கூறதனைப் பருவம்அறிந்துக் கொண்டெல்லாம் .................. *
பாரோயிந்தக்குறிதானே பண்பாய் மாந்த மென்றுரையே................ (௱௫0)

* பளிங்கு - கண்ணாடி இவ்விரண்டுமொருதொடர்.

மாந்தத்துக்கு

## பச்சிலைச்சாறு

வெண்பா

நொச்சிப்பொடுதலையும் நுணா * வேலி இந்நான்கும் ..........................*
பச்சை இலைசரியாய்ப்பாலருக்கு - அச்சமற.......................................*
† நீர்வரவேதான் நறுக்கி நீகொடுக்கவேமாந்தம்.......................................*
ஊர்விட்டுப் போமென்றுரை.............................................(௱௫க)

* வேலி - உத்தாமணி † நீர்வரவே - சாறுவர

மாந்தத்துக்கு வேறு

## பச்சிலைச்சாறு

அறுசீராசிரியவிருத்தம்

உத்தாமணியும் பேய் மிரட்டி உகந்தசாணக்கிலையுடனே .......................*
வித்தாரமுள்ள வெதுப்படக்கி வேளை நொச்சில் இவை ஆறும் ..................*
ஒத்தே வதக்கிச்சாறு கொண்டு உயர்ந்த வசம்பு சிறுதேக்கு ...................*
சற்றே ஆமை ஓடுச்சுட்டுச் சாற்றிற் கொடு மாந்தம்போமே..............(௱௫உ)

மாந்தத்துக்கு வேறு

## சுரசம்

நிலமண்டில வாசிரியப்பா

ஒருபிடிபொடுதலை ஓர்கல்லுப்புடன்........................................*
இருவிதம் ஒன்றதாய் இடித்துச்சாறுசெய் .........................................*

சிறுவிதசட்டியிற் சிறுகசெய்தபின் ..................................................*
கருவிதம் உண்டிடத் தணியுமாந்தமே .............................................(௱௫௩)

மாந்தந்துக்கு வேறு

## குழம்பு

---

அறுசீராசிரிய விருத்தம்.

வெற்றிலைக்காம்பு பதினொன்று மேவு வசம்பு அவ்வளவு ...................*
பற்றிய உள்ளித்தான் இரண்டுப்பண்பாந் திப்பிலி தான் ஒன்று.................*
சுற்றி வெதுப்பித்தான் அரைத்துச் சுகமாய்ப் பருவந்தக்கபடி.....................*
வற்றிய வெந்நீர் தனிலிடவே மாந்தம் போமென்றருளினரே ..........(௱௫௪)

மாந்தத்துக்கு வேறு

## குடிநீர்

---

விடுமே ஓமம் உள்ளியுடன் மீறுமிளகுதிப்பிலியும் ....................................*
நடுமேசிலைத்தனில் முடிந்து நன்றாய்ந்நாழிநீர் தன்னில் ..............................*
இடுமே அடுப்பில் எட்டொன்றாய் இதமாய்க்காய்ச்சிக்குடிநீரை...................*
கொடுமே மாந்தம் உள்ளவெலாங் குடிபோமென்றுக்கூறினரே..........(௱௫௫)

மாந்தத்துக்கு வேறு

## மருந்து

வல்லக் * குரோட்டை இலையதனைவாட்டிப்பிழிந்து தானதிலே ................. *
† கல்வியோடு நல்வசம்புக் கனத்தவட்டத்திருப்பியுடன் ..........................*
சொல்லிச்சுட்டு ஆட்டியதை சுருக்கில் கலக்கிவார்த்திடவே.........................*
மல்லும் பொல்லாவினையான மாந்தம் போமென்றருளினரே .........(௱௫௬)
* குரோட்டை - விளா † கல்வி - ஆமை

மாந்தத்துக்கு வேறு துவளையும் உள்ளுக்கு

## மருந்து

* வேலிப்பரித்தி † மேனியுடன் வேளையிண்டுப் பொடுதலையும்................*
ஆலித்தின்னும் அகத்தியிலை ஆறும் வதக்கிச்சாறு ‡ கொடு ......................*
கோலவசம்பு ஆமையோடுக் குலவும் ஓமம் சுட்டரைத்துக் ..........................*
காலிற் கையில் துவளையிட்டுக் கடுகக்கொடுமாந்தம்போமே ........... (௱௫௭)

* வேலிப்பரித்தி - உத்தாமணி † மேனி - குப்பைமேனி ‡ கொடு-கொண்டு.

மாந்தத்துக்கு வேறு துவளை

## தேறையர்

கலி விருத்தம்

ஆவும் சின்னி அடவி வெண்ணொச்சிலை...... ....................... ..............*
ஏவு வேப்பிலைச் சீந்தில் இடித்து * நீர்...............................................*
மேவு மூன்றுநாள் மேல்த் துவளையிட் ...................................................*
நோவுமாந்தம் நொடிக்குள்ளே நீங்குமே.......... ........................... (ரு௬அ)

* நீர் - சாறு - இஃதொருதொடர்

மாந்தத்துக்கு வேறு

## கியாழம்

வெண்பா

வேளைவேர்ச்சுக்குடனே வெந்தயமும் வெள் உள்ளிப் ...........................*
பாளைசேர் ஓமம் பருவசம்பு - வாள்விழியாய் .......................................*
ஒன்றாகக் காய்ச்சி உடன் குழவிக்கீயக்...... ........................................ *
கண்டாலும் மாந்தம் போம்காண் ... ............................................ (ருகூ)

மாந்தத்துக்கு வேறு

## கியாழம்

எண்சீராசிரியவிருத்தம்

என்றே * மஞ்சணத்திநொச்சில் இனிய † வேலிக் கழல்கொடியும்...........*
ஒன்றாய் ஒவ்வொன் றொருபிடியாய் ஒக்கவறுத்துச்சட்டி தனில்..................*
நன்றாய்க்கருக்கி நீர்நாழி நயந்துவிட்டு அடுப்பேற்றி...........................*
கன்றாய் ஓமம் வசம்புச்சுக்கு மிளகுப்பொடுதலைக்காயாமே ............ (ருசுய)

* மஞ்சணத்தி - நுணா. † வேலி - உத்தாமணி.

இதுவுமது

ஆமேதிப்பிலி அதனோடு அரு நல்லெண்ணெயில்சிவக்கத்.......................*
தாமேவறுத்துப்பொட்டணமாய்ச் சமைந்தநீரினுடன்போட்டு...................*
வேமேகாய்ச்சியோர் சங்கு விளாவில்கொடுப்பீர் ஆமாகில்.........................*
போமேமாந்தமுள்ளவெலாம் போயிக்கடலிற்புக்கிடுமே...................(ருசுக)

மாந்தத்துக்கு வேறு

## கியாழம்

உத்தாமணியிலைவேளையின்வேர் உகந்தநொச்சில் பொடுதலையும்............ *
சித்தமுருங்கை நுணா ஈர்க்குச் சேரவறுத்து நீர்விட்டு ............................ *

ஒத்தாய் ஓமம் * திரிகடுகு உயர்ந்தவசம்பு முடிந்ததனை..................*
வைத்தெட்டொன்றுய்க்காயச்சி தர மாந்தம் எலலாம் ஓடிடுமே........(௱௬௨)
* திரிகடுகு - சுக்கு, மிளகு, திப்பிலி.

மாந்தத்துக்கு வேறு

## கியாழம்

சுக்குமிளகுதிப்பிலியும் தூய்ய ஓமம் உள்ளியுடன் ..................*
ஒக்கநறுக்கிச்சீலையினில் உகந்துமுடிந்துநீர் உழக்காய்..................*
செக்கச்சிவக்கக்காய்ச்சியபின் சீராய்ச்சங்குபுகட்டிடவே ..................*
மிக்கமாந்தப்பிணிதோஷம் விட்டேயோடுங்கண்டாயே ................ (௱௬௩)

மாந்தத்துக்கு வேறு கியாழம்

## தன்வந்திரி

எண்சீராசிரிய விருத்தம்

கியாழத்தால் மாந்தங்கள் போகக்கேளு கெடியானமாசிபத்ரிபற்பாடந்தான், கயாழத்தால் நாயுருவி முட்காவேளை கருஞ்சீரகத்துடனேகோழியெச்சம், இயாழத்தால்பற்பமாய்ச் செப்துக்கொண்டு * இருவேலிசங்குச்சுக்கோடேஏலம், சியாழத்தால் † ரோகணியும் பறங்கிச்சக்கைச் சீக்கனும்பட்டைக்காவட்டம்புல்லே ........................................ (௱௬௪)

* இருவேலி - வெட்டிவேர். † ரோகணி - கடுகுரோகணி.

இதுவுமது

புல்லானகடுக்காயும் மாசிக்காயும் புகழானவசம்போடு தான்றி முத்தம், வில்லான நீர்படியிரண்டதாகும் விதமாக எட்டொன்றுய்ச் காய்ச்சியேதான், கல்லான மாந்தமொடுசுழிமாந்தங்கள் * கைப் † பினிப்பால் வந்ததொருகழிச்சல் மாந்தம், மல்லான மாதா வாய்ச்சிறுபண்டத்தால் மருவிவந்த மாந்தமெல்லா மயங்கிப் போமே ........................................(௱௬௫)

* கைப்பு - கசப்பு. † இனிப்பு - தித்திப்பு. இவ்விரண்டு மொருதொடர்

மாந்தத்துக்கு வேறு

## குளிகை

அறுசீராசிரியவிருத்தம்

என்றே ஓமம் திப்பிலி சுக் * கிருசீரகமுங் கொத்தமலி...................... *
பன்றுமையோடு குராசானி பகரநிறுத்து ஓர் நிறையாய் .................... *
துன்றுநீரில் தானரைத்துத் துதித்தநல்லத்துவரையென ......................*
உண்டைமாந்தம் உள்ள எலாம் ஓடுங்கண்டாய் உண்மையிதே,..........(௱௬௬)
* இருசீரகம் - நற்சீரகம் - கருஞ்சீரகம்.

மாந்தத்துக்கு வேறு

## குளிகை

மாலிலார்க்குமாந்த உண்டை வண்மையுடனேதான் அரைக்க ........*
ஆசையாக வாய்விளங்கம் ஆமைஓடு நன்மிளகு ........*
வாசமான பொடுதலைக்காய் வசம்புதிப்பிலி கழல்பருப்பு ........*
கூசாமல்சரிநிறையாகக் கூட்டிநீவைத்தரைத்திடுமே ........ (௱௬௭)

இதுவுமது

அரைந்தமருந்துபொடுதலைச்சா றப்பிதனிலேவிட்டரைத்து ........*
நிரைத்துசுரைக்காயளவு நிழலில் உலர்த்திக் குளிகைதனை ........*
சுரத்திற்கழிச்சல் இருமலுக்கு சொற் * சிறுவழுதலைக்கியாழத்தில் ........*
உரைத்து உண்டைதனை கொடுக்க உடம்பிற்பிணியுந்தீர்ந்திடுமே ........ (௱௬௮)

சிறுவழுதலை - கண்டங்கத்திரி.

இதுவுமது அதற்கு

## அநுபானம்

வாந்திப் பொருமலுக்கெல்லாம் வளரும் * வேலிக்கியாழத்தில் ........*
ஓய்ந்த வெகுவாய்க்கழிச்சலுக்கு ஓமக்கியாழந்தன்னிலிட ........*
சேந்தியான மாந்தத்துக்குக் கியாழமறிந்தே யிடுவீரேல் ........*
மாந்தம் விட்டுத் தானகலும் வளரும்பிள்ளையாமென்றே ........ (௱௬௯)

* வேலி - உத்தாமணி

மாந்தத்துக்கு வேறு

## குளிகை

திரிகடு கோமம் உள்ளிச் சீர்பெருங்காயமற்றக் ........*
கரிடசீரகம் வகைக்குக் கணக்கது விருகன் நாலு ........*
அரியதோர் வசம்பு மூன்று * அரிதகிப் பதினைந்தாகும் ........*
புரியசாரணைவேர் ஐந்துப் பொடுதலைக்கொழுந்துமாமே ........ (௱௭௰)

* அரிதகி - கடுக்காய் (அன்றியும்)

கடுக்காய்களில் எழுவகைப்படும் அவையாவன

விசையன்கடுக்காய் விந்திய தேயத்திலுற்பத்தி பேய்ச்சுரைக்காய் போன்றிருக்கும் இதற்கு வாதந்தீரும், உரோகணிகடுக்காய் கன்னிமா குமரியிலுற்பத்தி நால்வகிராயிருக்கும் இதற்கு சன்னிதீரும், பிரிதிவிகடுக்காய் சௌராஷ்டிரதேயத்திலுற்பத்தி மேற்றோல் மெல்லியதாயிருக்கும் இதற்கு பயித்தியந்தீரும், அமிர்தகடுக்காய் காசிதேயத்திலுற்பத்தி சதைபோன்றிருக்கும் இதற்கு

சேஷ்மந்திரும், சிவந்திக்கடுக்காய் கானிலுற்பத்தி பொன்னிறமாயிருக்கும் இதற்கு மூலந்திரும், திரிவிருதைகடுக்காய் மலைகளிலுற்பத்தி பஞ்சவண்ணமாயிருக்கும் இதற்கு விரணந்திரும், அபையன்கடுக்காய் பொதிகை மலையிலுற்பத்தி கறுப்பாயிருக்கும் இதற்கு துன்பந்திரும்..............................(௭௭௧)

இதுவுமது

ஆம்பெருந்தும்பைக்கொழுந்து அவ்வளவு * வேலிப்பத்ரம் ..................*
ஓம்பெறதான் வெதுப்பி ஒன்றாகவே இடித்து..........................................*
தாம்பெருந்தும்பைச்சாற்றில் தனி பொடுதலையின் சாற்றில் ..................*
காம்பட அரைத்துச்சுண்டைக் காயள வுருண்டைசெய்யே..................(௭௭௨)

* வேலிபத்திரம் - உத்தாமணியிலே.

இதுவுமது

செய்ததோர்குளிகைதன்னைத் திகழ்நிழல் உலர்த்திக்கொண்டு..................*
வையகபாலர் தங்கள் வளர்பருவத்தைப்பார்த்து ..................................*
கொய்ய * கால் அரை முக்கால் முழுக் குளிகைவெந்நீரிலீய ..................*
மைமாந்தங் கட்டுமாந்தச்கழிச்சலும் வலிப்பு போமே ..................(௭௭௩)

* ௪ - ௨ - ௩ - ௧.

மாந்தத்துக்கு வேறு குளிகை

## தேரையர்

---

கலிவிருத்தம்

போருஞ் சன்பசப் பூ இலாமிச்சம்வேர் ..................................*
ஏருங் கோஷ்டமோ டேலங்கோரோசினை ..................................*
வேகுஞ் சாத்திர பேதி * மதுரமும் ..................................*
வாருவெட்டிவேர் மாசிப்பச்சொன்பதே ..................................(௭௭௪)

* மதுரம் அதிமதுரம்

இதுவுமது

ஒன்பது வகைக் கொன்றுக் கழஞ்செடை ..................................*
மின்பதுவெட்டி வேர்த்தண்டுச் சாற்றினில் ..................................*
நன்பது எழு நாழிகையாட்டிநீ ..................................*
பின்பது குன்றிப் போலத்திரட்டியே..................................(௭௭௫)

இதுவுமது.

திரட்டிடு உலர்த்தி யொருமாத்திரை ..................................*
விரட்டிடு [illegible]லின வெந்நீரில் ..................................*

ரோட்டிடும் இழைத்தே கொடு மூன்றுநாள் ...................................*
ஈரட்டிடும் பின் கடும்பிணியாவுமே....................................(௱௭௬)
இவைமூன்றுமொருதொடர்.

மாந்தத்துக்கு வேறு குளிகை

## தன்வந்திரி

உடைப் பென்பூரம் பலம் அரைதான் ஓகோ லவங்கம் ஏலமுடன் ...........*
திரைப்பெல்வசம்பு சீரகந்தான்திறமாய் மாசி அதிவிடையம் ..............*
கடுகுப்பென் வசுகந்குக் கால்பலமாய்க் கனமாய்ப்பூரஞ் சுத்திசெய்து.........*
மரைப்பென்கல்வம் அதிற்போட்டு மாசிப்பத்திரிவேர்ச்சாறே............(௱௭௭)

இதுவுமது.

வேர்ச்சாற் சாமம் ஒன்றரைப்பாய் விட்டுணுக்கரந்தைச்சாற்சாமம்...........*
வேர்ச்சாற்வார்த்து அரைத்துக்கொண்டு விதமாய்க்கொத்தமல்லியைப்போல்*
வேர்ச்சாற்குளிகைசெய்துக்கொண்டு விளங்குநிழலில் உலர்த்தியபின்.........*
வேர்ச்சாற்குளிகைசெப்பில்வைத்து வேதப்பொருளைமனதிலெண்ணே(௱௭௮)

இதுவுமது.

எண்சீராசிரியவிருத்தம்.

எண்ணவே குளிகை யொன்றெடுத்துக் கொண்டு எழிலானமாந்தத்திற்கிப்பாழந்திய, எண்ணவே ஓடிவிடு மாந்தமெல்லாம் இயம்பினேன் முன்சொன்ன தெல்லாம்போகும், எண்ணவே இம்மொழிபோல் ஆர்தான்சொல்வார் எடுத்த முறையாடு மிந்தமுன்னூறுபாரு, எண்ணவே முன்சொன்ன மாந்தமெல்லாம் என்சொல்வேன் பறந்தோடும் இதனால் பாரே ...........(௱௭௧)

மாந்தத்துக்கு வேறு

## நெய்

* கட்டளைக் கலித்துறை

சுத்தாவின் நெய்யும் ஒருநாழி ஓமம் துதிபலந்தான் .........................*
உத்தாமணி இலை வெற்றிலைக்காம்பொவ் வொருபிடியாய்.......................*
வித்தான சுக்குடனே வசம்புள்ளி விருகனெடை ...............................*
எத்தாய் அரைப்பித் தெரியிடமாந்தங்களேகிடுமே ....................(௱அ௰)

மாந்தத்துக்கு வேறு

## எண்ணெய்

ஏகும் அகத்திச் சாரணை வேலி எண்ணெய் ஓர் உழக்காய் ......................*
வேகமதாகவும் * கூனன்முது குள்ளி வெண்வசம்பு .........................*

ஆகமதாகவிருசன்னெடையும் அனைத்ததனைப்...... ..............................*
பாகமதாக எரியிடமாந்தம் பறந்திடுமே..........................................(ாஅக)
* கூனன்முதுகு - ஆமைஓடு.

* சொல்லாறுவல்லின மெல்லினமோடிடை தோன்றிலொற்று ..........*
நில்லாது நேர்நின் நேராய் நிறைந்து நிரம்பியநூற் .................................*
கல்லாதமாந்தர்க டேமாங்கனியென்பர்கற்றுணர்ந்த ............................. *
நல்லாரெவர்களுங் கூவிளங்காயெனநாட்டுவரோ ..........................(ாஅஉ)
* இச்சூத்திரத்தாற் கட்டளைக்கலித்துறையை யறிக

மாந்தத்துக்கு வேறு எண்ணெய்

## தன்வந்திரி

கலிவிருத்தம்

செய்திடமாந்த எண்ணெயைச்சொல்வேன் ........................................... *
வைதிட இஞ்சி சங்குடன் சின்னி..................................... ................*
கைதிட காணி கரந்தையும் வன்னி .................................................*
நெய்திட எல்லாம் நேராய்ப்பிழிந்திடே ...................................... (ாஅங)

இதுவுமது.

பிழிந்து * சிற்றே ரண்டத்தின் எண்ணெய்...........................................*
கலநதிட்டேயொரு கட்டையால் தீயிடு ......................................... *
செலந்திகழ்க்காய்ச்சிசிறுக இறக்கிடு.......................................... .......*
மெலிந்தநோய் தீர விளம்புவேர்கேளே ... .. ........................ ...........(ாஅச)
* சிற்றேரண்டம் – சிற்றாமணக்கு.

இதுவுமது

கேளிடு மாந்தம் மலபந்த மாந்தம்...............................................*
சேலிடு சலத்திற் * செனி † சிரமாந்தம் .............................................*
பாலகர் உண்ணப் பறந்திடும்பாரு ................................................*
சீலக்கொடிய சீதளம்போகுமே ....................................................(ாஅரு)
* செனி - உண்டாகும் † சிரமாந்தம் - தலைமாந்தம்

மாந்தத்துக்கு

## எண்ணெய்

அறுசீராசிரியவிருத்தம்

விளக்கெண்ணெய் அரை அழாக்குவெண் காயம்பெருப்பூண்டைந்து........*
தளுக்குறுமணித்தக்காளிச் சாறது உழக்கதாகும் ..................................*
களர்கமாய்ச் சாறும் எண்ணெய்க் கலந்துவெண்காயந்தன்னை ............*
அளசவே அரிந்துபோட்டு அடுப்பில்வைத்தெரித்திடாயே ............ (ாஅசு)

இதுவுமது

எரித்து பொன்னிறமதானால் இறக்கிநீ வடிக்தூக்கொண்டு ........................*
விரித்திடும் கடுரோணி விளம்பிய விருகனொன்று ...........................*
தரித்துமே வறுத்துதூளாய்த் தானதிற் போட்டொன்றாக ....................*
பிரித்தொரு கரண்டி எண்ணெய்ப் பிள்ளைக்குக் கொடுப்பதாமே ......(௱அஎ)

இதுவுமது

கொடுக்கவேதான் உட்காய்ச்சல் கொடுங்கணக்காய்ச்சல் மாந்தம் ...........*
முடுக்கிய தொன்னடை வாய்ப்புண் மூலத்தி குடுமற்ற .........................*
படுக்கவே மிகபொல்லாத பலவகை கழிச்சலெல்லாம் ..........................*
அடுக்குடன் ஓடிப்போமென் றறைந்தனர் நூல்வல்லோரே ............(௱அஅ)

மாந்தத்துக்கு வேறு

## எண்ணெய்

---

கஞ்சாங்கோரைப் பிரமியிலை கனத்தகத்தளசிபழம்பாசி .........................*
செஞ்சா நிலவிளாவல்லாரைச் சீந்தில்தண்டுசமூலமுடன் .......................*
மிஞ்சாவசம்புரோகணியும் * வெண்காவெளியோர் விருகனைடை ............*
அஞ்சா எண்ணெய் ஓரழாக்கு அதிலிட்டெரித்துபதம்பாரே.............. (௱அகூ)

* வெண்காவெளி - வெள்ளப்பூண்டு.

பாரோயிறக்கிவடிகொண்டுப் பரிவாந்தட்டடை ஒன்றாக ........................*
கூரோபாலர் உள்ளுக்குக்கொடுக்கமாந்தம்போமிப்பால்...............................*
காரோயிச்சாபத்தியமாய்க் காதலனைப்பெற்றத்தாயை ...............................*
நீரோவைக்க நலமாகும் நீலவிழிமாமடமயிலே.............................. (௱கூ௦)

தோஷமாந்தத்துக்கு தைலம்

## தேறையர்

---

கலிவிருத்தம்.

அன்னமேமுருங்கைப்பட்டை அத்துடன் ...........................................*
மின்னமே வெண்கருவும் வெள்ளுள்ளியும் ........................................*
இன்னம் வேப்பெண்ணெ யிவைநாலுடன் .........................................*
சன்னமே செய் தைலம் இறக்கிடே ............................................. (௱கூக)

தோமே பாச்சோற்றிப் பேயின் பாச்சோற்றியும்.........................*
பாமேநல்லப் § பகன்றையும் ஆகுமே ... ..................... ..........(ஙசய)

* கழல் - களச்சி † வட்டத்திருப்பி - பங்கம்பாலே ‡ கரந்தை - விட்ணுக்கரந்தை § பகன்றை — கிலுகிலுப்பை

இதுவுமது

எண்சீராசிரியவிருத்தம்

ஆருமே சடைச்சியிலேக் குதிரைவாலி அழருகுசிறுபுள்ளடியும் கண்டங்கத்ரி, சோகியொடுசெருப்படையும் துளசித்தும்பை சயகோழி அவரையுடன் ஆடாதோடை, ஏருமேவல்லாரைப்பொடுதலையும் வேளை எடுதவசிமுருங்கைவராப்பூலாபத்ரம், பாருமே இலைகளெலாம் இடித்துச்சாறுப் படியொன்று உப்பிலிவேர்பெருங்கிழங்கே.............................................. (ஙசக)

இதுவுமது

கிழங்கானபூதகரப்பான்தன்பட்டைக் கெடியானவாதகரப்பான்தன்பட்டை. முழங்கானதிருநீற்றுப் பச்சைவேரும் முச்யகருவேப்பிலையின் ஈர்க்குதானும், வழங்கான வகைக்குக்காலபலமேவாங்கிவகையாய்ச்சூரணித்துமுன் மருந்தில்சேர்த்து, குழம்பான சாறுஞ்சூரணமுமொன்றாய்க் கூட்டியேவிளக்கெண்ணெய்ப்படியில்தாச்சே ............................................ (ஙசஉ)

இதுவுமது

நாக்கியேமுலைப்பால் ஓர் அழக்குவிட்டுத்தண்மையாய்பக்குவமாய்க்காய்ச்சிக்கொண்டு, தேக்கியே கரண்டியளவைந்துநாளுந் திறமையுடன்கொடுத்துபத்தியங்காப்பாகில், நாக்கியே ஈரொன்பான்மாந்தந்தீரும் துடியானகணம் எட்டுந்தீர்ந்துபோகும், நீக்கியேபெரியவர்க்கேழ்நாள் கொடுக்க நீள்மேகம் கிரந்தியெல்லாந்தீருந்தானே.......................................(ஙசங)

சகலமாந்தத்திற்கும் மாத்திரை

## புலிப்பாணி

நான் இனிதான் இன்னமொன்றுசொல்லக்கேளு நயமானவில்வவேர் விளாவில்வேரு, மானவேநாய்வேளைக்கஞ்சாங்கோரை வண்மையாய்ச்சின்னியொடு காட்டுமொச்சை, தேனனதிருநீற்றுப் பச்சைத்தும்பைத் தெளிவானசிறுதும்பைக்கண்டங்கத்ரி, வானன அமுக்கருசங்கங்குப்பி வளமானநுணா வேலிப்பருத்தியாமே ................................................... (ஙசச)

இதுவுமது

ஆமே நீ முடக்கொற்றான் வெண் காட்வேளை அடவானசாறணைபுமுட்டைநாறி, தாமேநீ கொழுஞ்சிப் புண்ணாக்குப்பூண்டு தயவானபிரமியொடு

சித்திரமூலம், வாமேநிகொவ்வையுடன் மணித்தக்காளி வகையானக்கையானு ங்கீழ்க்காய்நெல்லி, போமேநீ இந்தவகைவேர்கள்தானும் புகழாககழுஞ்சு திரைபிலமாய்த்தூக்கே .................................................(௩௪௫)

இதுவுமது

தூக்கியே வசம்புடனே ஓமம் சுக்கு துன்பமிலாசதகுப்பி * திரிபலாதி, ஆக்குடையதேசபுரம் † அக்கித்திப்பிலி அரத்தைகருஞ் சீரகமுங் காட்டுச்சீரட், போக்குடையபுதியவாலுழுவைதானும் பொங்கமுடன் பொஸ்தசக்காய்ப் புரசங்கொட்டை, தாக்குவாய்வகைவகைக்குக் கழஞ்சுதூக்கிச் ‡ சாணக்கிச்சாற்றிநால் அரைத்திடாயே..................................................(௩௪௬)

* திரிபலாதி - கடுக்காய் - தான்றிக்காய் - நெல்லிக்காய் † அக்கித்திப்பிலி - ஆனைத்திப்பிலி ‡ சாணக்கி - ஜனகிபூண்டு

இதுவுமது

அரைத்திடுவாய் * அப்பைச்சாரணையும்வேளை அழகான அசத்திச்சாறிண்டஞ்சாறும், துரைத்திடுவாய் இருசாமம் மடனம்போலே தடிபுடனேதான் அரைத்திருபங்காக்கி, விரைத்திடுவாய்த் துவரையைப்போல் உருட்டிப்போடு விதமாக ஒருபங்கில் விபரங்கேளு, இரைத்திடுவாய்ச்சுத்திசெய்த வாளர்தானும் இதமான கடுகுரோகணியும்பாரோ ................................(௩௪௭

* அப்பை - அப்பைக்கொவ்வை

இதுவுமது.

பார்க்கவேவகைவகைக்குக்கழஞ்சுதூக்கிப் பாங்காக முன்மருந்தில்ஒக்கச்சேர்த்து, வார்க்கவே அகத்திசசாற் * நிலவாகைச்சாற் வளமாகவிட்டரைப்பாய்சாமம் மூன்று, வேர்க்கவே துவரையைப்போல் உருட்டிச்சேர்த்து விதமாகநிழல் உலர்த்தி எடுத்துக்கொண்டு, நேர்ச்சவே குழந்தைகள்தன் பிணிகட்கெல்லாம் நிக்ஷயமாய்த்தான்கொடுக்கத்திரும்பாரோ ...................(௩௪௮)

இதுவுமது

பாருநீ அப்பைச்சாற் நாய்வேளைச்சாற் பண்பானதுளசிச்சாற் சிறுதும்பைச்சாற், வீருநீ எருமுட்டைநாறிச்சாறும் விதமானகாட்டுமொச்சையிலையின்சாறும், சேருநீவயிறுகட்டிப் பிணிகட்கண்டால் செயலாகும் முன்குளிகைசெலுத்திப்போட, தீருநீ இச்சாற்றிலெதிலாகிலும் திறமாகத்தான்கொடுக்கத்திரும்பாரோ .................................................(௩௪௯)

இதுவுமது

தீருமேமாந்தத்தின் வகைகள்யாவும் திறமான தோஷமொடுவெலிப்புக்காய்ச்சல், ஆறுமே அக்கினியின் மந்தந்தானும் அன்பில்லா அநேகவிதநோ

ய்கட்போகும், கூறுமேசிசுவருத்தந் தீர்ந்தோர்க்கெல்லாம்குற்றமொன்றும்வா
ராது வறுமைநீங்கும், வீறுமே போகருட கடாக்ஷத்தாலே விதமாக புலிப்பா
ணிப்பாடினேனே...................................................... (௫௫0)

இத்தொழுமொருதொடர்

உரம்விழுந்தால்

## முருகு தைலம்

---

தன்வந்திரி

அறுசீராசிரியவிருத்தம்

இல்லாப் * பூண்டுப்பலம்பத்து இனி வனக்கடுகுபலம்பத்து .................*
கல்லாக் குழிதைலஞ்செய்துக் கடுக எடுத்துப்பதபடுத்தி .......................*
பொல்லாநோய்கட்குடல்வாதம் போதும்போதும் அவாலேயிட ...............*
எல்லாப்பிள்ளை உரம்வீழ்ந்தால் வலைபோல்பூச உரம்விடுமே ......... (௫௫௧)

* பூண்டு - வெள்ளைப்பூண்டு.

மாந்தவகுப்பு முற்றிற்று

## இனிகணம் வருமாறு

அகத்தியர் திருவடிகளே சரணம்

---

அகத்தியர் திருவடிகளேசரணம்

இஃது

# கணவகுப்பு.

## கணம்வருமாறு

அறுசீராசிரிய விருத்தம்

* ஐயதுகூடித்தென்றால் அரிவையர் துயரந்தன்னால் ..............................*
செய்ய † பற்புனலருந்தி செறிசலதோஷந்தன்னால் ............................ *
பையரவல்குலாளும் பரியுடனிருந்ததாலும் ...........................................*
துய்யதோர்குழவிகெட்டுக் கணங்களுந் தோன்றுமென்றே..................(௫௫௨)

* ஐ - சேஷ்மம் † பற்புனல் - பலநீர்

## கணங்களின் தொகுப்பு

எண்சீராசிரிய விருத்தம்.

கணங்கட்பேர் விரித்தறையக்கேளுகேளு கனவாதகணம்பித்தக் கணந் தளிர்ந்த மனமான சேஷ்மகணம் பிள்ளைகட்குமாந்தகணம் அதிற்பிரிவு ஐந் தாம் இப்பால், துணமாநீர்க்கணம்பிரளிக்கணமும் நல்லச் சூலிகணஞ்சுழிக ணமஹாகணந்தான், குணமான ஊதுகணம்வரட்கணந்தான் கொதிப்புகணம் விக்கணம் இன்னங்கேளே ........................................................ (௩௫௩)

இதுவுமது

கேளேநீபிறக்கணமும் அந்தகன்றன் கிணமும்மந்தாரகணம் எரிகண ந்தான், மூளேநீராமகணம் ஆமகணமெற்ற முர்குகணம்மூலகணம் போராம த்தில், வாளேநீகணம் இரத்தகணமாம் எல்லாம்வருத்துவைத்த திருப்பஃதமு ம்மாக, கோளேது இதுதானே ஆயுர்வேதக்குறிப்பறிந்தார்க்கல்லாமல்மற் றோர்க்கேதே ........................................................ (௩௫௪)

## வாதகணத்தின் குணம்

அறுசீராசிரியவிருத்தம்.

வாதகணத்தின்குணத்தியல்பை வகுப்போம் உடலும்பாரமதாய் ............ *
போத இளைக்கும்நா வரளும் புகைந்தே இருமுந்தாகமுடன் ................. *
பாதவலைக்கும் சுரங்காயும் பசியும் எடுக்கா மலங்கருகும்....................... *
பேதமாகநீர்ச்சுருக்காம் ) பித்தகணத்தின்குணங்கேளே ................ (௩௫௫)

## பித்தகணத்தின் குணம்

கேளேபித்தக் கணத்தியல்பைக் கெடியாப் உடலும் எரிச்சலுண்டாம் ...... *
நாளே உலர்த்திமார்பிடிக்கும் நாக்குங் கடைவாய்ப்புண்ணுகும் ............... *
பாளே சுரமுங்காய்ந்தெரிக்கும் பருக்கக்கழியும் மஞ்சட்போல்................. *
தாளேமயக்கும் தலைகிறுக்கும் ) சாற்றுஞ்சேஷ்மகுணங்கேளே.. ......(௩௫௬)

## சேஷ்மகணத்தின் குணம்

குணமாஞ் சேஷ்மகணத்தியல்பைக் கூறக்கேளு உடலமெலாம் ................ *
கனவாய்த் தினவுமெடுத்துசொரி ஊறிக்கரக்கால் வீக்கமதாம் ................ *

மண்வாய்நாறும்வெடிப்புடனே மார்பிற்கோழை இருமலுடன் ..............*
* அணமேவெடித்துப் புண்ணாகும் ஆருதவனமிகுத்திடுமே............ (ருடுஎ)
* அணம் - கீழ்வாய்மேல்வாய்புறம்

கணத்தின் குணம்

கூறுகின்றார்

மார்ந்தமுதிர்ந்து சுழிக்கும் * கோ வயிறநொந்து நா வெந்து ..................*
எந்தும் எதிரே மூச்செறிந்து இருமலிருமி † சத்திக்கும்.......................*
போந்த உடம்புபலவீதமாய்ப் பொறுத்துப்பொறுத்துச் சுரம் உண்டாம் ......*
காந்தள் மலர்போல் கரமுடையீர் கணத்தின் வகையென்றுரையீரோ (ருடுஅ)
* கோ - கண் † சத்தி - உவாநதி

இதுவுமது

விழிநிறம்வேறதாகும் வெறித்தது உருட்டிப்பார்க்கும் .........................*
குழிவிழுந்துச்சித்தாழ்ந்து குணுகுணம்பலவுஞ்செய்யும் ......................... *
மொழிவது * மிடறுகம்மி முகங்குறுவேர்வை உண்டாம்.......................*
கழிவதுவயிறுகாப்புந்தால் கணமெனக்கருதுவாயே..........................(ருடுக)
* மிடறு - தொண்டை.

இதுவுமது

சீதரத்தமாய்க்கழியுந் திரும்பக்கெட்டப்பால்போலே ..........................*
பேதங்கறித்தண்ணீரதுபோல் பின்னுங் கழியும் வயிறுப்பும்........................ *
ஓதங்கைகால் முகங்கருகி எரிந்து குளிர்ந்து வெதுப்புண்டாம்...................*
கோதே இருமலுண்டாகுங் குறிதான் அறியுங்கணங்கட்கே ............ (ருசுய)

எண்சீராசிரிய விருத்தம்

நடுங்கியதோர் பித்தமதுகோபங்கொண்டு நல்லவாயுவைப்பற்றி அழுத்திக்கொளளும், கடிந்திருந்த பிள்ளைக்குக் கதித்தச்சூடு கனகனப்பு எந்நேரங் கைவிடாது, ஒடுங்கியேவாயுலர்ந்து தண்ணீர்கேட்கும் உண்மையாய்மலபேதிவழும்பாய்வீழும், மடங்கியே ஊன்கழனீர் அபாநவாசல்மாறுமல் எப்பேதும்வருகும்பாரோ ........................................................ (ருசுக)

இதுவுமது

தன்வந்திரி

அறுசீராசிரிய விருத்தம்

பாரோகணத்தைப்பகரக்கேள் பகரும் உடம்பில்சுரம்வீசும் ..................... *
பாரோ உட்சுரமிதுதானே பகருங்கணம் மலம் உட்சேரும்.......................*
பாரோமார்புகூண்டெழும்பிப் பதமாய் தேகம்மிகவற்றிப் ..... ..................*
பாரோவாயும் மிகநாறும் பதமாய்மலமும்வெட்டையென்றே...........(ருசுஉ)

### இதுவுமது

மலமும் சலமும்மிகத்தீய்ந்து மார்பில் அதிகசுரங்காயும்.......................*
மலமும்வயிறும்மிக எரியும் வளமாய்த்தலைபுமிகமயக்கும் .......................*
சலமும்வரள் தீ தான்குறையும் சண்டாளர்போல் உட்சுரமும்....................*
தலமே பன்னிரண்டாண்டுமட்டும் தனதாய்வருகுங்கணமிதுவே ...... (௱௬௩)

* இவ்விரண்டுமொருதொடர்

கணத்துக்கு

## எண்ணெய்

எண்சீராசிரியவிருத்தம்

பாருநீ இக்குணத்தால் கணங்களென்றுப் பரிவாகக்கண்டறிநீபுத்தியாக, சாருதற்குக் குமிழ்வேரு * சித்திரபாலைசார்ந் † தருக்கன் ‡ காந்திவேர் § பொன்னும்பூவேர், பேரான ¶ மதிமயக்கிக் கணப்பூண்டுவேரும் போதரவாய்ப்பட்டைவகைப்பலமேதூக்கு, மீறி அரைமெழுகதுபோல் எண்ணெய்நாழிவெந்தபின்புபீங்கானில் இறுத்துவையே ......................... (௱௬௪)

* சித்திரபாலை - சிறுஅம்மான்பச்சரிசி † அருக்கன் - எருக்கு ‡ காந்தி * விட்ணுக்கரந்தை § பொன்னும்பூவேர் - ஆவாரைவேர் ¶ மதிமயக்கி - கொன்றை

### இதுவுமது

இறுத்திட்ட எண்ணெய்க்குப்பொடியைச்சொல்வேன் ஏலஞ்சீரகம் * மதுரம்பலமேவாங்கி, வறுத்திடித்துப்பொடித்திடுவாய்மயனம்போல வாரி எண்ணெய்மேல்தூவிகுலுக்கிவைப்பாய், நிறுத்து ஒருகாசெடையாய் மூன்றுநாள்தான் நேராகமுலைப்பாலில்கலந்துவாரு, துரத்திவிடும் அபாநத்தால்சொரிந்தரத்தம் தோற்றினதோர்கணமெல்லாந்தூரப்போமே .................... (௱௬௫)

* மதுரம் - அதிமதுரம்

கணத்துக்கு வேறு

## எண்ணெய்

தன்வந்திரி

* கிணமானகிணமிதற்கு மருந்துசொல்வேன் கிரியையென்றவல்லாரைமாசிபத்ரி, கணமான வில்வமொடு விளாவின்சாறும் கடியான அத்திப்பால் ஆலம்பாலும், திணமான உள்ளிச்சாற் † நிம்பச்சாறும் திறமான முலைப்பாலும் ஆவின்பாலும், கிணமான ஆவின் நெய் வெள்ளாட்டின் பால் கேள்சிவந்தகொம்புத்தேன் கொவ்வைச்சாறே........................... (௱௬௬)

* கிணம் - கணம் - தசவாயு - திசவாயு வென்பது - போன்மருவியது
† நிம்பம் - எலிமிச்சம்பழம்

இதுவுமது

சாறிதெல்லாம் வகைக்குபடி அளைதான்வாங்கிசமர்த்தானதென்னங் காய்ப்பாலுநாழி, சாறிதெல்லாம் ஒருசட்டித்தனிலே ஊற்றிச் சாதிக்காய்சாபத்திரி ஏலமிலவங்கப்பட்டை, சாறிதிலே * திரிகடுகு † திரிபலாதி சடாமாஞ்சில் அதிவிடையம் மாசிக்காயும், சாறிதிலேவகைக்குபலம் ஒன்றுவாங்கிச்சன்னமாய்த் தூளிடிந்துவைத்து கொள்ளே ........................................ (௩௬௭)

* திரி கடுகு - சுக்கு - மிளகு - திப்பிலி † திரி பலாதி - கடுக் காய் - தான்றிக்காய் - நெல்லிக்காய் -

இதுவுமது

வைத்துக்கேள் சந்தனத்தூள் அறுகங்கட்டை வலுவானவெட்டிவேர் விலாமிச்சோடு, கைத்திறமாய் இடித்துவகைப்பலந்தான் வாங்கிச் சால்படிதான் நீர் அதிலே யிதனைப்போட்டு, மைத்துப்பார்க்கியாழுமது பாதிவாங்கி மகத்தானசாறதிலே பொன்றுய் வார்த்து, வைத்துப்பார் அடுப்பேற்றி எரித்துமேதான் மச்சமாய்நீர்ச்சுண்டி நெய்போலாமே ........................ (௩௬௮)

இதுவுமது

நெய்போலாம்பதத்திலேமருந்தைக்கொட்டி நேசமுடன்பூரணமாய்க் கிண்டிக் கிண்டு, நெய்போலாங்குழம்பாகும் பதத்தைக்கண்டு நேசமாய் இறக்கிவைத்து தேவிதன்னை, நெய்யென்ற வாலையைத்தான்போற்றப் போற்று தினைவாகலட்சமுருநீ தான் ஓது, நெயயான நெய்யிது தான்வலுத்துப் போசச நிகரில்லாசஞ்சீவி இதுதான்பாரே........................................ ......(௩௬௯)

இதுவுமது

பாரோதான்கரண்டிதினாமண்டலமேகொண்டால் பாநானமுன்சொன்னசனமெல்லாம்போம், பாரோதான்வாதத்தால் எழுந்தநோய்கள் பன்னிபன்னி ஓடுமேபின்பாராமல், பாரோதான்புளிகசப்பு வாதபண்டம் பற்றறவுமாகாதுதள்ளிப்போடு, பாரோதாம்தேனைகணந்தேனைப்போலே பழுதில்லை எட்டாண்டிமட்டுண்டாமே ........................ ........................................ (௩௭௦)

இதுவுமது

உண்டாகும் அந்நோய்க்கு இந்தநெய்யை உற்பனமாய்க் கொடுத்துவிடு பறந்துப்போகும், உண்டாகும்வாதபித்த சேஷ்மமூன்றும் ஒடுங்கியேமூலத்தில்கணமேயாகி, உண்டாமே உறுதிபற்றிக் கமலமெல்லாம் ஓ ஓ ஓ புண்ணுப்புட்சுரமும்வீசும், உண்டாமே உடம்பிளைக்கும் பித்தவெட்டை உத்தமமாய் போகுமம் உயர்ந்துப்போமே........................................ (௩௭௧)

இதுவுமது

உயர்ந்துப்போம்தாதுடைந்து தேகம்பாழாம் உற்பனமாய் அன்னரசம் அற்பமாகும், உயர்ந்துப்போம் * முப்பானிரண்டாண்டுமட்டும் விட்டுவிடாதிந் தகணம் ஓ ஓ பாரு, உயர்ந்துப்போம் ஆருண்டுபிராயமட்டும் உறுதிபடும்முப் பத்திரண்டிற்குள்ளே, உயர்ந்துப்போம் இந்நோய்க்கு இந்நெய்யைத்தான் உட் கொள்ளமண்டலத்தில் ஓடிப்போமே ....................................(௩௭௨)

* முப்பானிரண்டு - முப்பத்திரண்டு

இதுவுமது

ஓடிப்போம் பத்தியந்தான் இச்சாபத்தியம் ஓ ஓ ஓ நெய்யினுட அதீ தமெற்ற, ஓடிப்போம் கணரோகம் தேனைக்கூறும் உயர்ந்தகணம் இந்தநெய் யில் அயர்ந்துபோகும், ஓடிப்போம் இந்தவகை ஆருஞ்சொல்லார் ஓங்காரப் பித்தத்தின் அதீதப்போக்கு, ஓடிப்போர்யான் உரைந்தன் எவருஞ்சொல் லார் உத்தமியாள் அம்பிகைதன் அதீதப்பாரே .................(௩௭௩)

இவ்வெட்டு மொருதொடர்

கணத்துக்குவேறு

## குடிநீர்

கலிவிருத்தம்

வில்வப்பத்திரிதுத்தி வெண்காயமும் ..........................................*
நல்லவெந்தயம் ஒக்கநல்ருப்வறு ..............................................*
வல்ல நல்ல நீர் வார்த்துப்பின்சீரகம் .........................................*
சொல்லக்காய்ச்சிக்கொடுகணஞ்சோருமே........................................(௩௭௪)

கணத்துக்கு வேறு சூரியபுட

## நல்லெண்ணெய்

அறுசீராசிரியவிருத்தம்

சிறுபுள்ளடியுங் கழல் கொழுந்தும் சிறந்த அவுரிசாணைக்கி.......................*
நறுமென் பொடுதலை ஒருபிடியும் நையநறுக்கி நல்லெண்ணெய் .........*
திறமுன் அரையாய்க்கதிரோன் முன்நேரேவைத்துநீயருந்த .........................*
நறுமென் குழலாய் மேல்பூச நாதனருளால்கணந்தீரும்..................(௩௭௫)

கணத்துக்கு வேறு

## எண்ணெய்

வெண்பா

விளக்கெண்ணெவில்வம் மீ ) றவுரி சுருள்ளி ........................................*
அளக்கவகைக் கோர் உழக்காக்கி - விளக்கமுற்றுந் ...................................*

கடுக்காயுங் கூட்டிக் காய்ச்சிச் சிறுவோர்க்குக் ........................................ *
கொடுக்க கணம்போமென்றுங் கூறு.................................................. (௩எகூ)

கணத்துக்கு வேறு

## எண்ணெய்

அறுசீராசிரியவிருத்தம்

பொன்றுர்காணிவேருடனே புளியம் ஈர்க்குவேப்பீர்க்கு .................. *
யின்னே ஒவ்வொருபிடியதனில் விதமாய்க்கோழி அவரையிலைவேர்......... *
சொல்லுளும்பலமே அரையாகதுள்ள நறுக்கி எண்ணெயிலிட் ..................*
டுண்ணப் * பானுபுடம்வைத்து ஒடுங்கணமும் வாராதே ............... (௩எஎ)

* பானுபுடம் - சூரியபுடம்

கணத்துக்கு வேறு

## எண்ணெய்

கலிவிருத்தம்

* கடுகருஞ்சீரகம் கடுகுரோசணி.............. ......... ............ ...............*
விடு † வலமல்லிகை மீறும் இண்டிலே ... ........................................*
விடு முலைப்பாலினில் ஈருள்ளி உசிலையும்.......................................*
..டுவிள கெண்ணெயில் கூறு கணங்களே ................................... (௩எஅ)

* கடு - கடுக்காய் † வனமல்லிகை - காட்டுமல்லிகை

கணத்துக்கு வேறு

## நெய்

அறுசீராசிரிய விருத்தம்

..ட்டம்நல்லெண்ணெய் நெய்யுங்குறித்த சண்பகப்பூ * கந்தம் .........*
...ய அவுரிதுய்ய நிலர்குமிழ் கடுகுரோணி .......................................*
...மிச்சைமிக்க நலந்தருகிராம்புபாகம்................................................*
...ப சாறுகொண்டு எரித்துண்ணகணம்போமின்னே................(௩எக)

* கந்தம் - வெண்காயம்

கணத்துக்கு வேறு

## மருந்து

...காய் நெல்லிவேர் பட்டைக் கேள் கருவேப்பிலைச் சீரகமும்...............*
...க்காய்ப்பச்சை நெல்லுமிதான் வாகைக்கு விருகன் ஒன்றுக ...............*
...க் * குஜப்பாலிற்போட்டு முழுதும் இரவில் ஊறிடபின் ............*
...க் காலமே அரைத்துக் கடுகெப்பிழிந்து முக்காலே ............(௩அ௰)

* குஜப்பால் - முலைப்பால்

இதுவுமது

காலைமூன்று மேகொடுத்து கதிர்சாயங்காலத்தில் .......................... *
ஆலமிளகுபற்பமதாய் ஆக்கிச்சேரகமுஞ்சற்றே ................................. *
சாலைப்பொரியவேவிட்டுத் தண்ணீர் ஊற்றிகாய்ச்சிகொடு ...................... *
வேலைப்பழித்த விழியாளேமிருத்தகணமும்போமென்றே................ (௩அக)

கணச்சூடுதணிய

## எண்ணெய்

சிற்றாமணக்கின் எண்ணெய்ப்படி திறமாய் ஒன்றுவல்லாரை .................. *
சற்றுச்சாறுப் படி அரையும் தானேவெந்தயம்பலம் இரண்டு ................*
அற்றுபசும்பால்விட்டரைத்து அந்த எண்ணெயிற்கலந்து.......................*
வற்ற எரித்து * அயிரிட்டு வார்க்ககணச்சூடுப் போமே..................(௩அஉ)

* அயிர் - சர்க்கரை

கணம் இருமல் வாநாற்றத் திற்கு

## கியாழம்

மணித்தக்காளி ஒருபிடியும் மானே வெந்தயம் பலநாலு .....................*
துணித்) தீருள்ளித்தால் மூன்று தட்டெடையெல்லாம் பொன்னிறமாய் ...*
குணித்துவறுத்து இரண்டுபடி * குசம் விட்டெட்டொன்றாக் காய்ச்சி......*
கணித்து மூன்றுநேரங்கொள் கணம்வாய் நாற்றம் இருமல்போம்... (௩அ௩)

* குசம் - தண்ணீர்

இங்ஙனமுற்சொல்லிய மாந்தமுதிர்ந்து கணமாகி இரண்டுந்தொத்

தித்து மாந்தகணமாகி) வருதல் கண மாந்தமென்றுங்கூறுப

மாந்தகணத்துக்கு

## பச்சிலைச் சாறு

எண்சீராசிரியவிருத்தம்

நொச்சியிலைத் துளசியிலை மொசுமொசுக்கை நோக்கியேமூன்றுமெ ருசமனுக்கொண்டு, சச்சமுடன்பிட்டவியலாகச் செய்து சாறெடுத்து ஒருசங் குபாலகர்க்கு, இச்சையுடன் தாள் கொடுக்க மாந்தமேது எழிலானமாந்தக ணமோடிப்போகும், கச்சணிந்தபொற்சயில நகிலத்தாளேகடல் சூழ்ந்தமண் டலத்திற்கருதிப்பாரே ...................................................... (௩அ௪)

மார்தகணத்திற்கு வேறு

## கியாழம்

வெண்பா

மாந்தகணம் போம் வல்லப்பொருமல் போம் ............ *
சேர்ந்திருமல் போகுஞ் சேஷ்மம்போம் * காந்தி ............ *
துளசியும் திப்பிலியுஞ் சொல்லும் மா புல்லுரி இ............ *
களசி எரித்தருந்தக் கால் ............ (ருஅரு)

* காந்தி - விஷ்ணுக்கரந்தை

மாந்தத்துக்கு வேறு மருந்து

கட்டளைக்கலித்துறை

நன்னாறியும்சிறுகிளா * வனமல்லி நாவல் இண்டுப் ............ *
பொன்னாருஞ் சங்கம்வேர்பாவட்டை † நீலிப்பொருந்து கொஞ்சி ............ *
எந்நாளுங் காய்க்கின்ற வட்டக்கிலுப்பை இவைக ளெல்லாம் ............ *
மின்னார்பிள்ளைக்கிய மாந்தகணம்விரண்டோடிடுமே ............ (ருஅசு)

* வனமல்லி - காட்டுமல்லிகை † நீலி - அவுரி

பொருமல்மாந்தகணத்துக்கு வேறு

## மருந்து

இடுமே துளசிச் செம்முள்ளிந்தும்பை இலையுடனே ............ *
வெடுமே நற்சீரகமுங் கஞ்சாங்கோரைதை வேலையுடன் ............ *
கொடுமேநறுக்கிப்புகட்டிடச்சாற்றைக் குழவிகட்கு ............ *
விடுமேபொருமல் மாந்தகணங்கள் விட்டோடிடுமே ............ (ருஅள)

மாந்தகணப் பொருமலுக்கு

## லேகியம்

விட்டிடுஞ் சாரணைவேர்ப்பட்டைத் தட்டி விதமுடனே ............ *
கிட்டிடுஞ்தே சாபுறஞ் சமன்கூட்டிக் கிளர்பொடியாய் ............ *
மட்டிடுந் தேனில் இலேகிய மாக்கி * மதலைக்கிட ............ *
பொட்டென மாந்தகணத்தின் பொருமலும் போய்விடுமே ............ (ருஅஅ)

* மதலை - பிள்ளை

மாந்தகணத்துக்கு வேறு

## மருந்து

எண்சீராசிரியவிருத்தம்

புங்குபுளிநொச்சில் மாவேர்போடொக்கப் பொடுதலைவேலிச்கருவேப்
பிலைநாரத்தை, சத்கவுரி பொன்னவரைப்பிடி ஒவ்வொன்று தானும்இலை ஈர்க்

கெடுத்துச்சட்டியிட்டு, தங்குரோகணியுமிற் தோமமுமுடிந்து தான்போட்டுத் தண்ணீரும்நாழிவார்த்து, அங்கெரித்தவற்றமுடிந்தப்மருந்தை அரைத்துகொடுமாந்தகணம் அடங்கிப்போமே........................................ (௩அக)

மாந்தகணத்துக்கு வேறு

## நல்லெண்ணய்

கலிவிருத்தம்

போகவே இன்னம் புகலுவோங்கேளு ........................................ *
ஆக மருளின் கிழங்குடன் உள்ளி ........................................ *
தாகவே * நிம்பச் சாறுவாங்கி ........................................ *
ஏகவே எண்ணெய் எரித்து நீ உண்ணெ ........................................ (௩கம)

* நிம்பம் - எலிமிச்சை

இதுவுமது

உண்ணகணங்கள் ஓடுமேமெய்யா ........................................ *
மண்ணில்மாந்த கணநோய்ச் சேஷ்மம் ........................................ *
கண்ணிற்காணு கதரிடும்பாரு ........................................ *
எண்ணுமே இந்த எண்ணெயச்செட்டிடே ........................................ (௩கக)

மாந்தகணத்துக்கு வேறு

## எண்ணெய்

அறுசீராசிரியவிருத்தம்

புள்ளடிப் பொடுதலைச்சாற் புசிப்பதோர் தகரைச்சாறு ........................................ *
மெள்ள மிளகுத்தக்காளி மிருகருநொச்சில் * பாசி ........................................ *
வெள்ளைப்பூண்டும் வசம்புவெண்காயச் சாறு தானும் ........................................ *
தெள்ளிதாய்ச்சமன்கொண் டெண்ணெய்ச்சேர்த்தெரிதெரியுங்காலே... (௩கஉ)

* பாசி - பழம்பாசி

இதுவுமதற்கு

## கியாழம்

காலமேஇந்தஎண்ணெய்க் கடியசாயங்காலந்தன்னில் ........................................ *
சிலமாஞ்சுக்கோடோமம் சேர்ந்தபொன் முசுட்டைவேளை ........................................ *
ஏலமாம் நாட்டுமூலம் இதமாய்த்திப்பிலியுங் கூட்டி ........................................ *
கோலநீர்க்காய்ச்சிக் கொள்ளக்கொடு மாந்தகணமும்போமே ........ (௩க௩)

மாந்தகணத்துக்கு வேறு

## எண்ணெய்

எண்சீராசிரியவிருத்தம்

வல்லாரைப்பிரமிசெருப்படைநீர்முள்ளிமணக்குமணித்தக்காளி மோசு மோசுக்கை, சொல்லெரு மைத்தக்காளி துளசிதானும் துடிகோழி அவரை நெய்ச்சிட்டி யெல்லாம், நல்லதோர் வகைவகைக்குப் பிடியொன்றாக நவை இல்லா இலைகளெல்லாங் கொண்டுவந்து, கல்லதுவைத்துப்பிழிந்து படிகால் சாறுகனமான எண்ணெய்படி அரையதாமே .............................. (௫௧௪)

இதுவுமது

அரையதாம் குமட்டிக்காய் துவைத்தச்சாறும் அறியவெண் காயச்சாறும் ஒருசெரங்கை நிரையதாம் விட்டெல்லாங்கலந்துக்காய்ச்சி நேர்கடுகு பதமாகும் போதிலேகேள், கரையதாம் கார்போக அரிசிபூண்டு கருஞ்சீரம்வசம் புவசகை வகைக்குதானே; விரையதாம் விருகனென் றுநறுக்கிபோட்டுமெழுகு பதமானவுடன் இறக்கிடாயே.......................................... (௫௧௫)

இதுவுமது

கலி விருத்தம்

இறக்கியே வடிக்கட்டி இருமுற.......................................................*
சிறக்கவேகொடு * செம்மலுக்கன்புடன் ..............................................*
வறக்கிடும்நல்ல மாந்தகணமுடன் ..................................................*
திறக்கும் அட்சரம் திருமி நுண்மையே ....................................... (௫௧௬)

* செம்மல் - பிள்ளை

மாந்தகணத்துக்கு வேறு

## நெய்

அறுசீராசிரிய விருத்தம்

* வேலிப்பரித்திச மூலமுடன் வெள்ளைச்சாரணைக்குட்டிவிளா..................*
மூலிவேளைவேர் வசம்பு முதியவெள்ளை வெண்காயம்..............................*
கோலிநறுக்கிச் சாற் † மேதி கொடுத்தவெண்ணெய் தனிலெரித்து......................*
சீலமுலைப்பால் தனில்கொடுக்க சேர்ந்தமாந்தகணம் போமே ......... (௫௧௭)

* வேலிப்பரித்தி - உத்தாமணி † மேதி - எருமை

மாந்தகணத்திற்கு வேறு

## எண்ணெய்

எண்சீராசிரிய விருத்தம்

விளக்கெண்ணெய் ஒருநாழிநுணா இலைச்சாற் விருப்பமுடன் ஒருநாழி தூயினை ஆரும், இளக்கமாய் எருக்கிச்சாறுநாழி எழில்வில்வத்தின் கொழுந்

நப்பிடியிரண்டு, தளக்கருஞ் சீரகம் இரண்டு விருகன்தானும் துவர்கடுக்காய் நாலதுவும் பொடியேசெய்து, விளங்கமாம் வெண்காரம் விருகாரண்டு விப முடனே பொரித்து அதனிற்கூட்டே.............................. (ஙகஅ)

இதுவுமது

கூட்டியே கொதிக்கையிலே சரக்கைப் போட்டுக் குணமாகபதம்பார்த் துதான் இறக்கி, ஆட்டியே வடித்து வைத்துக் கொண்டு நீயும் அழகாகசங் கெடையாய்ப் புகட்டிவந்தால், வாட்டியே எழுந்தபொல்லா வியாதியான மாந்தகணஞ் சொல்லாமல் ஓடிப்போகும், காட்டியே கைப்புபுளி கவிச்சிறச் சிக் கருதாமல் பத்தியத்தில் தாயைவையே.............................. (ஙகக)

விஷமாந்தகண விக்கலுங்கு

கியாழம்

* முருவிலிநல் ஞறியொடு வெண்காயந்தான் முதிர்வசம்பு இந்துப்புக் கடுக்காய்முள்ளி, மருவியநாரத்தை எலிமிச்சைவேளை வாகான † மலைதாங் கிக்கிஞ்சகாட்நெல்லி, வருவியதோர் பூசணிபுமே பாச்சோற்றி வளர் ‡ குறட் டை § மால்கரந்தை வகை ஒன்றுக்கி, பெருகுநல்ல நீர்விட்டுக்காய்ச்சிக்கொள் ளப் பிலத்தவிஷ மாந்தகணம் விக்கல்போமே ............ .............. (சா)

* முருவிலி - வவ்வாலொட்டி † மலைதாங்கி - பங்கம்பாலை ‡ குறட் டை - காக்கணுன் . § மால்கரந்தை - விட்ணுக்கரந்தை

ஊதுமாந்த கணத்தின் குணம்

தன்வந்திரி

---

அறுசீராசிரியவிருத்தம்

தானே ஊது மாந்தகணம் தனதாய் உரைப்பேன் மடமயிலே..............*
வானேகாலுங் கண் உடம்பும் வளமாய்வீங்கிநாபுண்ணுய்....... ...............*
ஆனேகேளாய்ச் சுரம் உண்டாய் அன்னந்தண்ணீர்க் கொள்ளாது ...........*
கானேகாலுங்கைசோர்ந்துகனத்தசுவாசம் அதிகமென்றே..............(சாக)

இதுவுமது

அதிகமாய் ஊதுமாந்தகணமதுபனி ரண்டாண்டு..............................*
அதிகமாம் அந்நாள்மட்டும் ஆம் இதுநோயின்காலம் .........................*
அதிகமாய் மருந்துகேளாய் அன்புடன் உரைப்பேன்தானே.................*
அதிகமாம் தேவிவாலை அருளினுல் உரைப்பேன்கேளே..................(சாஉ)

இதுவுமது

ஊருமாந்த கணத்துக்கு

## எண்ணெய்

உரைப்பேன் எந்தன் குருவருளால் ஓ ஓ முள்ளிநீர் முள்ளி.........................*
இரைப்பேன் இண்டுவேர்க்காயம்தேங்காய் நெற்றுப்பாலுடனே.........................*
கரைப்பேன் கையான் கரந்தையுடன் கண்டங்கத்திரி வசம்பேலம்.........................*
இரைப்பேன் வெட்பாலரிசியொடு திகழுமாதளம் பழச்சாறே......... (சாரு)

இதுவுமது

பழமேவட்டத்திருப்பியுடன் பற்பாடகமும் முத்தமுடன்.........................*
தழமே ஓரிதழ் தாமரையும் தண் தாமரையும் செங்கழுநீர்.........................*
மழமே சூரத்தாவாரை வல்லாரையின் தன்சாறுடனே.........................*
வழமே விளாவின் பிசின்வாகைமருக்காரைப்பிசினுஞ்சேரே......... (சாசு)

இதுவுமது

சேரேஇலவம்பிசின்சேரு செங்கத்தாரி முருக்கன்சாற்.........................*
மாரேமாசிக்காயுடனே மகிமைகடுக்காய் அதிவிடையம்.........................*
சீரேவாலின் மிளகோடு சிவந்தசாதி பத்திரியும்.........................*
வாரே எல்லாம் வகைக்குக்கால் வளமாய்ப்பொடித்து ஒன்றுக்கே......(சாரு)

இதுவுமது

பொடித்திடு மருந்திறேடே புகழ்விளக்கெண்ணெய்வார்த்து.........................*
அடுத்ததோர் அடுப்பில் ஏற்றி அழகதாய் தீயைமூட்டி.........................*
வடித்துகடு குத்திரண்டால் வளமதாய் இறக்கிக்கொண்டு.........................*
தடுத்ததோர் தேவிமாதை தயவாய் பூசித்துப்போற்றே......... (சாசு)

இதுவுமது

போற்றிய எண்ணெய்தனைப் புகழ்ந்து துட்டெடைதான் ஈய.........................*
ஆற்றிய மூன்றுவேளை அழகதாய்க்கொள்ளச்சொல்லு.........................*
மாற்றிய புளிப்புதள்ளு வகையுற புகையுமாகா.........................*
ஏற்றிய கவிச்சுதள்ளு இவையெல்லாம் ஆகாதன்றே......... (சாஎ)

இவ்வேழுமொருதொடர்

## கணமாந்த குணம்

மாந்தகணமெனினு மொக்கும்

செடலமாம் கருவிலானசிசுவதற் கின்னங்கேளு.........................*
விடலமாம் கணமாந்தந்தான் மிகுங்குறி குணத்தைப்பாரு.........................*

அடலம தாகப்பெண்ணுள் அடவதாய் தலைக்கு எண்ணெய் ......................*
தடமதாய்த் தேய்த்துச்சுத்த சலத்தினில் முழுகினாலே................ (சாஅ)

இதுவுமது

முழுகியே அன்னம்உண்டு முழுக்கென எழுந்தபோது ......................... *
அழகிய மயக்கசோப தாபமு மிகுதியாலே ......................................*
தழுவியே படுக்கமாது சடுதியில் உறக்கங்காணில்...................................*
விழுகியே * உதானவாய்வால் விரகலாகரிதானுமே..........................(சாகூ)

* உதானன் - நாபியில் நிற்கும்வாயு

இதுவுமது

நாகுமே அவள் மோகத்தால் நாயகனோடே சேர்ந்து ...............................*
நோகவேதேகமெல்லாம் நுசிதமல்லாடும்போது ......................................*
தாகபோகத்தால் அந்த * சமானனும் வாய்வெழும்பி ...................................*
ஏகிடுங் † கமலப்புக்க இறுத்திடுங் குளுமைவந்தே......................(சாய)

* சமானன் - கந்தரக்குழியிற்சந்திடைநிற்கும்வாயு † கமலம் - பிரபைசொலிக்கும் ஸ்தானம்

இதுவுமது

குளுமையாய் ஏழுநாளும் கூறிய தலைஇடிக்கும்.....................................*
எளுமையாம் பெண்ணுளுக்கு எழும்பிடுங் கபாலசூலை ................................*
வளுமையாம் பின்னும் ஏழு வளம்பெற நாள்சென்றக்கால்........................*
வெளுமையாய் தேகம்எங்கும் வெளுத்துடன் வயிறுநொந்தே.........(சாயக)

இதுவுமது

நொந்ததால் சூதகத்தில் நோயிது என்றுசொல்வார்......................................*
பந்துபோல் நாபிதன்னில் பாசிபோல் இருக்கும் என்பார்..............................*
வெந்துதான் பித்தச்சூட்டால் மிகுத்ததோர் நோயிதென்பார் ......................*
தந்திரவாய்வினாலே சன்னியும் இதுவென்பாரோ..........................(சாயஉ)

இதுவுமது

இதுவென கணமாந்தந்தான் ஏறியேபெண்ணுளுக்கு.....................................*
வதுவெனக்கருவில்பற்றி மஞ்சனும் பிறந்துதானால்...................................*
பதுவென மாதுக்கேதான் பாலதுமிகுதியாகும்........................................*
அதுபத்து நாளுந்தானும் அமிர்தமேபெருகுந்தானே................ (சாயங)

இதுவுமது

பெருகிடும் பத்துநாளும் பின்புநாள் மேலேசென்றால் .........................*
கருகிடும் மூலச்சூட்டால் கல்லுபோல் கட்டும்பாலும் ..........................*

மருகிடும் அதுநாள்சொண்டு மஞ்சனும் இளைக்கும் தேகம்......................*
தருகிடும் வாந்திவாய்நீர் தலையது சுழற்றலாமே..................... (௬௰௪)

இதுவுமது

தலையதுசுழற்றல்காணும் தான்வருந்நாளேகேளு ....................................*
சொலையது தந்தைதாயார் கொடுமைசெய்வினைபிறலே ..............................*
நிலையநாய்க்கற்மநோய்தான் நிலைத்திடுஞ்சிசுவுங்கேதான்..........................*
அலையுறபிறந்தபிள்ளை அஃதிரண்டாண்டிபிற்பே....................... (௬௰௫)

இதுவுமது

பின்புமேவருகும்நோய்தான் பிலத்தநோர்வினையைச்சேரு...........................*
தென்புடன்தெங்காய் வாழை தித்திப்பு வடை பாயாசம் ..............................*
அன் பலாச்சுளையும் * மீசு அர்சியில் அடையுந்தானும்..............................*
நன்பதுகுழைந்தைக்கேதான் நாட்டிடில்கணந்தானுமே...............(௬௰௬)

* மீசு - மிகுதி

இதுவுமது

குணம்வருமாந்தத்தாலே * காதலன்குணத்தைக்கேளு ...............................*
துணம் எட்டுநாளைதன்னில் துலங்கிடுஞ்சத்திசகாணும் ............................*
பண வயிறிரைச்சலாகிப் பாசிபோல் பேதியாகும் ..................................*
விண விழிசுழன்றுசோர்ந்து விடவிடென்றுலரும்நாவே...............(௬௰௭)

* காதலன் - பிள்ளை

இதுவுமது

நாவதில் சலமிராது நடைமுதல் அசதிகாணும்.........................................*
காவது என்றுபாலன் கதறிடும் எடுக்குந்தாகம் ......................................*
கூவது என்றுநாலு நாளது * கோஷமாகும் ..........................................*
தாவது கணமாந்தந்தான் தாயினுல் அணுகும்வாறே.................(௬௰௮)

* கோஷம் - ஒலி

இதுவுமது

அணுகிடுமாந்தத்திற்கு அறைகிறேன் புத்தியாய்க்கேள் ...........................*
வணுகிடும் இதனைப்போக்க வைத்தியர் உலகில் இல்லை ..........................*
ரணுகிடுமைந்தனானை நாடிமுன் தாதுபார்த்து .........................................*
சணுகிடுங்கைவல்யந்தான் தாவி தந்தாதியாமே..........................(௬௰௯)

இதுவுமது

தாதியைப்பார்த்துமாந்த நோய்தனை அளவைத்தேறி ............................*
சேதியை * சாத்தியாசாத்தியச் செயலினை அறிந்துமேவி..........................*
தீதுறு கணமாந்தந்தான் தீரவேமருந்துசேரு ......................................*
மேதினியோர்களுச்கு விரும்புறேன் எண்ணெய்த்தானே ................ (சஉ0)
* சாத்தியம் - அசாத்தியம், அது - உண்மையும் - சந்தேகமும்

கணமாந்தத்திற்கு

## எண்ணெய்

விரும்பக்கேள்சித்திரமூலி விளங்கவேகுன்றி சங்கு ..................................*
திரும்பவே முல்லை முசுமுசுக்கை சிற்றாமல்லிப் பேராமல்லி..........................*
அரும்பவே * காட்டகத்தி ஆவாரைப் பொன் ஆவாரை ...........................*
குரும்பனை மணித்தக்காளிக் கொள்ளுக்காய்வேளைவேரோ...............(சஉக)
* காட்டகத்தி - வீழி

இதுவுமது

வேரினில்வகை ஒன்றுக்கு விரும்பிடும்பலம்முக்காலாய்ச் ........................*
சேருநீ ஒன்றாய் வாங்கி செயம்பெற ரவியில்மூன்று ................................*
ஆருமே அறியதானும் அடவுடன் தான உலர்த்தி .............................. *
பாரினில் உரலில் இட்டுப் பாய்ச்சிடுந் தோண்டிக்கொள்ளே ............(சஉஉ)

இதுவுமது

தோண்டியே தூணிநீரில் தூளினைச் சேருதாக்கி ..............................*
ஆண்டியே மருந்துபின்னும் அருளுவோம் புனல்முருங்கை .......................*
நாண்டியே நத்தைச்சூரி நாட்வேளை குறிஞ்சான் இண்டு..............................*
வேண்டியே நரிபயற்றம் நன்னாறிப் பிரமியாமே.............................(சஉங)

இதுவுமது

பிரமியும் தும்பை பொன்னாங் கண்ணியு மொசுமொசுக்கை .................. *
திறமையாய்வகை ஒன்றுக்கு சிறப்புடன்பலம் ஒன்றாக...............................*
நிறமையாம் இதனைச்சாறாய்ப் பிழிந்துடன்முன்புநீரில்.............................*
ஒருமையாய் விட்டுத்தானும் உசிதமாஞ்சரக்கைக்கேளே ...............(சஉச)

இதுவுமது

சரக்கில் வால்மிளகு நல்ல சடாமாஞ்சில் அக்ராகாரம் .............................. *
திறக்கவேசண்பகப்பூ செவ்வியம் மதுரம் கோஷ்டம் ............................ *
புரக்கவே கடகசிங்கி புலங்கேள் சுக்குதான்றி ...................................... *
உறக்கவே கடுக்காய் சாதிக்காயுடன்லவங்கப்பூவே...............................(சஉரு)

### இதுவுமது

பூவதுகடுக்காய்ப்பூவும் புகழதாய்வகைக்குவீதம் ......................................*
நாவது கழஞ்சிரண்டு தனிதனியாகவாங்கி ...................................... *
மாவது இளம்வறுப்பாய் வறுத்துடன் உரலில் தாக்கி...................................... *
மாவது போலேசாடி தோண்டிமுன் நீரில்தாக்கே......................................(சஉகா)

### இதுவுமது

தாக்கியே பின்புகேளு தாரமும் கெந்திவீரம்...................................... *
தூக்கியே வாளம்நாபி வெள்ளை அப்பிரகந்தானும்...................................... *
வாங்கியே புழுகுசலா சத்துடனேகஸ்தூரிவாங்கி ...................................... *
பாக்கியமாகவீதம் வகைப்வகைப் பலங்காலாமே...................................... (சஉஎ)

### இதுவுமது

பலமதாய் இடித்துத்தூளாய்ப் பாங்குடன்மூன்புநீரில்......................................*
சலமதிற் கொட்டிப்பின்பு சாற்றுறேன் இன்னங்கேளு ...................................... *
பிலம்பே ராமணக்கின் எண்ணெய்ப் பிரியமாய்ப்படிரண் டிட்டு......................................*
வலமதாய் அடுப்பிலேற்றி * வன்னியை மூட்டிடாயே...................................... (சஉஅ)

* வன்னி - நெருப்பு

### இதுவுமது

வன்னியை மூட்டிரண்டு சாமமும் எரிக்கும்போது......................................*
பன்னியநீர் எல்லாந்தான் பரிவுடன் சுண்டிப் போகும்...................................... *
மூன்னியப் படிரண்டாகும்மோசமே வராது உண்மை......................................*
கன்னியாம் வாலைதன்னைக் கருதிடு சுண்டும்பாரோ...................................... (சஉகூ)

### இதுவுமது

சுண்டிடும் பாகம்கண்டு சூக்ஷமாய் இறக்கி ஆற்றிக் ... ......................................*
சண்டிடும் வடியேகட்டிக் கருதிடுங் கலசந்தன்னில்......................................*
பொண்டிடும் வாலைதேவிப் பூசையில் வைத்துப்போற்றி...................................... *
தெண்டினை யோர்களுக்குத் தீவினை யகற்றுமென்றே...................................... (சஙய)

### இதுவுமது

அகற்றவே கணமாந்தந்தான் அலறியே போவதாக ......................................*
தகற்றவே காலைதன்னில் தாய்தனக் காறுதன்றி ...................................... *
நகத்தவே கொடுத்து எண்ணெய் நாடியேபின்பு ஏழு......................................*
தொகுத்தவே கடிகைசென்று பிறபத்தியந்தான்சொல்லே...................................... (சஙயக)

இதுவுமது

பத்தியம் லவங்கப்பூவும் பண்புநன் மிளகுங்கூட்டிப் .............. ........*
புத்தியாய் பழங்கொருக்காய் புளியது கூடச்சேர்த்து .......................... *
மத்தியே படிநீர்க்கூட்டி வன்னியிற் கொதிக்கக்காய்ச்சி ....................... *
சித்தியாய் * லவணந் தன்னைச் சிவக்கவும் வறுத்துக்கூட்டே .......... (சுஙஉ).

* லவணம் - உப்பு

இதுவுமது

கூட்டியே சாறுசெய்துக் கொண்டிட அன்னம்வெந்நீர்..............................*
காட்டியே கர்ப்பச்சூடுக் கழன்றிடும் பேதியாகும்..................................*
நாட்டினில் மங்கையர்க்கு உண்டபின் இளைப்பில்லாமல் ......................*
மேட்டியாம் பணநுங்காக விழுந்திடுங்கணைச்சூடாமே ................... (சுஙங)

இதுவுமது

சூடதுகழன்றமற்றுநாளையிற் காலே நேரம்... ...........................................*
நீடதுமிருத்துபாலன் நேர்மையை உரைக்கக்கேளு ...............................*
வீடதில் உதித்தமாந்த கணமதுவிரண்டுப்போக .........................................*
சாடிது எண்ணெய்தன்னில் சாற்றிடிற் கழஞ்சிரண்டே.................. (சுஙச)

இதுவுமது

சாற்றிட எண்ணெய்தந்து சார் ஒரு நாழிச்சென்றால்...................................*
காத்திடபேதிரண்டு தரமெனக் கழன்று ஓடும்...........................................*
மாற்றிடும் அதன்பின்புக்கேள் * மாத்திரைக்கடிகைசென்றால்.....................*
கோத்திடலாகும் அன்னம் கொடுத்திடு அமுர்தப்பாலே................. (சுஙரு)

* மாத்திரை - ஒருநொடி

இதுவுமது

கொடுத்திட இந்தவிதம் கூறின * நவநாள் எண்ணெய்...............................*
விடுத்திடும் அதனைத்தள்ளி மிகுத்துடன் நவநாட்சென்றால் ...................*
அடுத்துடன் ஓமம்தேய்த்து அடவுடன் தலைக்குவாரு...................................*
தொடுத்துடன் சிறுபருப்பும் சோறுமே கூட்டிடாயே................... (சுஙசா)

* நவநாள் - ஒன்பதுநாள்

இதுவுமது

கூட்டிடு இந்தவிதம் கோதை மாதினுக்கே பத்தியம்....................................*
நாட்டினப் போதே எண்ணெய் நளினமாய் வலுக்குங்காயம்.........................*
ஊட்டிடு சடலம்விட்டு ஓடிடுங் கணமாந்தந்தான்........................................*
தேட்டிட இளம்பாலன் தன்தேகமும் சுபஸதம் நன்றே................. (சுஙஎ)

கணமாந்தத்திற்கு வேறு

## எண்ணெய்

ஆசிரியவிருத்தம்

திறமான வெள்ளாட்டுப்பாலுமே இருநாழி திகழ்விளக்கெண்ணெய்நாழி ...*
* திருதுகளிபலம் ஒன்றிண்டங்கொழுந் தொருபிடிச்செண்பகப் பூமதுரமும்*
உறமான சாதிபங்காய் லவங்கேலம்வெள் ளுள்ளி † பத்திரிப் பூண்டுடன்... *
ஓதும் ‡ இருசீரகம் வசம்பிலாமிச்சையும் உறு § வெட்டிநன்னறியும்......... *
சிறுநாக முத்தமொடு பூலாங்கிழங்குடன் திவ்யமிகு கோரோசினை ............*
சேர்க்கடுக்காயு ரோகணிகோஷ்டமும் பச்சைத்திரு ¶ நாகமுஞ்மசனதாய்......*
சீரமாகவே அரைக்காசெடை அரைத்திடு தணலிலெரி பதமதாக............... *
தையலேபால் எண்ணெய் உண்டிடக் கணமாந்தம் தரணிவிட்டோடிவிடுமே *

* திருகுகளி - திருகுகள்ளி † பத்திரி - சாபத்தரி ‡ இருசீரகம் - நற்சீரகம் - கருஞ்சீரகம் § வெட்டி - வெட்டிவேர் ¶ நாகம் - நாகேசரம் - அன்றியுமிவ் வெண்ணெய்க் கொடுக்கும்போது முலைப்பால் கூட்டிக் கொடுக்கவும்

கணமாந்ததிற்கு வேறு

## மருந்து

வெண்பா

வால் மிளகுப் பூண்டோமம் வசம்புகருஞ் சீரகமும்..........................
சாலக் கிராம்பு சண்பகப்பூ - மால் சரியாய்.................................*
தூக்கிப்பொடுதலைச்சாற் றுவள அரைத்துக் கொடுக்க..........................*
போக்குங் கணமாந்தம் போம்.......................................(சா௩க)

கணமாந்தம்வயிற்றுளைவு பொருமலுக்கு

## பாலசஞ்சீவி மாத்திரை

ஆசிரிய விருத்தம்

சீர்கொண்ட தூத்தம் வெண்காரமொடு * ரோசினைத் திகழ்கின் றநற் † கொழுஞ்சி, சிக்குமலம் விழ் கடுகுரோகணி ‡ கழஞ்சுதிரி சேரவேசேர்த்து நன்றாய், வேர்கொண் டகத்தியிலை § நீர்விட்டரைத்துமே மெள்ள ஒருசாமம் மட்டும், விசைகொண்டமுத்தி அரை சிறுபயறுபோலவே மேன்மைபெற உண்டைசெய்து, கார்கொண்டகுழலழகுபெண்ணணங்கேயமுற் காய்ந்தநீர் அநுபானமாம், கற்கம் அறி நல்லதொரு பத்திரிப் ¶ புட்டிலுங் கன்னி இளமாதுசித்ர வார்கொண்ட மென்முலைப்பாலிலும் இடுவதிது வல்பிணிச்சகலசுரமும், வயிறுளைவுபொருமல்கணமாந்தமும்வாராது வாலசஞ்சீவியென்றே... ... (சசய)

* ரோசினை - கோரோசினை † கொழுஞ்சி - கொள்ளுக்காய்வேளை ‡ சழஞ்சுதிரி - மூன்றுசழஞ்சு § நீர் - அகத்தியிலைச்சாறு ¶ புட்டில் - புட்டிவெல்லம்

கணமாந்தத்திற்கு வேறு எண்ணெய்

## தேரையர்

கலிவிருத்தம்

மாற்றிடு பொன்னுங்காணி வல்லாரையோ ............ *
டேற்றிடும் புளியாரைக் கீழ்க்காய் நெல்லி ............ *
சேர்த்திடுந் துளசிச்சிறு புள்ளடிப் ............ *
போற்றிடும் வறட்பூலா தகரையே ............ (௪௪௧)

இதுவுமது

தகரை ஓரிதழ்த் தாமரைப் புங்கிலை ............ *
* அவரைத் தூதுவளையம்மான்பச்சிலை ............ *
துவரைப் பீர்க்கிலைச் சூரைவெண்ணொச்சிலை ............ *
அவரைச் செந்நாயுருவிக் காய்வேளையே ............ (௪௪௨)

* அவரை - கோழியவரை

இதுவுமது

வேளை * முத்திருக்கன் செவிஆடுணைப் ............ *
பாளை † வேலிப்பரித்தி மிளகுதக் ............ *
காளி ஆடாதோடைக் கருநொச்சில்நாய் ............ *
வேளைச்சின்னி வேம்பு ‡ வட்டப்புலவிதே ............ (௪௪௩)

* முத்திருக்கன்செவி - நிலக்கடம்பு † வேலிப் பருத்தி - உத்தாமணி
‡ வட்டப்புல் - காவட்டம்புல்

இதுவுமது

புல்லிது கணப்பூண்டு துணைத்துளிர் ............ *
சொல்லிது * பரிவாலிச் சிறுகீரை ............ *
வெல்லிது † மொசுக்கைவேர் முருங்கிலைச் ............ *
சொல்லிது பொன் முசுட்டையும் பாங்கிடே ............ (௪௪௪)

* பரிவாலி - குதிரைவாலி † மொசுக்கை - மொசுமொசுக்கை

இதுவுமது

பாங்கிடத்தி நரிப்பயற்றங்கொடி ............ *
நீங்கிடத்தி நிலக்குமிழ் பூவரை ............ *
[illegible]த்தி சுரைவி [illegible]ர்காந்திப்பும் ............ *
[illegible]த்தி [illegible]குப்பி தாக்கிடே ............

இதுவுமது

தார்க்கிடாய்ச் சங்குதாளி நாவல் துளிர் ........................................*
மேக்கிடாய் கண்டங் கத்திரிவில்வமும் ........................................*
தேக்கிடாய் சிந்தில் குட்டிவிளாச்சமன் ........................................*
ஓக்கிடாய் இடித்தோர் படிச்சாறுமே ........................................(௪௪௫)

இதுவுமது

சாறுஞ்சீரகங் கிராம்பு வசம்போடு ........................................*
சோறு உள்ளியுந் திப்பிலி பற்படம் ........................................*
ஊறும் மேகம் கம்போகணி மஞ்சளும் ........................................*
பாறும் * பூவந்திப் பழமும் சருள்ளியே ........................................(௪௪௭)

* பூவந்திப்பழம் - மணிப்புங்குப்பழம்

இதுவுமது

உள்ளிடாமை ஓமங் கருஞ்சீரகம் ........................................*
வள்ளி * டாழிநுரை வகைக்கேபலம் ........................................*
தெள்ளிடாட்டிச் சிற்றுமணக் கெண்ணெய்சேர்த் ........................................*
துள்ளிடாட்டிப்படிதோற்றிரண்டேற்றிடே ........................................(௪௪௮)

* ஆழிநுரை - கடல்நுரை

இதுவுமது

ஏற்றிட்டே எரித்தே இறந்தே உடன் ........................................*
தோற்றிட்டேழ்தினந் துட்டெடை உள்ளூக்கு ........................................*
வாற்றிட்டே கணமாந்தம் ஓர் ஏழையும் ........................................*
காற்றிட்டே புளி உப்பில்லைக் கண்டிடே ........................................(௪௪௯)

இவ்வொன்பது மொருதொடர்

---

## நீர்க்கணமாந்தகுணம்

---

அறுசீராசிரியவிருத்தம்

இருமும்மூக்கில் நீர்வடியும் இடையில் இடையில்சுரங்காயும் ........................................*
பொருமி வயிறு இரைச்சலுண்டாம் போதப்பலவிதமாய்க்கழியும் ........................................*
சொருகுங் கண்ணும் உடம்புமுகம் சோர்ந்துதலையும்புரட்டலுண்டாம் ........................................*
மருவிமயக்கம் உண்டாகும் வருநீர்க்கணமாந்தமுமே ........................................(௪௫௰)

நீர்க்கணமாந்தம் கணமாந்தமெட்டு குடற்படுவன் நீர்ப்பாடு சேர்ப்பப்பாடு

நாவ ரக்ஷி சுரம் குலையெரிவு வெப்பு தோஷத்திற்கு

## அமூர்தாதிக்குளிகை

---

எண்சீராசிரியவிருத்தம்

அருளினேர் அமூர்தமெனுங்குளிகைதானுஞ் அதிமதுரஞ் சண்பகப்பூவி லிமோடு, திருவுகோரோசினையுஞ் சாத்திரபேதி சிறந்தவெட்டிவேர்ச்கோஷ்டம் மாசிப்பத்திரி, தருவெனவே விலாமிச்சம் வேருங்கூட்டிச் சரியாக ஆதொன்னை யிடைச்சாறுவிட்டுப், பருவமதாய் ஒருசாமம் அரைத்துக்குன்றிப் பருமனும் முலைப்பாலிற்பருகிடவோ.................................................(சருக)

இதுவுமது

பருகிடில் ஓர் உண்டைதனை முலைப்பால்தன்னில் பசைத்துவருங்கண மாந்தம் எட்டுந்தீரும், திருகுகுடல் படுவன்நீர்ப்பாடுந்தீரும் சேர்கர்ப்பப்பாடு நாவரக்ஷித்தீரும், குருவெனவே இக்குளிகைசுரமுந்தீரும் குலையெரிவு வெப்பு முதல் தோஷந்தீரும், அருளெனவே முனியுரைத்தார்பாரின்மீது அமூர்தாதிக் குளிகைதனை அரைத்திடாயே........... .. ..............................(சருஉ

இயக்கத்தின்கணமாந்தம் பேர்மாந்தத்திற்கு

## கோடாசுழி தைலம்

இதை தெற்கத்துகணமாந்தமென்பர்

---

வசம் போமம் வெள்ளுள்ளிக் காயந்தானும் வகைவகைக்குக்கால்பல மாய்நிறுத்துக்கொண்டு, நிசப்பெறவே தூள்செய்துவைத்துமேலும் நினைவாக வேப்பெண்ணெய்ப்படி அரைக்குள், தசப்பெறவே தூள்போட்டு ஒருநாழித் தான் தணலிலேகொதிக்கவைத் தாறுநாளும், கசம்பெறவே ரவியுடந்தான் வைத்தபின்பு கனத்ததிப்பியுடன்வேடுக்கட்டிக்கொள்ளே............... (சருங)

இதுவுமது

கொள்ளவே குழந்தை களின் நிதானம்பார்த்துக் கொடுத்து வரதெற் கத்துக் கணந்தானேது, உள்ளவே மாந்தபோர்மாந்தமேது ஊழ்வினையால்வந் தசர்வமாந்தந்தீரும், மெள்ளவேதாய் தன்னைப்பத்தியத்தில் வைத்துமிளகுநீர் ச்சாதமிட்டுண்ணச்சொல்லு, வள்ளியமாம் பொதிகைமுனி அருளிறலே மா லூநோய்கட் பறந்து விடும் வன்மைப்பாரோ.................................(சருச)

சிங்கிமாந்தகணத்தின்குணம் அதேவிஷமாந்தகணம்

## தன் வந் தி ரி

பேரானசிங்கி மாந்தகணத்தைக்கேளு பெருமையாய் உந்திதணல்மே ...பி, வாரான ஈரலுமே புண்ணாய்வந்து வலுமையாய் சுவாசமேல் ...ம், சீரான தேகஞ்சமூலங்காய்ந்து சிவசிவாதழல்போலே சரும்... ...சமது திக்குமுங்காடி வெகுளியாய்மயக்கிவிக்குஞ்சிங்கிகணம் பாரே ............................................................ (௪௫௫)

இதுவுமது

சிங்கிகணப் பிள்ளைகட்கு சுரமிகுந்து சிவசிவாமாந்தசுரமிது தானென் ... சிங்கிகண மாந்தமிது ஏதெல் ருற்கால் சீரகற்றிப்பதின் மூன்றுப்பிராய ம..., சிங்கிகணமாந்தமிது இருப்பிடந்தான் சிறுவனென்ற பிள்ளைக்குச்சு ...ருரும், சிங்கிகணம் ஒழிவதற்கு அமுர்தாதிதன்னைச் சுதிணமதிலே வின் ருகிறேன் இதனைப்பாரே ............................................................ (௪௫௬)

சிங்கிமாந்தகணத்துக்கு

## அமுர்தாதி குளிகை

இதனைப்பார் அதிமதுரம்கோஷ்டம் ஏலம் இனியகோரோசினையும் சாஸ்திரபேதி, இதனைப்பார் சண்பகப்பூமாசிக்காயும் இலவங்கப்பூவுடனே வகைக்குங்கால்தான், இதனைப்பார் இவையெல்லாங் கல்வத்திட்டு எழில்வெட்டிவேர் மாசிப்பத்ரிவேரும், இதனைப்பார்க் கருந்துளசி விலாமிச்சோடு இன்பமதாய் நால்வகையுஞ்சாற்பிழிந்தே ............................................................ (௪௫௭)

இதுவுமது

பிழிந்துமேகல்வத்தில் வார்த்தரைத்துப் பிலமாக இருசாமம் விடாமல்அரைட்டு, கழிந்துமே குன்றிப்போல் உண்டைசெய்து சன்மணியே நிழல் உலர்த்திச் செப்பில்வைத்து, வழிந்துமே வாலைமனோமணியைப் போற்றிவ ...யான மாசிபத்திரிக் கியாழந்தன்னில், அழிந்துமே குளிகையொன்று கொடுத்துப்போடு அர அராமுன்சொன்ன மாந்தம்போமே............ (௪௫௮)

இதுவுமது

மாந்தம்போம் லவங்கப்பூகியாழந்தன்னில் மகத்தானமாந்சுசுரம்வாந்திதீரும், மாந்தம்போம் முலைப்பாலில்கொடுப்பீராகில் வதைத்துவருங்குடல்புடுவன்தீர்ப்பாடுதீரும், மாந்தம்போம் கரப்பான் நாவரகூதித்தீரும் வயிற்றெரிவு அன்னவிடாய்ச்சுரமுந்தீரும், மாந்தம்போம் உப்பிசமும் இருமல்போகும்மகத்துவமாம் அமுர்தமெனுங்குளிகைபாரே ............................................................ (௪௫௯)

இவ்வைந்துமொருதொடர்

### இதுவுமது

பிள்ளைகேளாய்ச்சுழிகணந்தான் மேவிசுவாசம் இருமலுண்டாம் ............*
பொன்னேமுகமும் மார்புகண்டம் புடைத்துக்காணும் உண்மையிது............*
சொன்னேம் வயிறு ஈரல் நெஞ்சு தொண்டைநாவுமிவைவெந்து ............*
* அன்னைமுலைப்பால்குடியாமல் அலறி அழுதும் அறிவாயே...........(சசரு)

* அன்னை - தாய்

### இதுவுமது

இருமுஞ் செருமும் பேர்மூச்சும் இருகைகாலுங் குளிர்ந்திருக்கும்.........*
பொருமும் வயிறுதான் ஊதும் பொல்லாச்சுரமும்மிக உண்டாம்...............*
அரிவைமுலையுங்குடியாது அயர்ந்தே தப்பி அலறியிடும் ....................*
சொருகும் கண்ணும் நாவரண்டேச் சுழிகணஞ்செய்யுங் குணமிதுவே... (சசசு)

### இதுவுமது

ஊர்முலையாரோகேளீர் மண்ணில்பிறந்தபாலகர்க்கு .........................*
ஈரல்வெந்து சுழிகணமாய் இருமலுண்டாய் எதிரிளைப்பாய்......................*
நாளைப்போலே அதுதுவண்டு நாசி இரண்டும் எடுத்தெறியும்............ .....*
பாரிலுள்ளபாலகர்க்குப் பரிந்தே இதனைப்பாரீரோ ..................... (சசஎ)

### இதுவுமது

மார்பிலே சுழியாய்வாங்கும் வாயினில் நுரையுங்கோழை .....................*
சேரிலே பிள்ளைவாந்திச் செய்யுமே கழியும் காயும் ...................................*
மேனியே முகத்தில் மஞ்சள் முன் சிலைமயக்கும் நோகும்.............................*
பாரினிற்பாலகர்க்குப் பரிந்துமே பார்த்திடீரோ............................... (சசஅ)

சுழிகணத்துக்கு

## சஞ்சீவி எண்ணெய்

கட்டளைக்கலிப்பா

பத்துங்காசெடைசண்பகப்பூவுடன் பகருஞ்சாதிபின்பத்திரிகாசெடை முத்துங்கேரளைக்காசெடை ஆவினில் முளைத்தெழுந்த கோரோசினை முன்று மாம், எத்துங்களிவைப் பொடியாய் விளக்கெண்ணெய் பாகைதில் ஓர் படிதன்னிலே, சற்றுத்தீயிற் கொதியிட்டிறக்கியே தனயனுக்கிடுந்தான் விருந்தேனுமே,................................................................................(சசக)

இதுவுமது வேறு

## குடிநீர்

மேகளுந்தூட்டெடை இட்டிடவே சுரம் கிறுகிறென்னவேவாங்குஞ் சுழிகணம் *
சூழுநோயும் இருமலும் தீர்ந்திடும் சுழிகணச்சஞ்சீவி இதாமென்னே .........*
வாழும் உள்ளிவசம்புடீ உசிலைபின் வாய்த்தப்பட்டடை இம்மூன்றும் நறுக்கியே *
* தாழிநீரினில் ஊறி இறுத்திடு தணியுமே சுழிதன்கணம் இன்றுமே...(சஎம)

* தாழி - மிடா

சுழிகணத்துக்கு வேறு

## எண்ணெய்

இண்டு * காரி † இம்பூரலின்வேர் ‡ கடுஇதைபொடித்துமெண்ணை யிலேற்றியே, மண்டுபாலுபுடம்வைத் தெடுத்ததை மத்லையோர் சுழிமாற்றும் அறுக்கவே, கொண்டகுன்றிமணிவேர் இலுப்பைவேர் கூர்முசுக்கைத்துளசி நற் § கூவிளை, கண்டுக்கொண்டுமுன்போலேபுடமிட்டுக் கலந்துண்ணச்சுழிகாறுதுபாருமே ............................................................ (சஎக)

* காரி - கண்டங்கத்திரி † இம்பூரல் - சாயவேர் ‡ கடு - கடுக்காய்

§ கூவிளை - வில்வம்

இதுவுமது வேறுகுடிநீர் வேறு

## எண்ணெய்

பாரும் ஈருள்ளித்துருசுடன்வெந்தநீர் பாலிறச்கி இலுப்பைப்புண்ணாக் கையும், நீரிலேகரைத்தேகுழவிக்கிய நீங்கும் இருமல் இளைப்புசுழிகணம், சாரு * தூது துளசி நுணு சங்கு கருதும் இண்டைப்பொடுதலைச்செம்முள்ளிச், சாறும் ஆவின்நெய்சீரக கற்சமும்தணலெரித்திடசுழிகணமாறுமே ...... (சஎஉ)

* தூது - தூதுவேளை

சுழிகணம் உப்பிசம் கோழைக்கட்டு இளைப்புக்கு வேறு

## மருந்து

அறுசீராசிரியவிருத்தம்

குப்பைமேனிச்சாற்றில்உப்பைக் கூடக்கலந்துவேப்பெண்ணெய் ........... *
செப்பமாகமத்தித்து தேனைமூன்றுநாட்புகட்ட ................................... *
தப்பில்லாமலே இளைப்புதானே சுழிகணம் உப்பிசமும் ........................ *
துப்பு நெஞ்சிற் கோழையுடன் துயரங்கெட்டு ஓடுமென்றே ............ (சஎங)

சுழிகணத்துக்கு வேறு

## எண்ணெய்

முலைப்பால் கடுக்காய்க் காட்டுமல்லிமுதிர்ந்த ஆவின்புல்லுருவி ...............*
இலைப்பால் இண்டு ஈருள்ளி இவையாமணக்கின் எண்ணெயுடன் ............*

துலைப்பாலகருக்கெரித்ததனைச்சொன்னபடியேகொடுத்திடவே.................*
சொலிப்பாய் வந்த சூழிகணங்கட் சொல்லாதோடிப்போய்விடுமே ...(௪௭௪)

சுழிகணத்துக்கு வேறு

## எண்ணெய்

சுடுக்காய்க்காட்டு மல்லிகையுங் கடியக் * குமரிவெந்தயமும் ....................*
மிடுக்காய் சீரகம் இத்துடனேமேவுஞ்சாறனை சருள்ளி ... .......... ........*
முடுக்காய் ஆமணக்கெண்ணெயுடன் முடுகாதெரித்துங் கொடுப்பீரேல் ......*
துடுக்காய் வந்த சுழிகணந்தான் சொல்லாதோடிப்போய்விடுமே......(௪௭௫)

குமரி - கற்றாழை

சுழிகணத்துக்கு வேறு

## நெய்

நாடுந் துளசி * தூதுநுணநல்லச்சங்கும் இண்டோடு.............................*
சூடும் பொடுதலைச்செம் முளிச்சாற் புகழும் ஆவின்நெய்தனிலே ............*
சாடும் தணலில் இட்டுநன்றாய்த் தானேகொடுக்கவேமாறும்.......................*
ஆடுஞ் சுழிகணமானதெல்லாம் ஆறிப்போகுங்கண்டாயே ................(௪௭௬)

* தூது - தூதுளை

சுழிகணத்துக்கு வேறு

## எண்ணெய்

நந்தியாவட்டவேரு நல்லநாய்த்துளசிவேரு..................................... *
கந்தியசிவேதைவேரு காட்டுமல்லிகையின் வேரு ................................ *
அந்தியபுன்னைக்காயின் அளவதைத்திப்பால்கேளு......................................*
சுந்திரகண்டங்கத்திரி தூதுளைசின்னியாமே .................................(௪௭௭)

இதுவுமது

சின்னிபுமணித்தக்காளி செழித்தகொட்டைக் கரந்தை..............................*
கொன்னியக் குப்பைமேனிக் கோழியின் அவரைப் * பத்ரம்..................... *
இன்னிவை சமனதாக இடித்ததைப் படிச்சாறாகும் ...... ............................*
மின்னியமாசிலாத விளக்கெண்ணெய்ப் படியொன்றுமே.....................(௪௭௮)

* பத்திரம் - இலை

இதுவுமது

ஒன்றதாய்க்கலந்தெரித்து உண்மையாய்வடித்துவைத்து .............................*
நான்றியபாலகர்க்கு துட்டெட்டைப்புகட்டவேதான்.........................................*
கொன்றிடுஞ்சுழிகணத்தைக் குலவியதொண்டைக்கட்டு ............ ............*
என்றதுந்தீரும்பத்தியம் இப்படிக்காத்திடாயே .................................(௪௭௯)

### இதுவுமது

கட்டிக்கம்பிப் பிசினியொரு கழஞ்சுகூட்டிக் கலந்தரைத்து மெழுகுபத வடித்துக்கொண்டு, திட்டமுடன் அருந்திட அட்சரங்கட் காய்ச்சல் சேர்ந்த தி னொன்கணமுந் திசைக்கெட்டோடும், வட்டதனப் பெண்ணரசே பத்திய கேள் வகையான ஈருள்ளி முருங்கைக்கீரை, சட்டமுடனே உண்ணச்சொன் னன் பாலசுஞ்சியிந்த எண்ணெய் சபலந்தானே......................(சூ௨௧)

(௰அ) கணத்திற்கும் வேறு

## நந்தீஸ்வரர்சொன்ன நெய்

தேறவேயின்னமொரு கருவைக்கேளு சிவனெனக்கு சொன்னபடி சொல்லுகின்றேன், ஆறவேபாதிளைதான் சமூலம்வாங்கி * அமுதசர்க்கரை சேர்த்துக்குழம்பதாக்கி, ஊறவே † ஆவெண்ணெய்கூடச் சேர்த்து உறப்பா ப்பதமாய்க்கின்டிவைத்து, கூறவேசாதிக்காய் சாதிபத்திரிக்குணமுடனே ஏ லரிசிக்கூடப்போடே ........................................................ (சூ௩௰)

* அமுதசர்க்கரை - சீந்தில்சர்க்கரை † ஆவெண்ணெய் பசுவெண் ணெய்

### இதுவுமது

போட்டதனை அனலில்வைத்து வெதுப்பிநீதான் புனிதமுடன் மெழு கபதம் வடித்துக்கொண்டு, நாட்டதனை குழைந்தைகட்கு கரண்டி யிட்டால் ந ருமேநோய்களெல்லாம் நாற்பத்தொன்றில், பூட்டதனை இதுபூட்டு கணங்க டகெல்லாம் புகழாக சொல்லிவிட்டேன் அறிந்துபாரு,தேட்டதனைத்தேடாதே நெய்யைத்தேடுதிறந்துவிட்டேன் குழைந்தைகட்கு இதுநெய்யாமே....(சூ௩௧)

### இதுவுமது

நெய்யதனைக்குழைந்தைகள்தான் கொண்டுதானால் நேரானகணரோ கம்பதினெட்டும்போம், பொய்யதனைச்சொல்லவில்லை தோஷம்போகும்புது மையுள்ளவயிற்றிரைச்சல் கழிச்சல்போகும், பையதனைப்பயல்களுக்குங்கொடு க்கலாகும் பருவமுள்ள குழைந்தைகட்குங் கொடுக்கலாகும், உய்யதனை ஒளி யாமல் சொல்லிவிட்டேன் ஒருவருக்குஞ்சொல்லாமல் ஒளித்துவைய்யே.......*

இம்மூன்று மொருதொடர்

மாந்தம்(௰அ)க்கும் - கணம்(௨௰௧)க்கும்- வேறு

## எண்ணெய்

### அறுசீராசிரிய விருத்தம்

பொன்னுங்காணி யிலையுடனே புகழுந்துளசித் தகரையிலை ....................*
மின்னார்க்கீழ்வாய் நெல்லியிலை வெண்ணொச்சியிலையும் சின்னியிலை ............*

பன்னூர் நாயுரிவிபினிலையும் பகரம்மான பச்சரிசிபிலை ...................... *
நன்னூர்க்கரு நொச்சிபினிலையும் நாடும் இலைகளெட்டோன்றே ...... (சூகூரு)

இதுவுமது

ஒன்றேநாவலின் கொழுந்துஉயராவாரையின்கொழுந்து ......................*
வென்றேவேப்பங்கொழுந்துடனேவிளங்குஞ் சூரையின்கொழுந்து ...........*
மொன்றேமுடக்கொற்றான் கொழுந்து முருங்கைத்துளிர் புங்கன் கொழுந்து*
குன்றேரனையதனத்தாளே கோதில்லாதகொழுந்துகளே.. ............ (சூகூச)

இதுவுமது

கொழுந்துவகைகள் ஓரேழுகூறும் ஓரிதழ்தாமரையும் ...................... *
வழும் புளியாரை வல்லாரை வாகாகசிறுப்புள்ளடியும் ......................*
எழுந்த தரிபயற்றங் கொடிதான் இண்டநதண்டுமுசுமுசுக்கை..............*
விழுந்த அகத்திப்பழுப்புடனேவீறுசீந்தில்கொடியாமே..................(சூகூரு)

இதுவுமது

ஆமே ஆடாதோடை செழும் ஆடுதின்னாப்பாலையொடு ..........................*
காமேவிட்ணுக்கரந்தையுடன்கதித்தமுட்காவேளையுமே ......................... *
தாமே இவைகட் பதின்மூன்று தரும் ஆவாரைதன்வேரும்...................... *
நாமேசொன்னோம் விடதத்லைவேர் நல்லநிலக்குமிழின்வேரோ......... (சூகூசா)

இதுவுமது

வேரோசிறுசீரையின்வேரும் வில்வவேர் உத்தாமணிவேர் ................... *
தாரோமிளகுதக் காளிவேர் நைவேளையின்வேர் சங்கன்வேர் ................*
காரோகண்டங்கத்திரிவேர் களைந்தநாய் வேளையின்வேரும் ...................*
பாரோகுட்டிவிளாவின்வேர் பருசங்கங் குப்பியின்வேரோ ............... (சூகூஎ)

இதுவுமது

குப்பிபதின் மூன்றும்வகைக்குக் கொள்ளும் ஒவ்வொரு பிடியாக ............*
வைப்ப வேர்வகைக்கியாழமிட்டு மற்றவையெல்லாஞ்சாற்வாங்கி -..........*
தப்பிசிற்றமணக்கெண்ணெய் தானேபடியொன்றதில்சொன்ன...............*
ஒப்பிசகியாழம் சாறுகளும் ஊற்றிக்கடை சரக்கைக்கேளே............ (சூகூஅ)

இதுவுமது

கேளே * கமடத்தோடோமம் கிளருங் கடல்நுரை சீரகமும்......................*
தாளேதிப்பிலி ரோகணியும் சார்ந்தகிராம்புகருஞ்சீரம் .........................*

நாளோதிகழ்பற்படகமொடு நல்லப் * பூவர்திப்பழமும் ............ *
ஆளேவசம்பு பெருங்காயம் ஆனசெங்கதாரிப்பட்டை ............ (௬௩௯)

* கமடம் - ஆமை † பூவர்தி - மணிப்புங்கு

## இதுவுமது

பட்டையிவை வகைபதின்மூன்று பகரும்வகைக்குக் கழஞ்சொன்று ........*
இட்டவஸ்திரகாயஞ் செய்தெண்ணெயிலிட்டு அடுப்பேற்றி ............*
வட்டமெழுநுபத்திறங்கி வடித்தே அந்திச்சந்திபுமே ............*
துட்டெடைஎண்ணெய்உட்கொள்ளத்தலையும்நோய்கட்சொல்வோமே (௬௪௰)

## இதுவுமது

சொல்வோம்அட்சரகணமுடனே தூடுக்காய்விடாமலே வலிக்கும் ............*
வல்லக்குமரிந்தலைநோயும் வரட்கணமுடனே சுழிகணம்மும் ............*
வெல்வோமாந்தகணமோடு மீறுநீர்க்கணம் இசுவுகணம் ............*
புல்வோம் கோட்டாவிக்கணமும் போராடியமுக்குக்கணமே ............(௬௪௧)

## இதுவுமது

முக்குங்கணமுமுறுங்குகணம் மூலகணமும்வலிகணமும் ............*
சொக்குஞ்சொருகு கணத்தோடே துஷ்டச்சயித்தியக் கணமும் ............*
ஒக்கும்பொருமல் மலக்கணமும் ஊதுக்கணமும் விக்கல்கணம் ............*
தொக்குமிகுத்த தூங்குகணம் சொல்லிவையெல்லாந்தீர்ந்திடுமே...... (௬௪௨)

## இதுவுமது

தீருந் * தசநாட்கொருதரந்தான் சேர ரண்டுதுட்டெடைகொடுத்து ............*
பாருஞ்சகல வியாதியுமே பதரியோடும் பத்தியங்கேள............*
காருங்கவிச்சுப் புளியிறைச்சிக் கரப்பான் பண்டந்தள்ளிவிடு............*
சாருமிளகுநீருஞ்சோறும்சாப்பிடகைவல்லியமாமே............ (௬௪௩)

* தசநாள் - பத்துநாள

## சகலகணத்திற்கும் - வேறு

## கியாழம்

### எண்சீராசிரிய விருத்தம்

நீர்முள்ளி நருள்ளித் * திரிபலாதி † நேராக பசு மோரிற்கியாழஞ் செய்து, ஏரெட்டொன்றுப் காய்ச்சியிறக்கிக்கொண்டு இருப்புமொந்தைதன்னிலே வார்த்துவைத்து, சிராகஒருசங்கு இரண்டுசங்கு தினமு கொடுக்க தீராத

கணமுந்தீரும், சார்ந்தலருங்குழல்மடவாய் மருந்திறேடு சங்கம் வேர் ஒச்சச் சாரித்துக் கொள்ளே ......................................................(கூசச)

* திரிபலாதி - கடுக்காய் - தான்றிக்காய் - நெல்லிக்காய் † நேராக - சரிநிறையாக

சகலகணத்திற்கும் வேறு

## நெய்

அறுசீராசிரிய விருத்தம்

காரைநற்கனியின் சாறு கரும்பினிற் * பஞ்சதாரை..............................*
ஒரொருவகைக்குநாழி உடனே நாழி † ஆப்பால் ..............................*
சேரவேவிட்டுப்பாகாய்த் திரளநெய்யுழக்குவிட்டு ..............................*
சாரநாளெரித்துட்கொள்ள சகலமாகணமும்போமே .................... (கூசரு)

* பஞ்சதாரை - சர்க்கரை † ஆப்பால் - பசுவின்பால்

சகலகணத்திற்கும் வேறு

## எண்ணெய்

எண்சீராசிரிய விருத்தம்

விளக்கெண்ணெய்ப்படியொன்றுதுமட்டிக்காய்தான் வெள்ளைக்சோல் சுட்டதன்சாற்படிதான்காலும், முளக்கமெனுந் தக்காளிச்சாறுகாலும் முதிர்ந்தவெண்காயச்சாறுபடிதான்காலும்,இளக்கிஎண்ணெய்தனில்போட்டுக்கடைமருந்து இயம்புகிறேன் வால்மிளகு பணம் அரைக்கால், அளக்க கோரோசினையும்பணம்அரைக்கால்அறையுங்கஸ்தூரிமஞ்சள்வெந்தயமாமே.......... (கூசகூ)

இதுவுமது

வெந்தயந்தான்சிற்றரத்தைப்பேரரத்தை விதமானகருஞ்சீரம் லவங்கப்பட்டை, சிந்தனையில்லாபெரிய லவங்கப்பட்டைத் திறமானமா காணிப்பணந்தான்தூக்கு, முந்தவே இடித்தெண்ணெய்யதனிற்போட்டு முச்யமாட்பதத்திறக்கிச்கரண்டிக்கொள்ள, வந்தகணஞ்சகல முந்தான்போகுமென்று வசனித்தார் மிளகுநீர்ச்சாறுஞ்சோறே,................................................. (கூசஎ)

சகலகணத்திற்கும் வேறு

## எண்ணெய்

அறுசீராசிரியவிருத்தம்

செப்புநெஞ்சில் சிறுபுளடிசிறிய அம்மான்பச்சரிசி ..........................*
கொப்புத்தகரைவேருடனே கூறும்நரிப்பயற்றங் கொடியும் ..................*
அப்பும் அகத்திப்பட்டையினம் அருவெண்காயம் இவைவகைக்கு ............*
நட்பக்கழற்சிக்காயளவு நறுக்கிவிளக்கெண்ணெயுமாமே................(கூசஅ)

இதுவுமது

ஆமே அணைக்கால்படிதனிலே அன்பாய் போட்டுத்தான்கலக்கி ............ *
தாமேசூரியபுடமாகசாமம் இரண்டு தான்வைத்து ......................... *
தோமேதுட்டெடையீந்தாற்கால் தோஷகாய்சகல கணந்தீரும் ............... *
பாமேமுக்கல்நின் றுவிடும் பத்தியமாகவைப்பாயே ...................... (கூசுக)

## கணவகுப்புமுற்றிற்று

இங்ஙனஞ்சொல்லிய கணங்கள் பாலகர்க்குபதினாறு
பிராயமட்டும் இருக்கு மென்பர்
அகத்தியர் திருவடிகளே
சரணம்



இஃது

# கரப்பான் வகுப்பு.

## பதினெட்டுக்கரப்பான்களின் பெயர்கூறுகின்றார்

எண்ராசிரியவிருத்தம்

செங்கரப்பான்அனல் கரப்பான் தானும் மண்டைச் சிரங்குபண்ணும் அரிகரப் பான் பொரிகரப்பான், அங்கமதிலெழுகரப்பான் தானுமிக்க அளராம் உதிரக்கரப் பான் கட்டியோடு, பொங்கமாய் வீங்கியகரப்பானுந்தான் புகலரிய சட்டைதடிவெடிகரப்பான், சிங்கமுக எரிகரப்பான் வாதபித்தச் சேஷ்மத்தோடே கரப்பான் பதினெட்டாமே.................................. (கூடுல)

## வாதகரப்பான்குணம்

வெண்பா

இயம்பு திமிர்க்காய்ச்சல் இயங்குவிக்குந் திரக்ஷி.............................*
தயங்குகணந்தோன் றுந் தான்கரப்பான் - நயம்படவே .......................*
வந்தூறுமாக்கணத்தில் வாதக்கரப்பான் ...........................................*
செந்தாமரையாளேசெப்பு .............................................(கூடுக)

## பித்தக்கரப்பான் குணம்

செப்புந்தலைநெறித்து சேரும்காய்ச்சல்தினவு ................................*
ஒப்பச்சிவந்தெரித் துட்டணமுந் - தப்பாமல் ..............................*

வாந்திவரும் நீர்ச்சிவக்கும் வந்துமலஞ் சிக்கிவிடும்...............*
சேர்ந்தபித்தச் செங்கரப்பான் திண்ணம்.............................. (சுருஉ)

## சேஷ்மகரப்பான் குணம்

திண்ணஞ்சேஷ்மக் கரப்பான் செய்யும்வகைசேரு ..........................*
டண்ணும் வாயிற் கிரந்திப்பற்றிவிடும் எண்ணரிய ..........................*
மண்டைவலிக்கும் மணிப்புடைய வாளகத்திற்..................................*
கெண்டைவிழியாளே நீகேள் .................................................. (சுருக)

## கரப்பான்குணம்

அறுசீராசிரியவிருதம்

பிள்ளையுங் கனத்திருக்கும் பிரண்டைபோல் தடித்துக்கட்டும் ............... *
உள்ளமுஞ்சிவந்து கண்ணில் உடல்தனில் வெளுத்திருக்கும்.....................*
தள்ளவேமேனிவாடித் தலைபெடுத் திராதுகண்டாய் ............................ *
கள்ளவிழ் கோதைமாதே கரப்பானின்குணமிதாமே .................... (சுருச)

கரப்பானுக்கு - மேற்பூச்சு

## எண்ணெய்

எண்சீராசிரிய விருத்தம்

மிளகுள்ளி வசம்புவகை விருகல்ரண்டு வெண்காயம் பலம் அரைதான் நெல்விமுள்ளி, இளகபூவரசம்பூச் சுட்டச்சாம்பல் இதமாசஒருபிடியும் இவையெல்லாந்தான், விளராக ஆடுதின்னுப் பாலைச் சாறு விட்டமைாத்து காலைக்கால்படிதான் எண்ணெய், உளமகிழ மருந்தையதி விழைத்துத்தீயில் உண்மையுடன் கொதிக்கவைத் திறக்கிஆற்றே ...............................(சுருரு)

இதுவுமது

அறுராசிரியவிருத்தம்

ஆற்றிக்கோழி இறகதனல் * அள்ளுள்வார்த்து கரப்பான்மேல் ............*
தூற்றித்தடவகரப்பானுந் துலேந்தேபோகும் இப்பாலே........................*
ஏற்றிஇறைச்சிக் கவிச்சுடனே இனியகரப்பான் பண்டமெலாம் ...............*
சாற்றஆகா வெனமுனிவர் சககமாக மொழிந்தனரே ...................(சுருசு)
* அள் - காது

கரப்பானுக்கு - வேறு மேற்பூச்சு

## எண்ணெய்

பூதகரப்பான்பட்டைப்பூவரசம்பட்டை நுணைப்பட்டை......................*
ஏதமில்கரப்பான் பட்டை இலுப்பைக்கட்டிச் சரியாக ..........................

டச்சொல்லு, தகட்டியே பதினாறு பிராயமட்டும் தன்மையுடன் மங்கையினு
நோயுண்டாமே.......................................................................... (சுசு

இம்மூன்று - மொருதொடர்

## செங்கரப்பான்குணம்

அறுசீராசிரியவிருத்தம்

சித்தால் கேளீர் செங்கரப்பான் சிரசுவலிக்கு மேல்சிவக்கும்.....................
அத்தால் வெடிக்கும் நீரோடும் அணங்கேமூத்திரமலங்கட்டும்.........................
மத்தால் அங்கமிகமெலியும் மரணக்குறிகளது கண்டால்.............................
ஒத்தக் கிரியைவகைதானும் உரைப்பேன் ஓ ஓ ஒண்ணுதலே ........(சுசுஉ

செங்கரப்பானுக்கு

## நெய்

பத்தாந் செங்கரப்பான்தீர பசுவிந்நெய் உழக்காதொன்றுடை.......................
முத்துநன் முதியார்கூந்தல்முருங்கிலை நெருஞ்சில்கொத்தான் ......................
இத்துபூ வரகுசின்னி சுருள்ஜி தன்னை கொண்டு..................................
எத்துடன் அடுப்பிலேற்றி இருபதஞ் சிவந்தபோதே ...................... (சுசுங

இதுவுமது

போர நீ கேளாய்முன்பு புகன்றதைவடித்துக்கொண்டு .................................
திதகல் கரன்மடிவீசுந் திகழ்ந்த நெய் தன்னிற்கொள்ள ...............................
மாதாவுந்தந்தைசெய்த வகையெலாங் கழிந்துபிள்ளை..................................
பேதைசெங் கரப்பான்தீரும் பின்வேறுகுணம்சொல்வாமே.............. (சுசுச)

கருங்கரப்பான்

## குணம்

அரியக்கேளு கருங்கரப்பான் அழுகுங் * குழவிஉடல்வெதும்பும் ...........*
செறிபுழுவும் உன்றைது தேகநிறமும் வெவ்வேறாய்ச்..................................*
கரியமேனி பசுநரம்பு † கதித்தேகாட்டும் பறபறத்து....................................*
முறுக்கிமிகவுந் துள்ளிவிடும் முகமுந் ‡ பதங்கள் ஊதிடுமே .........(சுசுரு)

* குழவி - பிள்ளை † கதித்தல் - எழும்புதல் ‡ பதங்கள் - கால்கள்

கருங்கரப்பான் முதலிய பதினெட்டுக்கரப்பானுக்கும்

## எண்ணெய்

அரியமிளகு தருசு * கடுகுரவுங்கோஷ்டந்திப்பிலியும் ..........................*
கரியசீரகமும் ஓமம் கஞ்சாங்கோரைக் † குழிமிட்டான் ...........................*
சிறியாவாரைப் பெரியாவாரைச்சிவனார்வேம் ‡ புத்தசமதாளி ...................*

ரிய எண்ணெய்க்கொதிப்பித்து பிள்ளைகட்கு கொடுப்பீரேல் ................*
பகரப்பான் பதினெட்டும் மறந்துபறந்து ஓடிடுமே ................(௬௬௬)

* கடு - கடுக்காய் † குழிமிட்டான் - நத்தைச்சூரி ‡ உத்தமதாளி - உத்தாமணி இஃதைந்தடியான்வந்தசெட்புள்

அரி கரப்பான்

## குணம்

வெண்பா

த்தஅரிகரப்பான் ஓதக்கேள் ஒண்டொடியீர் .......................*
றி லிங்க்யோணிப்புற்று வந்திடும்புண் சத்தமாய் ........................*
ரமல் புண்களைக்கும் ஆஆ உருவழிக்கும் ........................*
ருது இக்குணத்தின் வாறு.............................(௬௬௭)

## அரிகரப்பானுக்கு எண்ணெய்

தன்வந்திரி

எண்சீராசிரிய விருத்தம்

குறியானசழிச்சல்வகை யெல்லாந் தீரும் குணமுண்டா மிவ்வகையிற் ர்துபாரு, அரிகரப்பான் எண்ணெய்தனை வருஷிப்பேன்கேள் அரியகொடைக் கரநதைவேர் * படையின்வேரு, முரியானபசரியிலே † நீலிப்பட்டை ற்றக் ‡ கோடகசாலைவேரின்பட்டை, கரியான மிளகுநெண § வேலிநல்ல ரிசாலைப் பெருங்களா பட்டைவேரோ ................................ (௬௬௮)

* படை - செருப்படை † நீலி - அவுரி ‡ கோடகசாலை - சதைகரண்டி § வேலி - உத்தாமணி

இதுவுமது

வேரான ஆவாரைவேர் * காணிவேர்த்தோல் வீறு † பிரமட்டைசிறுகீரையின்வேர், சீரான ‡ வட்டத்திருப்பியின்வேர் சிவசிவா § புலி தொடக்கிவரின்பட்டை, காரானபலம் அரையாய்நிறுத்துவாங்கி கனவசும்புபலம் அரையும் அதனுடொக்க, ஆரான ¶ ஏரண்டம் படிகாலாக அவ்வகையும் இடித்துநீ யதனிற்சேரோ ................................ (௬௬௯)

* காணி - பொன்னுங்காணி † பிரமட்டை - பேய்மிரட்டி ‡ வட்டத்திருப்பி - ஆடுதின்னாபாலை § புலிதொடக்கி - தொடரி ¶ ஏரண்டம் - ஆமணக்கு

இதுவுமது

அதனிற்சேர் அடுப்பேற்றிக் கொதிக்கக்காய்ச்சி அச்சமறவடிக்கட்டி இறுத்துக்கொண்டு, அதனிற்சேர் நாளேழு கரண்டிகொள்ள அரிகரப்பான் சொறிகரப்பான் உமிகரப்பான், அதனிற்சேர் செங்கரப்பான் கருங்கரப்பான்

அவைகதிரி யோடுமேசண்பாராமல், அதனிற்சேர் மண்டைப்புண்கரப்பால் சூடு அரியவெட்டைக் கரப்பானுமயங்கிப்போமே ......................(௬௭௰

அரிகரப்பானுக்கு - வேறு

## மேல்பூச்சு தைலம்

போமென்ற மேலுக்குதைலஞ்சொல்வேன் புகலான் உள்ளி * கடு சுருக்கன் பட்டை, வாமென்ற மருக்காரை வேரின்பட்டை வட்டச்கிலு கிலு பை உத்தாமணியின் வேர்த்தோல்; காமென்ற நல்லெண்ணெய் அதனிவிட்டு காய்ச்சியே துவளையிட கருகிப்போகும், நாமென்ற இரு மூன்று வேளைபோ தும் நல்லதுவாலைத்தைலம் நல்குவீரோ................................(௬௭௧)

* கடு - கடுக்காய் - † இருமூன்று -ஆறு - இந்நாலு - மொரு தொடர்

பாலகரப்பான்

## குணம்

அறுசீராசிரியவிருத்தம்

காலதுகடுக்குஞ்சந்து * கண்டமும்வெடித்து புண்ணுப்.........................*
ஏலவேகடிவிஷம்போல் இருந்துபல்னீர்போல் பாய்ந்து..........................*
கோலமாய்வற்றிநாறும் குழவியுமொடுங்குமாயில் ..................................*
மாலருங்குழலாய்வால கரப்பன் செய்வாறுதானே ...................... (௬௭௨)

* கண்டம் - கழுத்து

இதுவு மது

## தன்வந்திரி

எண்சீராசிரியவிருத்தம்

பிணியான விகாரமுற்ற நீகங்கூருய் பறபறத்து தேகமெலலாஞ் சொரி போலாகி, பினியான சாரையுடல் போலேகாணும் பிணிவாயில் விஷ சலந் தான் உதிரம்போல, தினியான குலைவற்றித் திருவழிந்து * திசதாது பீடமெ ல்லாம் நடுநடுங்கி, வனியான இச்குணங்கட்கண்டுதானுல் வால கரப்பானிது வென்றியம்பலாமே .............................................................(௬௭௩)

* திசதாது - தசநாடி

பாலகரப்பானுக்கு

## நெய்

இயம்பவே இந்நோய்க்குநெய்தானென்று இன்பமாய் சொல்லுவோ ங்கேளுகேளு, இயம்பவேபூவரசம் பட்டைச்சாறு இன்பமுடன் தானே ஓர் படியுமெய்யா, இயம்பவே * சிற்றேரண்டெண்ணெய் † ஒன்று இயல்பாக இ வ்விரண்டுஞ்சேர்த்தெரித்து, இயம்பவேகசகசா பால்படிதான் ஒன்று ‡ இருசீ ரகத்தினெடைகார்சோல்காலே...........................................(௬௭௪)

* சிற்றேரண்டம் - சிற்றாமணக்கு † ஒன்று - படியொன்று ‡ இருசீரகம் - நற்சீரகம் - கருஞ்சீரகம்

### இதுவுமது

கா லானஏலமுடன் லவங்கம்மாஞ்சில் கரிசாலை நுணாவேரும் வகைப மந்தான், நீலானநிழலுலர்த்திச் சூரணஞ்செய் நெடுஞ்சினி பலம் ஐந்து நிறு த்தொன்றுக்கி, வாலான சாறெண்ணெய் அடுப்பிலேற்றி வகையுடனே கடு நிரண்டாம் சூரணம்போட், டேலான கிண்டி நெய்ப்பாகமாக்கி இறக்கியந்த நெய்யதனை வடித்துக்கொள்ளே............................................(௬௫)

### இதுவுமது

வடித்துமேகரண்டிநிறை உள்ளுக்கேற்ற வாலகரப்பான்ரோகம் வகை கெட்டோடும், தடித்துமே ஏழுநாட்கொள்ளும்போது தவறுணபுளிகசப்பிறை ச்சிமீன்கள், மடித்துமேஎள்கொள் பாகற்காய் தள்ளு மற்றவெல்லாம் நோய் க்காகு மருவிக்கூட்டு, அடித்துமே மேலுக்குகடுகுநெய்பூசு அசாத்திய செவ்வாப்பு செங்கிரப்பான்போமே ............................................(௬௬)

## சூலைக்கரப்பான் குணம்

### வெண்பா

பிள்ளைமுகம்வாடிப் பேதவெடி மேனியெல்லாம் ..............................*
சள்ளைப்பொருந் திதவிக்குமே - மெள்ளக்கேள்...............................*
வள்ளல்முழங்கால்கையுமருவியுண்ணக் கூடாது ..............................*
தள்ளுமெல் றசூலையது தான் ............................................(௬௭)

### சூலைக்கரப்பானுக்கு

## எண்ணெய்

### எண்சீராசிரியவிருத்தம்

வடக்குவரும் புங்குசங்காதண்டம்வேர் வ்லுவனாத்து மூன்றும் விரை வாக சேர்த்து, அடக்கமுள்ள விளக்கெண்ணெய்ப் படியிடாக ஆனதின் பீரு ள்ளி உழக்கரித்து, விடக்கடுகுரோகணி கால்பலம் * சமுத்திரா விதம்பாதி துளாக்கிஅதனிற்போட்டு, முடக்கிவிடுஞ்சூலைப்புண்கரப்பானோடு முன் † பா னு புடம் வைத்துஉண்ண நன்றே............................................(௬௮)

☞ * சமுத்திரா - முடக்கற்றான் † பானு - சூரியன்

☞ மேற்கோள் உதாரணம்

### வெண்பா

சூலைப்பிடிப்பு சொரிசிரங்கு வன்கரப்பான்........ *
காலைத்தொடு வாயுகன்மல முஞ் - சாலக்......... *
கடக்கத்தா னோடிவிடுங் காசினியை விட்டு......... *
முடக்கற்றான் றன்னைமொழி............................*

## ஊதுகரப்பான்குணம்

கேளாய்குளிர் காய்ச்சல் கிளைநங்கடுங் * கழலை ............*
மூளாவிதாச் போல் முயன்றுநிற்கும் - நாள்தோறும் ............*
பூதம்போல்வீங்குவிக்கும் புண்ணுகி மூச்சரிக்குந் ............*
ஊதுகரப்பான் தோஷம் உற்று ............(சுளஎ)

* கழலை - கழலைக்கட்டி

ஊதுகரப்பான் முதலாகிய பதினெட்டுக் கரப்பானுக்கும்

## எண்ணெய்

### அறுசீராசிரியவிருத்தம்

அகத்திக்கர்ப்பூரவள்ளி அவுரிவெள்ளறுதசங்கு ............*
மோத்துவ ஆடாதோடை மணித்தக்காளியும் ஆவாரை ............*
சுகத்தொடு சங்கங்குப்பி சொன்னநோர் நிலக்கடம்பு ............*
முகத்தி * நாயகஞ்சறுத்தநொச்சியு முருக்குகூட்டே ............(சுஅ0)

* நாயகம் - இரத்திநாயகம்

### இதுவுமது

பாரினில் ஈரஉள்ளிப் பலவகையுந் துவைத்து ............*
சீர்பெற வகைக்குழங்காய் சிறக்கவே பிழிந்துக்கொண்டு ............*
ஏர்பெற ஆமணக்கின் எண்ணெயும்அளர் துகூட்டி ............*
வாரணி மாதேமஞ்சள் மரமஞ்சள் கஸ்தூரிமஞ்சள் ............(சுஅக)

### இதுவுமது

சிவதைகடுகு ரோகணியும் சீரக மானதிருவகையும் ............*
நவதிரி சடுகுடனேதான் நல்லத்திரிபலையுங்கூட்டி ............*
இவைவகைவிருகஞ்ளென்றாக எல்லாஞ்சரியாய் நீநிறுத்து ............*
தவமாயரைத்து முன்சொன்ன சாற்றில் கரைத்துகலக்கிடுமே ............(சுஅஉ)

### இதுவுமது

எல்லாம் ஒன்றாய்தான் கலந்து இதமாயடுப்பில்வைத்தெரித்து ............*
மேலமெழுருபதத்திறக்கி வேறேகலசமதில்வடித்து ............*
நல்லாய்கரண்டியெண்ணெயுமே நல்க இப்படிமூன்றுநாள் ............*
சொல்லாகரப்பான் பதினெட்டுந் துயரப்பட்டு ஓடிடுமே ............(சுஅங)

வாயுகரப்பான் வீக்கத்திற்கு

## குடிநீர்

வெண்பா

ஓடுகின்றசாரணையும் உப்பும் * அரிதகியும்..........................*
வாடுகின்றமாச்சுக்கும் மாக்கூட்டி - நாடி ..........................*
மருங்கிக்குடிக்க வாயுகரப்பான்வீக்கம்..........................*
பருகபருகக்கழியும் பார்.......................................(௬௮௪)

* அரிதகி - கடுக்காய்

செவ்வாப்புகரப்பானுர்கு - விழுங்குமாத்திரை

## தன்வந்திரி

எண்சீராசிரியவிருத்தம்

மயங்கிப்போம்விழுங்குமாத்திரைதான் சொல்வேன் மாதரசேசாதிலி ங்கம்பூரம் ஏலம், மயங்கிப்போம் பூங்காவி வகைக்குகாலாய் வண்மையாய்க ல்வத்தில் போட்டுக் கொண்டு, மயங்கிப்போம் கோதும்பைக் கஞ்சிவார்த்து மைபோலே சாமமிரண்டோயாதாட்டி, மயங்கிப்போம் பயறுபோல் உண்டை செய்து மரச்செப்பில்வைத்தடைத்து மகத்வங்கேளே .................. (௬௮௫)

இதுவுமது

மகத்துவங்கேள் ஓராண்டுபிள்ளைக்கெல்லாம் * வல்சிதனில்பிடித்துண் ணமாந்தமேது, மகத்துவங்கேள் சிறுகுழைந்தை யானதற்கு மாதிபத்ரிக்கியா ழத்தில் உரைத்திடாய்நீ, மகத்துவங்கேள் செவ்வாப்புகரப்பான் போகும் வரி சையாய் மாத்திரையின்மகத்துவம்பார், மகத்துவந்தான் என்ன சொல்வேன் இந்நூல்போக்கு மஹாரத்தச்சுருக்கமெனமருவிப்பூணே ................(௬௮௬)

* வல்சி - சோறு - இவ்விரண்டுமொருதொடர்

கால்கடுவன் மண்டைக்கடுவனுக்கு

## மருந்து மேற்கட்டு

எண்சீராசிரியவிருத்தம்

ஆமணக்கின் இலையதனைத்தலைக்கால் கட்டி * ஆதித்தன் உதயத்தில் அ விழ்த்துபோட்டு, காமணக்கும் சலம்விட்டுக்கழுவிப்பின்பு கனத்த ஈசங்கினி லைக்கொண்டுவந்து, பூமணக்கும் சட்டியிலிட்டே கருக்கிய பொடியாகசெய்து புண்மேல் தேங்காயெண்ணெய், மாமணக் கத்தடவியந்தத்தூளைப்போட மண் டைக்கால் கடுவனுமே தீர்ந்துபோமே....................................(௬௮௭)

* ஆதித்தன் - சூரியன்

கால்கடுவேனுக்கு வேறு

## எண்ணெய்

அறுசீராசிரியவிருத்தம்

இலுப்பைப்பட்டைப் பாவட்டை எழில்சதுரக்கள்ளிப்பட்டை ............... *
சலிப்பில்லா ஈருள்ளியும்வசம்பும் நறுங்கி யெல்லாந்தான் ................ *
குலிங்கியெண்ணெயிற்காய்ச்சிக் கொடுக்கப் பாலர் கால்கடுவன் ............ *
அலுப்புப்பட்டு ஓடிவிடும் அயில்கூர்ம நர்விழிமா மயிலே ...... ..... (சுஅஅ)

எண்வகைகரப்பானுக்கும்

## எண்ணெய்

எழுசீராசிரியவிருத்தம்

எண்வகைக்கரப்பான் இழர்திடக்கேளு ஈருள்ளிச்சரியசீரகமும் ............ *
அமைடியபூநகரப்பனும்வட்டக் கிலுப்பைவேர்காட்டினிற்பாகல் ............... *
ஒன்டிய * மூலமுடன்சதருப்பை உயர்வெள்ளைக்காக்கணன் † மூலம் ...... *
கூடிடதேவதாரமும்வசம்பு உண்சங்குவெள்ளறுகுடனே ...................... *
நண்புள ‡ சீனப்பட்டையுஞ்சுத்தி நவின்றிடும்வகைவகைப்பலங்கால் ...... *
நாடுநேர்வாளவிரை இருபதுபின் நற்சுங்கங்குபபிச்சாற்நாழி ......... ........ *
அண்டமைத்ததில்சிற் ருமணக்கெண்ணெய் அது ஒருநாழிவிட்டருந்த ......... *
ஆமொருகாசெடை உடல்தனில்பூச அவைபெட்டும் அகலுமாமென்றே(சுஅக)

* மூலம் - வேர் † மூலம் - வேர் ‡ சீனப்பட்டை - பரங்கிப்பட்டை.

பதினெட்டுக்கரப்பானுக்கும்

## எண்ணெய்

அறுசீராசிரியவிருத்தம்

புங்கம்பூவும் புளிநடலைப் புனிதமானவசம்புள்ளி ......................... *
கங்குலாதிசீரகமும் கதித்தபாலை நன்னாறி ..................................... *
பொங்குபசுவின்பால்வார்த்து போத எண்ணெயெரித்திடவே ................... *
எங்குமுள்ளக் கரப்பான்போம் எரிக்கும் விளக்கினெண்ணெயிதே......(சுகா)

பதினெட்டுக்கரப்பானுக்கும் வேறு

## எண்ணெய்

வெண்பா

செருப்பினடியிண்டு சேர்இந்திரநாயகமும் .......................................*
வெருங்கில் * நிலங்கிழங்குவெண்ணொச்சில் - நெருக்கசங்கம்................*

குப்பியிலேச்சங்கு கொட்டக்கரந்தை.......................................*
செப்பும் † கழல்துளசிசேர் ........................................(சுகக)
* நிலக்கிழங்கு - நிலப்பனைக்கிழங்கு † கழல் - கழற்சி

இதுவுமது

சேருங்கரு நொச்சில் * செங்கரிப்பான் † பெருங்கிழக்கு ........................*
கூர்முருக்கம்பட்டைக் ‡ கொடிவேலி - சேருகின்ற...............................*
கோழியவரை § உள்ளிக் கோதையேநா துவள்ள...........................*
¶ கோளி யுந்நாந் நேட்கொடுக்குகொள் ........................... ......(சுகஉ)
* செங்கரிப்பான் - கையாந்தகரை † பெருங்கிழங்கு - சீனப்பா ‡ கொடிவேலி - சித்திரமூலம் § உள்ளி - வெண்காயம் ¶ கோளி - அத்தி

இதுவுமது

கொள்ளக்கரிசாலைக் கூறுஞ்சங்கம்பட்டை..............................*
அள்ளல் அவுரி அழருசுவர் - முள்ளங்கிச...................................*
சேளமுக்கருவின் கிழங்கிலையுமாகப் * பா ...................................*
தாளமூலிக்கூடத்தான்....................................................(சுகங)
* பாதாளமூலி - ஆடுதின்னாபாலை

இதுவுமது

* வத்தகப்பட்டை பிராய் வளர் பூவரசம்பட்டைச்... ............................*
செத்தப்பழுப்பு சிறுசின்னி - ஒத்தநீர்........................................*
முள்ளிமுடக்கற்றான் முதிரபுங்கம் பட்டை † தண்டை ..........................*
தள்ளவொண்ணுசாணுக்கி தான்.............................................(சுகச)
* வத்தகம் - வெட்பாலை † தண்டை - ஆதண்டை

இதுவுமது

சிறுநறட்டைச்சிந்தில் சேரும்பமுபாகல் .........................................*
முருகு கண்டங்கத்திரி முள்ளி- அறுகுடனே.....................................*
தன்னொர்கச்சாறு தனியே வடித்துக்கொள் ......................................*
இன்னங்கேள் சொல்வாம் இசைநது ............................................(சுகரு)

இதுவுமது

* பெருவாயன் லத்திப்பால் பேரான லத்திப்பால்................................*
† குருவாம்பசுவினுடக்கோமயமும் - கருகாத.......................................*
நிப்பழச்சாறும் நிறைவெண்காயச்சாறும்............................................*
இன்பமுடன் எல்லாம்பதக்கு.................................................(சுகசு)
* பெருவாயன் - கழுதை † குருவாம் - நிறமாம்

இதுவுமது

எண்ணெய்க்குறுணிகலந் திவையேவெயில்வைத்து.........................*
பண்ணும் படிகற்கம் பகரக்கேள் - தண்ணும்...................................*
மரமஞ்சட் * குப்பைவளர் † பூதப்பட்டை..........................................*
நெரிபரங் கிப்பட்டையுடன்சேர்........................................................(சுகஎ)

* குப்பை - சதகுப்பை † பூதப்பட்டை - பூதகரபான்பட்டை

இதுவுமது

சேர்செங்கதாரித் திகழும் வெம்பாடனுடன் ..........................................*
கார்போகர்சிசனவாளம் - பாரில்.......................................................*
வசப்புவகைக்கு இரண்டு விருகனெடை ..............................................*
நிசம்பெறவே காய்ச்சிவிடுநீ ..............................................................(சுகஅ)

இதுவுமது

நீகேள் கரண்டிதா னேராகக்கொள்ள ......................................................*
வாகாய்கரப்பான்வகைதீரும் - தோகாப் ...................................................*
சூலிக்குந்தாங் கொடுக்கச் சொன்னாறிந்து ..............................................*
பாலிக்கும்பத்தியஞ்செய் புர் ................................................................(சுகக)

டி இதில் கருஞ்சீரகமுங் சிறட்டுச்சீரகமுஞ் சேர்க்கவும்
இவ்வெண்ணெய்கர்ப்பஸ்திரீகட்கும் குழந்தைகட்கும் பெரியவர்கட்குமாகும்

பதினெட்டுக்கரப்பானுக்கும் வேறு எண்ணெய்

## தன்வந்திரி

எண்சீராசிரிய விருத்தம்

பார்த்திடாய்இருவேளை செம்பருந்திப் பரிமணித்தக் காளியுடன் பொன்னாங்காணி, பார்த்திடாய் சூரியந்த நத்தைச்சூரி பகரம்மான் பச்சரிசி தகரைபாசி, வார்த்திடாட்குட்டிவிளாப் பட்டைப்பாகல் வண்மைகருந்துளசிச்செம்முள்ளி இண்டு, கார்த்திடாய் பாவட்டைப் பொடுதலைந்தான் கருங்காலிக் கழுலைப் புள்ளாடியதாமே ...................................................(௭௱)

இதுவுமது

ஆமேதான்கணைதுவரைக் கொன்றைப்பட்டை அழகான தவமுருங்கை * சாலைமேலும், வாமேதான் அகத்திக் கற்றாழஞ்சோறும் வகையானசின்னி எருக்கிளிப் பூண்டு, காமேகான் இவ்வகைக்குதனிச்சாறுவாங்கிக் கடுப்பாண்டம் அதனிற்நாழ்படிதான் ஊற்று, தாமேதான் ரவியில்வைத்து கடைமருந்து தாதவியல்நல் ஒமஞ்சா திர்சாயே .......................................................(௭௱க)

* சாலை - கோட்டகசாலை

இதுவுமது

காயோடுபத்திரியும்வசம்புகோஷ்டம் கண்மணியேகொத்தமல்லிக்காட் ச்சீரம், வாயோடுதிப்பிலியும் இஞ்சிக்கூட்டு வகைவகைக்குவிரு கனெடை அ ந்சதாச, தாயோடு ஆமணக்கின்எண்ணெய்தானும் தப்பாமல்குறுணியதாய் ளறது ஊற்றி, மாயோடுசரக்கையெல்லாமெழுகாய் ஆட்டிவண்மையாய்சல கிட்டுமேகிளமபாரோ...............................................................(எ௱உ)

இதுவுமது

மகிமையாய் எரித்திட்டு எண்ணெயாக்கி வளமாகசிறுதழைந்தை * ஆ ாடிவொட்டு, மகிமைபாரிதுவயதில் கரப்பான்கண்டால் வகையுடனேபதிலெ டுக் கரப்பானும்போம், செகமதிழும் இந்தஎண்ணெய் செப்பக்கூடாதேயத் ல் உண்மையென்ற பண்டிதர்க்கு, அகமகிழும் நூலீந்த தர்மத்தோரை அந் ரத்தால்அவர் பதத்தை தெண்டஞ்செய்யே ..................................(எ௱௩)

* ஆண்டிவொட்டு - பதினாறுவருஷம் - இந்நான்கு மொருதொடர்

பதினெட்டுக்கரப்பானுக்கு வேறு

## எண்ணெய்

அறுசீராசிரியவிருத்தம்

வரசு செங்கத்தாரி பூநகரப்பான்கண்டங்காரி ..................................*
மவுநிலவாகைவகைக்கு விளங்கும்பத்தப்பலமாக ...............................*
வநருக்கிச்கியாழமிட்டு இறுத் * தாட்டுப்பால்படியொன்று ....................*
வமிளகுசதகுப்பை அரியவசம்புவலம்புரிக்காய் ..............................(எ௱ச)

* ஆட்டுப்பால் - காராட்டுப்பால்

இதுவுமது

ப்வெள்ளுள்ளிப் பரங்கிப்பட்டைக்கார்கோலரிசிகருஞ்சீரம்......................*
யவகைக்குமழஞ்சிரண்டு முலைப்பால்விட்டுத்தான் அரைத்து....................*
ய்முற்கியாழத்திற்கரைத்து பாய்வெள்ளாட்டுப்பால்விட்டு ......................*
காயும் எண்ணெயிற்கலந்து சுகமாய்மெழுகுபதமிறக்கே ................(எ௱ரு)

இதுவுமது

றக்கிப்பிள்ளைக்குள்ளுக்கு ஈந்துமேலுக்கும்பூச ...................................*
ரக்குப்பதினெண்கரப்பானும் தீர்ந்துபோகும் உண்மையிது.........................*
ரக்கு மின்னம்பத்தியங்கார் பவளவதரபயோதரபூ ..............................*
றக்குமம்மழுடையாளே செய்தேபரி இக்கைப்பார்த்துவிடே .........(எ௱சு)

தொண்ணூற்றாறுகரப்பானுக்கும்

## எண்ணெய்

ஊிசாலே * கம்பந்திராய்வேரு கனத்தக்கருடக்கொடியுடனே ........*
பொரிச்சால்பொரியும்பொரிகாரம் பூதகரப்பான்பட்டையுடன்........*
எரிச்சாறெண்ணெய்வசம்புள்ளி எனவே கெட்டச்சரப்பான்கள் ........*
மறுத்தால்தொண்ணூற்றாறுகரப்பான் மாட்டோமெனவேபோய்விடுமே(௱௭௭)

* கம்பந்திராய் - திராயந்தி

முந்நூற்றிருபது கரப்பானுக்கும்

## எண்ணெய்

எழுசீராசிரிய விருத்தம்

சிறுகுறிஞ்சான் மிளகருணைக்காட்டுமல்லி செப்பியிடு * பாலொடுவை நிலவிளாவும், அறிவாய்கேள் இவைவேர்கள் வசம்போடுள்ளிஆகாசகருடனுடக்கிழங்குஎல்லாம், சருகாமல்சமன்கூட்டி அதில் ஏரண்டம் தந்திடுமே எண்ணெயதுசமனாய்க் கொண்டு, முருவவேகாய்ச்சிவடிததருந்தநித்தம் முந்நூற்றிருபதுகரபான் கிரந்திபோமே. ...........................................(௱௭௮)

* பாலொடுவை - கொடிப்பாலே

சகலகரப்பானுக்கும்மேற்பூச்சு

## நல்லெண்ணெய்

எண்சீராசிரிய விருத்தம்

வீங்கிடகரப்பான்விடத்தலே * யிலையின்கள்ளியுந் † திருகியகள்ளி ........*
விளம்பிய ‡ வஜ்ரம் மாவிலிங்குடனே ¶ முத்தமுந்தாழைக்கொம்மட்டி.......*
ஓங்குறுகுப்பைமேனியும் அவுரி உயர்பொடுதலைநிலக்கடம்பு......... .........*
உறும்எருமையின் ஆட்டாங்கொடிநொச்சில் ஒப்பும்ஆமணக்கு ‑ஒ இண்டினிலையும்*
ஆங்கிவைவகைக்குசாறுழக்கதனில் அதிசநல்லெண்ணெயும் உழக்கு ........*
அவையினிற்கற்கம் சீரகம்கடுகு அடர் * குருவிந்தம் குந்திரிக்கம் ..........*
பாங்ுள † குங்கில் ‡ திரிகடு § காசியம்பகர்தேவதாரமிவ்வெடைதான்...*
பலம்புலம் எரிந்துபூசிக்கொள்கரப்பான் ¶ பானுமுன்பனியெனப்படுமே ().

* இலேயின்கள்ளி - இலைக்கள்ளி † திருகியகள்ளி - திருகுகள்ளி ‡ வஜ்ரம் - சதுரக்கள்ளி § முத்தம் - சங்கன் ¶ இண்டு - ஈயச்செடி ‑ஒ குருவிந்தம் - கோரைக்கிழங்கு * குக்கில் - மைசாட்சி † திரிகடு - சுக்கு - மிளகு - திப்பிலி ‡ ஆசியம் - கருஞ்சீரகம் ¶ பானு - சூரியன்

கொத்துக்கள்ளிக் கரப்பான்

## குணம்

அறுசீராசிரியவிருத்தம்

கொத்துக்கள்ளியின் கரப்பான் குணத்தைக் கேளு கோகிலமே ............*
மற்றுவெப்புறு நால்வீக்கி மலமுட்டடைக்கும் இளைப்புண்டாம் ............*
கத்துங்குரலும் அரையுண்டாங் கனத்தவிக்கல் உண்டானுல் ............*
பத்துப்பதியும் ஓதுவதேன் பாலன்பிழைப்ப தரிதாமே............(௭௱௰)

சிறுசிரங்கு கிரந்திசூலை சொரிக்கு

## சாறு

அறுசீராசிரியவிருத்தம்

கொடிக்கள்ளி தன்னைவாட்டி குறுகவே பிழிந்துக்கொண்டு ............*
முடுக்குடன் தின * முளைக்கு மூன்றுநாள் உள்ளேவார்க்க............*
திடத்துடன் கிரந்திசூலை சிரங்கொடு சொரியுந்தானே............*
நடுக்கறதீருமென்று நாதனாருள் செய்தாரே............(௭௱௰௧)

* முளை - குழைந்தை

சிரங்குக்கு

## தேங்கா யெண்ணெய்

கலி விருத்தம்

காட்டுச்சீரகங்கார்போகரிசியும் ............*
மாட்டுங் (கஸ்தூரிமஞ்சளும் ஏலமும்............*
நீட் * டரிதகி நீரடிமுத்துடன் ............*
ஈட்டஆறுஞ் சமனெடையா யெடே............(௭௱௰௨

* அரிதகி - கடுக்காய்

இதுவுமது

எடுத்தவை பொடிசெய் வெண்மிளகினி ............*
அடுத்தஓரெடையா * மத்தங்காயினுள் ............*
தொடுத்தடைத் தொன்றனா எருமிட்டைசூழ் ............*
பொடுத்தமாட்புடம் போட்டெடுத்தாற்றிடே!............(௭௱௰௩)

* மத்தங்காய் - ஊமத்தங்காய்

இதுவுமது

ஆற்றிமுற்பொடி கூட்டியகண்டமும் ............*
நாற்றிடு * நாளி கேரத்தினெண்ணெய் விட்............*

றேற்றிடு குழிக்கல்லில் அரைத்துற ................................................*
மாற்றிடெண்ணெய் பின்வார்த்து நீயாட்டிடே ....................(௭௱௰௪
* நாளிகேரம் - தேங்காய்

இதுவுமது

ஆட்டி * பானுமுன் அப்படிமூன்றுநாள் ........................................*
காட்டிவைத்துக் † கடத்தினில்வந்ததோர் .........................................*
சாட்டியசிரங்கின்மேல் தடவிட.........................................................*
நாட்டித்தினவு நமைச்சலும்போகுமே ............................................ (௭௱௰௫
* பானு - சூரியன் † கடம் - சரீரம்

சொரிக்கு மருந்து

## தேரையர்

கலிவிருத்தம்

பார்த்து பூவரசம் பட்டை ஓர்பலம்..................................................*
தார்த்து நீராகாரத்தில் அரைச்கிட ....................................................*
எற்று மூன்றுநாள் இவ்விதங் கொண்டிடில் ............................................*
போற்றுமே சொரிபோம் உப்புவிட்டிடே.....................................(௭௱௰௬)
இஃதொருதொடர்

பேய்ச்சொரிக்கு

## மருந்து

எண்சீராசிரியவிருத்தம்

நோக்கமில்லாபேய்ச்சொரிக்கு மருந்துகேளு நுண்மையுடன் இந்துப்புபொடியாச்செய்து, தாக்கவேநெய் தனிலே பொடியைச்சொட்டி தன்மையுடன்கிண்டியதைரவியில்வைத்து, தீர்க்கமுடன் தலைக்கிட்டுமேலும்பூசி திறமாகமறுநாள்தான்முழுகிப்போடு, தூக்கமில்லாபேய்ச்சொரிதான் ஓடிப்போகும் சுருக்கானமருந்திதுதான் சூக்ஷம்பாரே.....................................(௭௱௰௭)

## கரப்பான்வகுப்பு முற்றிற்று

அகத்தியர் திருவடிகளே

சரணம்



இஃது

# சுர வகுப்பு.

இஃது

## வாத பித்த சேஷ்ம சுரத்தின் குணம்

அறுசீராசிரியவிருத்தம்

மாங்கிஷத்தில் வாதமது பித்தந் தானுந்தோலில் ............................*
தாங்கிய எலும்பில் * ஐயம் சுகமறத்தோன்றும் பின்னர் .......................... *
சாங்கியமாகநின்று சரீரத்தில் நோயும் பண்ணும் ............................ *
ஆங்கிதைச்சொல்லவொண்ணாதநீகமாம்உரோகந்தானே ...............(௭௱௰௮)

* ஐயம் - சேஷ்மம்

வாதபித்த சேஷ்ம சுரத்திற்கு கோடாசுழி

## மாத்திரை

கோரோசினையிருவிருகனெடை கூறு மிரோகணி விருகனொன்று .......... *
நேவாளந்தான் விருகனென்று நிசமுமுலைப்பால் தான்விட்டு ................*
ஊறாய் அரைத்து பயறளவு உண்டைசெய்து நிழல்உலர்த்தி .....................*
ஏறோ வாதசுரத்திற்கு இஞ்சிச்சாற்றில் இட்டிடுமே .......................(௭௱௰௯)

இதுவுமது

இடுமேபித்தசுரத்திற்கு இதழ்முலைப்பாலில் இடதீரும் ...........................*
அடுமேசேஷ்மசுரத்திற்கு ஆடாதோடையுங் * காரி..................................*
பொடுமேதூதளைபிட்டவியல் பொருந்த அவித்தசாற்றிலிட............................*
படுமேசன்னியெலாந்தீரும் பகருமிச்சாபத்தியமே ...................... (௭௨௰)

* காரி - கண்டங்கத்திரி

மாந்தசுரத்திற்கு

## கியாழம்

சீந்தில் தண்டுங் களிப்பாக்கும் * சிவேதைவேருங்கடுக்காயும் ....................*
காய்ந்த சுக்குரோகணியும் காயும்நீரில் தகர்த்திட்டு ........ .........................*
வந்தமுலையாய் இந்நீரை எட்டொன்றாக்கிக்கொடுப்பீரேல் .........................*
மாந்தமானசுரமும்போம் வயிறுங்கழியுங்கண்டீரோ ....................... (௭௨௧)

* சிவேதை (ய-அ) நஞ்சிலொன்றாகையின் பசும்பாலிற் பத்துதரஞ்சுத்தி செய்துகொள்க இச் சிவேதைக்குமறிவு - வெள்வேல் பத்து - மிளகாயிலிருந்தால் - பசை [illegible] நல்சாப்பிடலாம்.

மாந்தசுரகணத்திற்கு வேறு

## எண்ணெய்

எண்சீராசிரியவிருத்தம்

கடுக்காய்தான் பதினாறு விளாசட்போசகி கஸ்த்தூரிமஞ்சள் கருடக்கி
[illegible], முடிக்காக மூன்றுமவைசரியாய்க்கொண்டு முறைபுடனேபொடிசெய்து
* [illegible]தைலந்தானும், அடுக்காக நாழியதில் பொடியையப்போட்டு † அனலிமுகம்
[illegible]ஒன்றுக்குங்கொடுத்து, சடுக்கென உச்சியினிலிடப் பொருமலோடு தணி
[illegible]மாந்தசுரந் தணியுமென்றே........................................(எஉஉ)

* தைலம் - ஆமணக்குநெய் † அனலிமுகம் - சூரியபுடம்

மாந்தசுரத்திற்கு வேறு

## கியாழம்

நெல்லியுடன் வேம்புபுளி * கரந்தைதானும் நேயம் † இருமுட்டிநி
[illegible]ஒன்ருக, சொல்லுமொரிதழின்தாமரையுங்கூட்டி சுகமாகவே நறு
[illegible]காய் நீகேள், உள்ளபடிசீரகம் கிரம்பு திப்பிலி ஒன்ருகக்கூட்டியே உழ
[illegible]காட்சி, மெல்லவேசிறுவோர்க்குகொடுக்கவேதான் வெதும்பாதுமாந்
[illegible] விட்டுப்போமே ........................................................(எஉஉ)

* கரந்தை - விட்ணுக்கரந்தை † இருமுட்டி - சிற்றுமுட்டி - பேரா
முட்டி

மாந்தசுரத்திற்கு வேறு

## கியாழம்

அறுசீராசிரிய விருதம்

[illegible]பாமோருள்ளிப்பத்து பொடியாய் அரிந்துவில்வமொடு ......................*
[illegible] அவுரி * பூமிவிளா அரிந்துசிவக்க வறுத்ததனை ..............................*
[illegible]மேகாய்ச்சிசிறுவோர்க்கு விதமாய் மூன்று நாள்கொடுக்க ..................*
[illegible]மேயணுகுமாந்தசுரந் தணியுங்கணமுந் தரியாதே .................... (எஉச)

* பூமிவிளா - நிலவிளா

மாந்தகணசுரத்திற்கு வேறு

## கியாழம்

ஆசிரியவிருத்தம்

[illegible]ளிருணுநெல்லி ஒதி வேம்போடுதககையும் பொடுதலை அம்மானரிசியும் ...*
[illegible] எட்டி எர்க்கு * கூவிள இலையும் † அவ் வோடுபொங்குசிறுபுளடியிலே*
[illegible]கோழி அவரையிலே நிலவிளாதன்னிலே நரிபயற்றங்கொடியுடன்........*
[illegible]பழம்பாசியிலே விட்ணுக்கரந்தைநல் னுறிகோரைக்கிழங்கும் ..............*

ளிர்செருப்படைமணித் தக்காளிவல்லாரை தான்சேந்தில்பேட்ப்புடலெலாம்*
ணிவகைக்கொருபிடிக் கொடுவெந்தரிந்துமே நக்கபொன்னிறம்வறுத்து ......*
ளிக்கொருபடிசலம்விட்டுகால்படியாக காய்ந்தச்கியமுழ திலே...............*
மழ்கின்றகோஷ்டம் விளாம்பிசின் வில்வத்தின்களபிசினிலவம்பிசினுமே.()

* கூவிளம் - வில்வம் † அவ்வோடு - வில்வ ஓடு

இதுவுமது

அறுசீராசிரியவிருத்தம்

பிசின்மாசிக்காய் சாதிக்காய் பெருகும் வெர்தயம் இவைவகைக்கு............*
பிசித விருகன் எடையாக வெதுப்பிப் பொன்னிறமாய் வறுத்து...............*
புசியப்பொடியாய் செய்தந்தப் பொடியைக் கியாழத்தில் தூவி ..............*
சிதஆறுவேளை * துய்க்க ஓடுமாந்தகண சுரமே...... .................(எஉ௬)

* துய்க்க - சாப்பிட

நாட்பட்டமாந்தசுரம் வாதபித்தசேஷ்மங்கடந்தசுரம் கனல்சுரத்திற்கும்

வில்வாதிமாத்திரை

தன்வந்திரி

எண்சீராசிரியவிருத்தம்

நவின்றசுரவில்வாதிகுளிகைகேளு நற் * பச்சைப்பூரங்கால் இலவங்கங்கால், நவின்றிட்டோம் வால்மிளகுசிறுநாகப்பூ நல்ருணரோகணியும் ஏலம் மாஞ்சி, நவின்றிட்டோம் சுக்குமேசீரகங்கால் நளின † செவ்வாலம்பருப்பு திகர்க்கு ஒன்று, நவின்றிட்டோம் ‡ பொற்றலையின்சாற்ருலாட்டி § நவநாளுஞ்சென்றபின்புமிளகுபோலவே.................................(எஉஎ)

* பச்சைப்பூரம் - பச்சைக்கர்ப்பூரம் † செவ்வாலம்பருப்பு - வாளம்
‡ பொற்றலை - பொற்றலைகையாந்தகரை § நவநாள - ஒன்பதுநாள்.

இதுவுமது

மிளகுபோல் உண்டைசெய்துசெப்பில்வைத்துவிளங்குகிற இஞ்சிதேன் முலைப்பால்தன்னில், மிளகுபோல் இழைத்துண்ண என்ன சொல்வேன் இனியநாட்சென்ற சுரமாந்தம்போகும், சளகுபோல் வாதபித்த சேஷ்மமுன்றுங்கடந்தசுரங் கனல்சுரமுங் கழன்று ஓடும், மளகுபோல் இந்தமுறை இந்த போக்குமகத்தான நந்தீசா செயலாங்காணே..............................(எஉஅ)

இவ்விரண்டு - மொருதொடர்

அட்சரமாந்தசுரத்திற்கு

எண்ணெய்

அறுசீராசிரிய விருத்தம்

பூவர சிலையுங்காட்ப்பூ புகழ்பெற மூன்றுந்தானே ................................ *
தாவரசமனதாக தயவுடன் அரைத்துநல்லாய்..........................................*

ஆவர பலமொன்றாக அடையதைதட்டிக் கொண்டு ......................*
தேவர்கள் மகிழுந்சிற்று மணக்குநெய் அரைசேர்கூட்டே...............(எ௨௧)

இதுவுமது

கூட்டியே காயவைத்து கூறதில் அடையைப்போட்டு ...... .......................*
திட்டம்சிவக்கக்காய்ச்சி நீழடை எடுத்துப்போட்டு............................*
காட்டிய ஏலம்சாதிக் காய்சாதி பத்திமூன்றும்....................................*
ஆட்டியவகைவகைக்கு அரைவிருகன்தான்தூக்கே .........................(எ௨௰)

இதுவுமது

தூக்கிநீபொடியாய்ச்செய்து தூளிலா எண்ணெய்தன்னில் ...................*
ஊக்கமாய்க் கலந்து பின்பு உள்ளுக்கு எடைதான் கூட்டு ........................*
பாக்கியமாகவார்க்கப் பாலரை மயக்கவந்த...... ....................................*
ஆங்கிய காய்ச்சல்மற்ற அட்சரமாந்தம்போமே ...............................(எ௨௧)

மாந்தகணசுரம் வயிற்றுப்பல் வார்த்திக்கு இரதசிந்தூரமாத்திரை

## தன்வந்திரி

எண்சீராசிரிய விருத்தம்

தாமேரசச்சிந்தூரம் * திரிபலாதி தருநாங்குமப்பூகன் தாளிலம் ......* வாமே நான் † திரிகடுகு ‡ ரோசினைந்தான் வளமாகபலங்களாய்நிறுத்துக் கொண்டு, காமேதான்கிராம்பெடைபும்விருகனென்று கருநொச்சிச்சாறுவிட்டு சாமம் ஆட்டி, நாமேசிறுபயறுபோல் உண்டைசெபது நல்துளசிச்சாற்றிலிடநயந்துக்கேளே........................................................(எ௨௨)

* திரிபலாதி - கடுக்காய் - தான்றிக்காய் - நெல்லிக்காய் † திரிகடுகு சுக்கு - மிளகு - திப்பிலி ‡ ரோசினை - கோரோசினை

இதுவுமது

நயந்துக்கேள் கணமாந்தம் கணசுரங்கள் நற்பெரியவயிற்றுப்பல் மாந்தம்போகும், நயந்துக்கேள் வாந்திவயிற்றுப் பிசங்கள் நாடாது இவ்வுண்டை தனினைமெற்ற, நயந்துக்கேள் எங்குருநவில் சொல்லால் சொல்லினேன் நமசிவயமென்றருளை நாவில்போற்று, நயந்துக்கேள் இருஷியென்றும் பெயருண்டாகி தாங்கண்ட பலனெல்லாம் நவின்றிட்டோமே ......... ..... ............(எ௨௩)

இவ்விரண்டு - மொருதொடர்

மாந்தகணசுரதோஷத்திற்கு

# எண்ணெய்

## கும்மி

ஆமணக்கெண்ணெய் யதுநாழி - தான் - அடுத்தசுண்ணாச்சாறுநாழி ......*
ஆமணக்கிருநாழிக் கால்நாழிப்........................................*
போதராவாய்க்கும்மி யடியுங்களேடி - மன ........................*
நாதரவாய்க்கும்மி யடியுங்களேடி ........................(எ௱௬௪)

இதுவுமது

வெந்தயம் அரைப்பலங்கூட்டி - பெண்ணே - மிகுத்திடும் நற்பதத்திறக்கி......*
பந்தயம் எண்ணெயும் பேதிக்க உள்ளோர்க்குப்..........................*
பழுக்கக்கும்மியடியுங்களேடி - நீங்கட் ..............................*
களிக்கக்கும்மி யடியுங்களேடி...........................(எ௱௬௫)

இதுவுமது

பாருமாந்தசுரகணமுந் - தோஷம் - பாலகர்க்கெண்ணெய்க்கொடுத்திட்டவே*
தேறுமேபிள்ளைதான் ஊறுமேபிணி...........................................*
மாறுங் கும்மியடியுங்களேடி - மனந் ..........................*
தேறுமென்றேகும்மியடியுங்களேடி.........................(எ௱௬௬)

மாந்தகணசுரதோஷம் வயிறுகழிச்சல் பித்தம் இருமல் வார்திக்கு

# பாலசஞ்சீவி மாத்திரை

## எண்சீராசிரிய விருத்தம்

திரிகடுகு வெண்காரஞ் சாதிலிங்கம் சிறந்திடவே * ஐம்மருந்துஞ்சமனாக, நெறிபடவே எலிமிச்சம் பழத்தின்சாற்றால் நிசவரைத்து ஒருசாமம் நிரையதாக, குறிபடவே உண்டைதனை பயற்றிற்பாதி குளிர்ந்ததநிழல்தனில் உலர்த்திக்குழவிக்கிய, மறிபடவே பாலசஞ்சீவி யென்றுவகுத்துரைத்தார் மலையின்முனிமன்னுளோர்க்கே ........................(எ௱௬௭)

* ஐம்மருந்து - ஐந்துவகைமருந்து

இதுவுமது

மலையின் முனிதானுரைத்தவகையே தென்னில் மாந்தகண சுரதோஷம் வயிற்றிறோட்டம், கொலைசெய்யும் பித்தமுதி இருமல் வார்திலேலே திடு நோயுள்ள துவுங் குடிதான்போக, நிலைபெறவே பத்திரியை பிட்ட தாக்கி நீர் வாங்கி திரிகடுகு கற்கமாக்கி, உலையுயர்ந்த கியாழமதில் சந்கமோடு உண்டையொன்று தானெடுத்து உரைத்திடாயே ........................(எ௱௬௮)

இதுவுமது

உரைத்திடுமேநீசுரமிருமல்களை நாமூன்று உகந்தகோரோசினையும் ஒக்கக்கூட்டி, கரைத்திடுங்காலிரத்த கணமூலங்கண்டால் கடுகவேசாதிச்காய்புளிவித்தோடு; அரைத்திடுமே உன்னடைபொரன்றுசரகுங்கூட்டி அருந்திடவேவில்வபழச்சதைக்குள்வைத்து, வரைத்திடுமென்றருள் முனிவன் விபரஞ்சொன்னவால்சஞ்சீவியென்றே வகுக்கலாமே ..............................................(எ௲௩)

இதுவுமது

விருக்குங்கால் * பத்திரிதன்வகையைச்சேரு மணித்துளசிசெம்முள்ளி ஆடாதோடை பகுத்திடுவாய்தூதுவளைவிட்டுணுக்காந்தி பண்புசெறிகண்டங்கத்திரியிறேடு, நிகழ்த்திடுமே வெதுப்படக்கிப்பேட்ப்புடோலும் நின்றசங்கின் இலைநொச்சில்நிறைதான்கூட்டி, செகுத்திடுமேசுவாசசுரகணதோஷங்கள் தெரிந்துரைத்தார்மாமுனிசஞ்சீவியென்றே .................................. (எசுஙு)

* பத்திரி - இலைவகை

## கணக்காய்ச்சலின் குணம்

* உந்திதனைப்பற்றி யீரலளவும்புண்ணுப்ஒருக்காலேசுவாசந்தான்உண்டாமெற்ற, வந்துசுரம்பூசிறுற்போலேசாய்ந்து வருத்தமாய்திட்டுமுட்டாய்மயக்கங்காணும், இந்தவகை கணக்காய்ச்சலென்றே நாளும் இயம்புவார்புவிமீது நூல்வல்லோர்கேள், சுந்திரியாள் உமைபாகன்முனிக்குசொன்னசூக்ஷமிது தானறிவீருண்மைதானே..........................................................(எசுக)

* உந்தி - மணிபூரகமாகியநாபி

கணக்காய்ச்சலுக்கு கலியாணபூசினி

## நெய்

ஆசிரியவிருத்தம்

சீராரும்பூசினிச்சாற்றின் இளநீருடன்சொல் ஆவின்நெய்பாலுமாய் .........*
திகழுரு * சதாவேரியின்கிழங்கிவையுடன் செய்வகைக்கோர்நாழியாய் ... *
காராருரோசணிச்சண்பகம்வெட்டிவேர் கடல்பச்சை அதிமதுரமும் ......... *
காடுவளர் இலவங்கம் † இருமுட்டிதிப்பிலிக் கருதுசந்தனம் ஏலமும்.........*
பாராரிலாமிச்சு ‡ மாவிதைக்கோஷ்டமும்பருவிளாம்பிசினியுடனே ......... *
உண் பிலவுநல்பிசின் வில்வபிசினுடுயர்பகருமொருபொன்முசுட்டை ...... *
நேராருமோர்வகைக்குசெடைநிதானமாய்நிலவரமதாயரைத்து..............*
நேசமுடனெய்யிற்கலந்தெரிவடித்ததைநித்தங்கொடுத்துவிடுமே ......(எசுஉ)

* சதாவேரி - தண்ணீர்மீட்டான் † இருமட்டி - சிற்றுமுட்டி - பேராமுட்டி ‡ மாவிதை - மாம்பருப்பு

இதுவுமது

வெண்பா

விடுமேகணக்காய்ச்சல் மேல்வெதுப்பும் உட்சுரமும் ..........................*
நடுமெலி நமலுடன் சாந்தமாங் - கொடுமேதாகம் ..........................*
பூசினிக்காய்நெய்தனக்குப் பூரிக்குமேயுடலம் ..........................*
காசினியிலுள்ளவர்க்கு காண் ..........................(எசக)

கணக் காய்ச்சலுக்கு வேறு

## எண்ணெய்

கட்டளைக்கலித்துறை

புள்ளடி செப்புநெருஞ்சில் வல்லாரைப் * பூலாவுடனே ..........................*
தெள்ளடிக்கோழியவரையின்சாறொடு சேர்ஒருகால் ..........................*
தள்ளடி ஆமணக்கெண்ணெயுஞ்சேர்குராசாணியுடன் ..........................*
துள்ளடிக்கடுகு ரோகணி வெளிச்சையுஞ் சொல்விடுமே ..........................(எசச)

* பூலா - வரட்பூலா

இதுவுமது

சொல்விடுமாவின் புல்லுரீ இமாஞ்சியுஞ் சொன்னவகை ..........................*
எல்லைஅளவு இரண்டுபபணவெடை இதில்கலந்து ..........................*
துள்ளஎரித்துப் பதமாயிறக்கி நல்துட்டளவாய் ..........................*
பிள்ளைகட்கேயிட கணங்களுங் காய்ச்சலும்போய்விடுமே.......... (எசரு)

கணக்காய்ச்சலுக்கு வேறுஏலாதிமாத்திரை

## தன்வந்திரி

---

எண்சீராசிரியவிருத்தம்

ஏலாதிமாசிக்காய் திப்பிலி ஏலம் இனியகோரோசினையுங் கோஷ்டமாஞ்சில், ஏலாதிசீரகந்தான் * இரண்டு † அக்ரா இனத்தோடேகால்பலமாய்நிறுத்துங்கொண்டு, ஏலாதிகல்லிலிட்டு முலைப்பால்வார்த்து இருசாமந்தானரைத்து உண்டைசெய்து, ஏலாதிகணசுரங்கள் கண்டசேயற் கெடுத்திடுநீ முலைப்பாலிலீந்திடாயே. ..........................(உசசு)

* இரண்டு - நற்சீரகம் - கருஞ்சீரகம் † அக்ரா - அங்கராகாரம்

கணக்காய்ச்சலுக்கு வேறு

## நெய்

சங்குடனே செருப்படையுந்துளசி * பூலாதருகழற்சிநரிபயற்றஞ் சாறு வெவ்வே, றங்கதொரு படியதனில் அப்பைக்கோவ்வை அடர் நெருஞசில் ஆடு துவளைவேர் கிராம்பு, இங்கிரதிப்பிலி சாதிக்காய் † இம்பூரல் இயல்வசம் புள் ளிச்சுக்கு கடுக்காய்தேக்கு, துங்கநெய் தாஞ்படியி லெரித்தருந்தி பூசச்சொல் லில் இதுகணங்கள் உட்சுரமும் போமே .............. ..............(எசஎ)

* பூலா - வரட்பூலா † இம்பூரல் - சாயவேர்

கணவெதுப்புக்கு

## கியாழம்

பழம்பாசி கணப்பூண்டு * வெதுப்படக்கி பசியநல்லவல்லாரைத் தக ரைக்கூட்டி, குழம்பாகர்காய்ச்சியநீர்த்தன்னிலேதான்கூட்டி † இருசீரகம்ரோ சிளையைப்போட்டு, விரும்பாலர் கணந்தனக்கு விரும்பிக்கொள்ள விட்டோ டுங்கணமெல்லாம் வெதுப்புமாறும், செழும்பாலர் தங்களுக்கு ஏலாதென்று கேவலமாயுரைக்கவினி சேருந்தானே. ..................................(எசக)

* வெதுப்படக்கி - பேய்மிரட்டி † இருசீரகம் - நற்சீரகம் - கருஞ் சீரகம்

கணக்காய்ச்சல்மாறலுக்கு

## சூரணம்

அதிமதுரம் ஏலமுடன் லவங்கப்பட்டை ஆனசண்பகமொக்கு கோஷ் டந்தானும், விதியுடனே சுக்குஞ்சீரகமுமுத்தம் விதவிதமாய் வறுத்திடித்துப் பொடித்துக்கொண்டு, சதிநுடனே சர்க்கரையுங்கூடச்சேர்த்து சகலபிள்ளையரு ந்திடவேசபலமாகும், மதிநுதல் சேர்பெண்ணரசேசகணமும் போகும் மாறிவ ருங்காய்ச்சலெலா மாறுந்தானே.................................... (எசக)

கணக்காய்ச்சல் * மசக்கைக்கு மருந்து.)

* மசக்கை - மயக்கம்

ஆசிரிய விருத்தம்

உத்தபுளி வேம்புமாநெல்லி நாரத்தையும் ஒதிநுணா தகைரை * நிம்பம்... *
ஒதுவகையீர்க்கில் வல்லாரைப்பழம்பாசி உசிதபுள்ளடிமுத்தமும் ..........*
பத்திதரும் சுருள்ளி † வன்ன அத்தி ‡ இருமுட்டி பகர்மிளகு தக்காளியும்...*
பகர்மூசக்கைக் காந்திநரிப்பயற்றங்கொடிப் பற்படகம் மூக்கொற்றியும்......*
சத்திவளர் § முனி ¶ அமான்பச்சரிசி சிந்திலும் சமனுக இருசீரகம் ......*

தகர்சுக்குவெந்தயம் அரைபலமதாய்வறுத் தாதண்டைக் கியாழசற்கம் ......*
வைத்துகோரோசினை அக்கரா அதிமதுரம்வரிகலங்கொம்புகோஷ்டம் ...... *
வாகாச ஒவ்வொருபணவெடையதாகவே வளமாக நிசழஅனாயே.....(எருவ)
* நிம்பம் - வேப்பீர்க்கில் † வண் - மிகுதி ‡ இருமுட்டி - சிற்றாமுட்டி - பேராமுட்டி § அமான் - அம்மான்

இருவுமதா

அறுசிராசிரியவிருத்தம்

அரைத்தரைகுழவிந்திய ஆனதோரிரண்டுநேரம் ................................ *
உரைத்திடும் பத்துநாள் தான் உட்சுரம் உள்ளவெல்லாம் ..........................*
கரைத்திடுங்கணமுப்பொல்லா காய்ச்சலுங்கணமுந்தீரும் ........................ *
வரைத்திடு சுரமசக்கை மாறுமென்றநர்செய்தாரோ ................. (எருக)

உடம்புநோய்க்காய்ச்சலின்

குணம்

வெண்பா

உதட்டைக்கடிக்கும் உறகை முஷ்டியாய்பிடிக்கும் ................................ *
மிதட்டநட்டக்கண்ணைப்விழிக்கும் - பதட்டமுடன் .......... ................................ *
* குஜத்தைக்கடித்திழுக்கும் கூறுடம்புநோயாம் .......... ................................*
நிஜத்தைவிளக்கிறேனநேர்..........................................................(எருஉ)
* குஜம் - கொங்கை

உடம்புநோய்க் காச்சலுக்கு

மருந்து

* சீதேவி பூடிடித்து செய்யபிட்டாயவித்து........................................ *
ஓதே அச்சாற்றில் † உரோகணியை - மாதே............... ... ...............*
அரைத்துநீதான்வெள்ளாட்டுப்பாலிற்புகட்ட ........................................*
புரைத்துடம்புகாய்ச்சல் நோய்ப்போம்...................... .................... (எருங)
* சீதேவிப்பூடு - சாணைக்கிப்பூண்டு † உரோசணி - கடுகுரோகணி

கணசுரம் கணயாண்டு அஸ்திவெட்டை இருமல் இரத்தத்திற்கு

எண்ணெய்

தன்வந்திரி

ஆவாரைவேரு அழதுசரக்கொன்றைவேர் ........................................*
காவாத விட்ணுக்கரந்தைவேர் - பூவா ;........................................ ...*
சலக்கமில்லாமல் கமழ்ந்தநதுவீசும் ...................... ................................ *
திலக்குமிழின் வேரதனைநேர் ....................... .......................(எருச)

இதுவுமது

எண்சீராசிரிய விருத்தம்

வேருசிறு அம்மான்பச்சரிசி ஏலம் * விளாசிரம் † யானைக்கால் வணங்கிப்பூடு, தாருடனேவகைக்கு அரைபலமுவாங்கிதனியாகு ‡ சிற்றேரண்டத்தெண்ணெய் † ஒன்றில், கூருடனே ஆவின்பால் விட்டரைத்துக் குறிசொல்வேன்கலக்கி எண்ணெய எரித்துவாங்கி, சீருடனேமண்டலங்கால்கரண்டியிதம் சிறு இச்சாபத்தியமாய்க்கொள்ளச்சொல்லே....................(எருச)

* விளாசிரம் - வாசனையானசிரகம் † யானைக்கால்வணங்கிப்பூடு - நெருஞ்சில் ‡ சிற்றேரண்டம் - சிற்று மணக்கு ‡ ஒன்றில் - எண்ணெய்ப்படி ஒன்றில்

இதுவுமது

கொள்ளவேசணபாண்டு கணசுரங்கள்கொடிதான அஸ்திவெட்டை இருமல் ரத்தம், கொள்ளவே பறந்தோடும் எண்ணெய்மார்க்கம் குறியாகசிறுபிள்ளைக்கழிச்சல்தோஷம், கொள்ளவே உப்பிலியின் பூண்டுவாங்கி குணமாக நறுக்கி * ஆநெய்யுஞ்சேர்த்து, கொள்ளவே ரவிகாய சாமம் நாலு குருவருளால் பிள்ளைதனக் கிந்திடாயே...................................(எருசு)

* ஆநெய் - பசுவின்நெய் - இம்மூன்றுமொருதொடர்

காய்ச்சல் அதிசாரசுவாசகாசத்திற்கு

## மருந்து

* அஞ்சனவேர்நெற்பொரியும் † மாஞ்சிலோடு அதிமதுரஞ்சர்க்கரை தேன் ‡ அளாவிபுண்ண, கொஞ்செனவேகொஞ்சுபிள்ளைக் காய்ச்சல்தீரும் குயில்மொழியாய் இன்னமொன்றுகூறக்கேளு, தஞ்சமென்ற அதிவிடையந்தேனிற்கொள்ளதாகமுடன் அதிசாரஞ்சுவாசம்போகும், மஞ்செனவுங்குழல்மடவாய்பிள்ளைக்கென்று வைத்தியநூல்சிவன் உரைத்தவாறுதானே ... (எருள)

* அஞ்சனவேர் - அவுரிவேர் † மாஞ்சில் - சடாமாஞ்சில் ‡ அளாவல்-கலத்தல்

உட்காய்ச்சலின்குணம்

## தன்வந்திரி

அறுசீராசிரியவிருத்தம்

மலமும்சலமும் மிகதீய்ந்து மார்பிலதிகசுரங்காயும் ......................... *
மலமும் வயிறுமிக எரியும் வளமாய் தலையுமிகமயக்கும் ......................*
சலமும் வற்றித்தான் குறையும் சண்டாளம்போல் உட்காய்ச்சல்...... ........*
தலமாம் பனிரண்டாட்டுமட்டுந் தனதாய்வருகுங்கணமிதவே ......... (எருஅ)

இஃதொன்றுமொருதொடர்

சவலை - குளிதோஷம் - வரட்சணம் - உளம்பிளோத்தல் மாந்தக ணம் - உட்காய்ச்சல் - அட்சரக்காய்ச்சலுக்கு

## எண்ணெய்

எண்சீராசிரியவிருத்தம்

கற்றாழஞ்சாறு இளநீர் ஆவின்பால் கருதுவகை படியொன்று அளந்து க்கொண்டு, பற்றுஞ்சிற்றாமணக்கின் எண்ணெய்மூன் றுப் படியளந் தொன்று ய்க் கலந்துசொல்லக்கேளு, சற்றுணகணப்பூண்டு கலைமான்கொம்பு சந்தனமு ம் * கச்சபத்தின் ஓடிந்நாலும், மற்றுனவகைக்கு பலம் ஒன்றதாக மருவிளு நீர் விட்டரைத்து மருந்திற்சேரே ......................................(௭௬௯)

* கச்சபம் - ஆமை

இதுவுமது

சேர்க்கவேசண்பகப்பூசாதிக்காயும் சீரகமும் அதிமதுரம்சிறுநாகப்பூ ...... *
வார்க்கவேகரியசீரகம்வகைக்கு வளமானகால்பலமாய்நிறுத்துக்கொண்டு ... *
பார்க்கவேசாபத்ரிபலம் அரைக்கால் பகர்கொத்தமல்லிபலம் அரையதாக ... *
மார்க்கமாய்பசும்பால்விட்டாட்டியேமுன் மருந்தில்சேர்த்துக்கலக்கிக் காய்ச்சி க்கொள்ளே ......................................(௭௬௰)

இதுவுமது

காய்ச்சியே மெழுகுபதந்தனில்வடித்து காலைமிலுமாலையில்தட்டெடை யேவாரு,பாய்ச்சியே இவ்வண்ணம் எழுநாள் ஈரதால் படர்மாந்தகணஞ்சவலை குளியின்தோஷம், ஆய்ச்சியேவரட்சணமும் உடம்பிளைத்தல் அட்சரத்தின்காய் ச்சலுடன் உட்காய்ச்சற்போம், ஓய்ச்சியேசிறுவருசகுவந்தநேரங்கள் உண்மையு டன்திருமிது இண்ணந்தானே ......................................(௭௬௧)

காய்ச்சல் உட்காய்ச்சல் மாந்தம் உடம்புவற்றலுக்கு

## எண்ணெய்

கொச்சகம்

முனிவோர்சிற்றாமணக்கு முதலிளநீர் தனிலவித்து ......................................*
செனிவாகும் எண்ணெய்படி சேர்பசும்பால்ரண்டுபடி ......................................*
தனியா * குமரியினீர் தானரைப்படியாக ......................................*
தொனியாய்மெழுகுபதஞ்சொல்லும்படிகாய்ச்சே ...................... (௭௬௨)

* குமரி - கற்றாழை

இதுவுமது

காய்ச்சி இறுத்தெண்ணெயினிற் கற்கமினி சீரகமும் ......................................*
* மாச்சிக்காய்கோஷ்டம் மதுரம்கிராம்பேலம் ......................................*

தாழ்ச்சியில்லா சுக்கு சரிவகைக்கு காசெடையாப் ......................... *
கூச்சமின்றி வெந்தயமும் கூறும்பலங்காணே ......... .................... (ஏசுங)
* மாச்சிக்காப் - மாசிக்காய்

இதுவுமது

எண்சீராசிரியவிருத்தம்

காணவேயிவையெல்லாம் வறுத்திடித்து கற்கமதை வெண்ணெயிலேகல ந்தபின்பு, பூணவேசூரியன்தன் புடத்திலவைத்து பிள்ளை நனக்கேந்திடவேபோ ந்நோயெல்லாம், தோணவேகாப்ச்சல் உட்காடச்சல்மாந்தம் தோற்றுகின்ற உடம்புவற்றல் வகைகள் யாவும், நாணவேவாய்வரண்டுகுலை நடுங்கி நாடாதெ ன்றேபெரியோர் நவின்றிட்டாரே. .................. ..................... (ஏசுச)

## ஆமசுரத்தின்குணம்

அறுசீராசிரியவிருத்தம்

ஆமசுரத்திற்குணங்களு அதிசமாகவெதும்பாது ...... ......................... *
சாமந்தோறும்வெதும்பிவிக்குந்தண்ணீர் உமிலே உண்டாக்கும் .................. *
சேமமான உடம்பிளைக்கும் சிறி முகம் பசியில்லை ............................ *
தாமங் * காரி உடல் ஒய்யும் நடுங்கியிருக்குங்கண்டாயே.................... (ஏசுரு)
* காரி - உடல்கறுக்கும்

இதுவமது

ஆமசுரத்திற்குணங்களாய் அடவாய்கைகால்குளிர்ந்துவிடும் ............... *
சாமந்தோறும் எழுந்திருக்கும் தாயின்முலைப்பால் அருந்தாது.................. *
* தூமவாயிலெடுத்துவிடுஞ் சோர்ந்துகிடக்கும்வாய் † அரற்றும் ............ *
காமனைப்புங்கயற்கண்ணாய் என் தலைமிகநோங்கண்டாயே ............... (ஏசுசு)
* தூமம் - புகை † அரற்றும் - கூவும்

ஆம சுரத்திற்கு

## மருந்து

உத்தாமணியும் பாவட்டை உகந்த * சங்குகாவட்டை.............................. *
சித்தமுருங்கை நுணா ஈர்க்குஞ் சேரக்கூட்டுப்பொடி தலையும் .................... *
ஒத்த ஓமம் திப்பிலியும் உத்தவசம்பு † துளி ஓடும் ................. ............ *
கத்தமாககறுஞ்சீரம் சுகமாய்முடிந்து கூட்டிடுமே........................ (...ஏசுஎ)
* காவட்டை - மாந்தபுல் † துளி - ஆமை

இதுவுமது

ஆ வின்வெண்ணெய் விளாங்காய் போல் அதனில் உத்தாமணிக்கொழுந்து *
துவிபத்து வசம்புள்ளி துணித்திட்டோமம் சுணா ஓடு .......................... *

ாவும் ஆமை ஓடுமுண்டு தானேவறுத்திட்டிருசமஞ்ச ................................*
ியெவிர் ஒன்ருய் அருந்திடவேமிக்க ஆம சுரம்போமே.......................(௭௬௮)

ஆமசுரத்திற்குவேறு

## மருந்து

உத்தாமணியும்பாவட்டை உகந்தசங்குதூதுவளை.........................................*
மெத்தக் * கொடுப்பைப்பொடுதலையும் வேண்டும் ஒமந்திப்பிலியும்...........*
த்தயிளகுவசம்புள்ளி ஒடித்து ஆமை ஓட்டுடனே ......................................*
நற்றமறவே முடிந்திட்டுக் கொடுப்பீராமசுரம்போமே ......................(௭௬௯)

* கொடுப்பை - பொன்னுங்காணி

ஆமசுரத்திற்குவேறு

## கியாழம்

வெண்பா

கூறுகின்றபாவட்டைக் கொன்றைசிற்றுமுட்டியின்வேர் ..................................*
நீறுடன் வேலிப்பரித்தி வேருடனே - நாறுகின்ற...........................................*
நன்மிளகுகூட்டி நலமாய்க் கியாழமிட .........................................................*
ஒசன்மையில்லை ஆமசுரம்செப்பு....................................................(௭௱)

ஆமசுரமாறலுக்குவேறு

## கியாழம்

எண்சீராசிரியவிருத்தம்

வேப்பிலுப்பைமாவிலிங்கு பாவட்டை * சிக்குரு விருப்பமுடன் இலை பிர்க்குபிடிகள்சேர்த்து, கோப்பில் ஒதிநுணு † வேலிவேளைத்தண்டு கொடியசாரணை வேரும் பேய்ப்பாச்சோற்றி; காப்பிலே வறுத்து இருநாழிநீரிற் கற்கந்திப்பிலிமிளகு ஆமையோடு, வாய்ப்பசுக்குவசம்போமம்முடிந்திட்டாற்சால்வகையாக ஆமசுரமாறல் போமே.............................................(௭௱௧)

* சிக்குரு - முருங்கை † வேலி - உத்தாமணி

ஆமங்குளிர்சுரங் கடுப்புக்குவேறு

## குளிகை

அறுசீராசிரியவிருத்தம்

உள்ளியைத் தைலம்வாங்கி ஒச்சவே தராயின்வேரும்.......................................*
தள்ளிய பொன்னுங்காணி சாரணைவேருங்கூட்டி..........................................*

ஒள்ளியமாய் அரைத்து உண்டை ஓர் சுழஞ்சுதாக்கி.................................*
கொள்ளவே ஆமம்மற்றங்குளிர் சுரங்கப்புபோமே ..........................(௭௭௨)

### போராமம் அஸ்திசுரத்திற்கு

## எண்ணெய்

### வெண்பா

நீறுவேளைநாய் வேளை நற்செம்பரித்தி ...............................................*
சிறிய மணித்தக்காளிசெவ்வவரை - சிறிய .............................................*
நுசரைப்பழம்பாசி சமுத்திரா சோதி .....................................................*
பகரம்மான் பச்சரிசிபார் ..................................................................(௭௭௩)

### இதுவுமது

பாரில் * விளா † அழம்பு பட்டை இலேவேலி ...........................................*
சேரும் பரித்தியிண்டு செம்முள்ளி ‡ காரி § மால். ....................................*
¶ துளபந்தராயிலேயும் சொல்லும்பரித்திவிரை ........................................*
பலையாய் பாவட்டைப் பறி ...............................................................(௭௭௪)

* விளா - நிலாவிளா † அழம்பு - சிவதை ‡ வேலி - உத்தாமணி § காரி - கண்டங்கத்திரி ¶ மால் - விட்டுணுக்கரந்தை -ஒ துளபம் - துளசி

### இதுவுமது

பரிவாம் பொடுதலேயும் பச்சைச் சுழற்சியிலே .........................................*
நரியாம்பயறுசிறுபுள்ளடியும் - அரிதான ..................................................*
கோழி அவரைசுரைக் கொன்றையுடப்பட்டை ...........................................*
வாட்முருங்கையும் அகத்திவை..........................................................(௭௭௫)

### இதுவுமது

கற்றாழந் சோறும் சுணபூண்டும் ஈர உள்ளி.........................................*
* சிற்றுகும் பீர்க்குசிறுசி ளி - பற்றுனக் .............................................*
† கோடகசாலேக் கொண்டு தனிச் சாறுசமன் .........................................*
சாடிதனில் வார்பதற்குதான் ...............................................................(௭௭௬)

* சிற்றுகும்பீர்கரு-பேய்ப்பீர்க்கு † கோடகசாலே -சதைகரண்டி

### இதுவுமது

ஆமணக்கெண்ணெய் அளந்துருணிவிட்டு .................................................*
தாமணக்கும் வெயிலிலேதான்வைத்து - ஓமமுடன் ....................................*
சாதிக்காய் சாதிபத்திரி தன்வசம்பு கொத்துமல்லிக் ..................................*
கோதில்லா வெள்ளுள்ளிக்கட்டு .........................................................(௭௭௭)

இதுவுமது

* பஞ்சதிரவியமும் பண்பாகதிப்பிலியும் ......................................*
எஞ்சாவிருக ணைடைரண்டாம் - அஞ்சா......................................*
தனைத்துக்கனைத்துமெழு கானபதம் பார்த்......................................*
துணைத்த படியிறுத்துட்கொள்......................................(எஎஅ)

* பஞ்சதிரவியம்-மிளகு-கோஷ்டம் - அகில்-தக்கோலம்-குங்குமம்.

இதுவுமது

உள்ளேதான் கொள்வ தொருகரண்டி எண்ணெய் ......................................*
விள்ளாத * ஆமம்விழுவிக்கும் - மெள்ளமெள்ளப் ......................................*
போராமம் அஸ்திசுரம் போக்கும் இதற்குநல்ல ......................................*
சீரான்பத்தியமேசெய் ......................................(எஎகூ)

* ஆமம் - சீதம்

# தீராதஆமசுரத்தின்

## குணம்

அறுசீராசிரியவிருத்தம்

பிறகுமதலைதலைநடுக்கும் பேசுந்தொண்டையில் சேஷ்மந்தான்......................*
அறுதியாக தொட்டுநிற்கும் அரிதாய் கண்ணும் விரிந் திருக்கும்......................*
* கரியவிழிகள் வெளுத்துவிடும் காயுங்குளிர்ந்து † கண்ணுறங்கும்......................*
பரிவாய் குணங்களிதுகண்டால் பார்க்கத்தீராதென் றுனாயே......................(எஅ0)

* கரிய - கறுத்த † கண்ணுறங்கும் - தூங்கும்

# இரத்தசுரத்தின்

## குணம்

தாகமுங்கழிச்சலாகும் தலையதுசுழற்றல்காணும் ......................................*
வேகமாய்சுரமுஞ்சற்றே விட்டுவிட்டேகுங்காயும்......................................*
வாகுசேர் கண்ணுந்தாழ்ந்து வாயுடன் நா உலர்ந்து......................................*
சோகமும் வயிற்றில்நோயும் சோர்ந்துகைகால் தண்ணீரோ ......................(எஅக)

இரத்தசுரமுதலாகிய பலசுரம் வெதுப்பு

தாகம் பழசுரத்திற்கும்

## பாலசஞ்சீவிமாத்திரை

நாவிதிப்பிலிவெண்காரம் நல்லச்காசெடை மூவைந்து......................................*
மேவுஞ்சாதிலிங்கமது வீசுங்காசெடை பத்தாகும் ......................................*
தூவுநிம்பழத்தின் சாற்றில் சுகமாயரைத்து ஒருசாமம்......................................*
காவியங்கயற்கண்ணாளே கடலைதினை உண்டைசெய்யே ......................(எஅஉ)

இதுவுமது

சுக்குநீர்த்தன்னில்கொள்ள சுகமுடன் வெதுப்புதீரும்..............................*
தக்கசீரகங்கிராம்பு தனிவிட தாகந்தீரும்... .........................................*
* பக்காலின் விழுதிற்கொள்ள † பண்டையின்சுரங்கள்தீரும்..........................*
மைக்கண்ணாய் குளிகைபிப்பேர் பாலசஞ்சீவியாமே....... ............(எஅக)

* பக்காலின் - பக்கஆலின் † பண்டை - பழய

ஷை - இரத்தசுரத்திற்கு - (கஉசு)ஞ் செய்யுளிற்சொல்லிய

கஸ்தூரி எண்ணெய்க்கொடுக்க - மஹாநன்மை

## அன்பறுதிசுரத்தின் குணம்

ஆர்க்குங்காயும் அன்பறுதி ஆனசுரத்தை அறியக்கேள் ........................ *
வேர்க்கும்வெதும்புங் கண்சிவக்கும் வெந்நீர்வேண்டும் பலகாலும்............*
பார்க்கப்பயமாயிருக்குந்தேனைப் பதரிஅலறிக்கதரியழும்........ .................*
சேர்க்கவயிறு சிக்கிவிடுந் தெருவிற்பிறப்பட்டோடிடுமே.........................எஅசு)

அன்பறுதிசுரமுதலாகிய குன்மம் இருமல் எண்வகைசுரஞ்

சீதபேதி கணமிருமலுக்கு

## எண்ணெய்

எண்சீராசிரியவிருத்தம்

கற்றாழஞ்சோறு * கடுகளிப்பாக்கோடு சருவேலும்பிரமியுடன் சுக்குங் கூட்டி, பற்றாமல்நாலிலொன்றாய்க் காட்ச்சிக்கொண்டுபதராமல் எண்ணெயுடன் பருகுவீரேல், வற்றாத கடல்வற்றும் சீதம்போகும் வலுவான குன்மமுடன் இருமல்போக்கும், பெற்றாளே எண்சுரமுஞ் சீதபேதி பேருலகில் நாடாது பேசுவீரோ......................................................................(எஅரு)

* கடு - கடுக்காய்

மாங்கிஷ சுரத்தின்

## குணம்

அதிகமாய் சரீரமெல்லாம் அனல் போலேசுரமுங்காயும் ......................*
சதிரமெல்லாம்நடுக்கும் தாகமூர்ச்சுமெற்றஓடும்.....................................*
உதிரம்போய்உடல்வெளுத்து உருகியே கருகுமேனி ..............................*
* மதியுமே மயங்கிமூர்ச்சை † மயிர்க்குச்சு மாங்கிஷவெப்பே.........(எஅசு)

* மதி - புத்தி † மயிர்க்குச்சு - உரோமங்கட் சிலீர்த்தல்

மாங்கிஷசுரமுதலாகிய - சகலசுரத்திற்கும்

## கர்ப்பூராதிமாத்திரை

எண்சீராசிரியவிருத்தம்

* கர்ப்பூரஞ்செந்நிஇந்து லவங்கத்தோடு கனமானசாதிக்காய் சாதிப த்ரி, செப்பமுடன்ஒருகழஞ்சு † தேசிச்சாற்றில்திறமாகஒருசாமம்அரைத்துக் கொண்டு, ஒப்புடனே உழுந்தளவு உண்டைசெய்து உகந் திஞ்சி சர்க்கரையிற் சுக்கில்ஊட்ட, நட்புடனே ‡ எச்சுரமும் மூன்றேமுக்கால் நாழி கையில் விட் டகலும் நாட்செல்லாதே ..........(எஅஎ)

* கர்ப்பூரம் - பச்சைக்கர்ப்பூரம் † தேசி - எலிமிச்சம்பழம் ‡ எச்சுர மும் - எந்தசுரமும்

அஸ்திசுரத்தின்

## குணம்

---

அறுசீராசிரியவிருத்தம்

அஸ்திசுரத்தின்குணஞ்சொல்லில் அனலேவெதும்பி மூலேஉண்ணு ..........*
புத்திகலங்குமுள்ளுளையும் போதவெள்ளோக்காளமிகும்..........*
சத்திஎடுக்கும் நீர்ச்சிவக்கும் சாமந்தனிலேதான்காயும்..........*
வற்றி * வீங் கிருமற்சோகைவருமேகடுப்பு சுரந்தானே ..........(எஅஅ)

* வீங்கி - இருமல்

அஸ்திசுரம் வரட்கணத்திற்கு

## நெய்

எழுசீராசிரியவிருத்தம்

சாஸ்திரபேதிக் கோஷ்டம்மதுரம் சந்தனம்ஏலம் சீரகமும் ..........*
தணுங்கொன்றைக் காய்ப்பிசினோடு * சங்கர ருத்திராட்சம்..........*
காத்திரமான் கொம்புடனெல்லிக் காய்வற்றல் சண்பகமும் .......... *
கனிகொத்தமலி விலாமிச்சைக்காசள வெனவே ஆட்டி ..........*
பாத்திரமதனில் நெய்யொருநாழிப் பரித்திக்காயின் சாற் ..........*
பசுருங் † காணிச்சாற் வகைக்கானும் பதமாய்வடியிட்டுத் ..........*
தோத்திரமாக பலங்கால்சர்க்கரை துவளகரண்டியிட ..........*
தோன்றிய அஸ்திசுரம் வரட்கணமுஞ்சொல்லாதோடிடுமே..........(எஅகூ)

* சங்கரருத்திராட்சம் - சிவனுக்குரியஉருத்திராக்கமென்பர் † காணி - பொன்னுங்காணி

வாந்திசுரம் இருமலுக்கு

## சூரணம்

வெண்பா

* காரிவிளா † அசுவம் காறுசிறுதிப்பிலியும் ................................*
கூறுசமன் பொடித்துக்கொடுக்க - ஆறுமே..................................*
வார்திவிக்கல்சுரம்இருமல் வாராதுசாணும் ...................................*
சேர்ந்துதணிபுமிது தின்.................................................(௭௱௯௰)

* காரிவிளா - கண்டங்கத்திரிவித்து † அசுவம் - அமுக்கரா

சீதசுரத்திற்கு

## ஔழ்தம்

அறுசீராசிரியவிருத்தம்

* வழுதலைசிர்திதில்தண்டு தாமரைவளையத்தோடு ... ..........................*
முழுதுளா) சுக்கு † முத்தக் காசுடன் ஒன்றதாக ..............................*
பொழுதுடன் கூட்டிமேலே பொடிதூவிக் கொள்வீராகில்.........................*
எழுபது லட்சசீத சுரமது இல்லைதானே.....................................(௭௯௧)

* வழுதலை - கண்டங்கத்திரி † முத்தக்காசு - கோரைக்கிழங்கு

சுரம்இருமல் சீதசுரத்திற்கு

## கியாழம்

நாட்டு * மூலம் தூதுவளை நல்லங்கண்டங் கத்திரிவேர்... .......................*
கோஷ்டம் சிங்கிமுசுச்சைமுள்ளிங் கொடியஅரத்தைதிரிகடுகு ...................*
எட்டின் படியேகியாழம் வைத் திதமாய் ஆறுபோதருந்த...........................*
ஓட்டமோடுஞ் சுரமிருமல் ஒடுங்கிசீதசுரம் போமே..........................(௭௯௨)

* மூலம் - சித்திரமூலம்

விஷசுரத்திற்கு

## கியாழம்

கலிவிருத்தம்

* கடுசமூன்றுடன் கானவசம்பொடு ............................................*
எடுபடுகியாழம் எட்டொன்றாக்கியே ..........................................*
விடுவிடுதேனுடன் விளாவிக்கொள்ளவே........................................*
ஏடுபடு விஷசுர சீதம் இல்லையே..........................................(௭௯௨)

* கடுகமூன்று - சுக்கு - மிளகு - திப்பிலி

சுரத்திற்கு

## ஏலாதிமாத்திரை

எண்சீராசிரியவிருத்தம்

அரிய * ரோசினியெட்டைவிருகன்மூன்று அதனுடனே அதி மதுரங் காஷ்டம் † இந்து, பெரியஇருப்பைக் கொட்டைசாஸ்திரபேதி ‡ பெருஞ்சீ ரகங் கருஞ்சீரகமுங்கூட்டி, சரியாகவிருகனெட்டை ஒன்றுகூட்டி தண்மை § கு மரிச்சாற் வார்த்தரைத்துபின்பு, உரியமுலைப்பாலிலரை குன்றிப் போல உண் முலைப்பால் தன்னிலிட சுரமோடும்மே ........................................(௬௪)

* ரோசினி - கோரோசினை † இந்து - இந்துப்பு ‡ இருப்பை - இலு ப்பை § பெருஞ்சீரம் - சோம்பு - குமரி - கற்றாழை

சுரம் வரட்கணம் இரத்தகணம் குளிர்தோஷம் சவலைக்கு

## கற்றாழைஎண்ணெய்

அறுசீராசிரியவிருத்தம்

கற்றாழஞ்சாறுபாலுடனே காந்திஇளநீர் அவ்வகையும் ............................*
வற்றுவகைக்கு படியாசவாசாப் திப்பம் இதிப்பாதி............................*
* சிற்றாமணக்குபடிமூன்று திறமையாக கலந்திட்டு..............................*
சற்றேசந்தனங் கணப்பூண்டு தானே † சிங்கிஓர்பலமே ................(௬௫)

* சிற்றாமணக்குபடிமூன்று - சிற்றாமணக்குநெய் படிமூன்று † சிங்கி - கலைமான்கொம்பு

இதுவுமது

பலமேஅரைதான் சண்பகமும் * பச்சைப் பூலாஏலமுடன் ......................*
நலமாய் † இரண்டு வாசவேர் ‡ நாறிசாதிக்காய் பத்ரி..............................*
நிலமேவளருங் கொத்தமலி நீகேள் மதுரங்கோஷ்டமுடன் ..........................*
பிலமேகடுகுரோகணியும் பெண்ணே கிராம்பு § முத்தமுமே ..........(௬௬)

* பச்சை - பச்சிலை † இரண்டுவாசவேர் - வெட்டிவேர் - விலாமிச்சு சவேர் ‡ நாறி - நன்னாறி § முத்தம் - கோரைக்கிழங்கு

இதுவுமது

முத்தஞ்சன்னலவங்கமுடன் மொழியுஞ்சீரகம் இருவகையும் ......................*
சுத்தநாகம் சிறுநாகம் சொல்லுங்காசெடை ஓராளவாய் ..............................*
வைத்தே அரைத்து எண்ணெய்தனில் வகையாய்கலந்தே எரியிட்டு.............*
அத்தைவடித்துப் புல்லுருவி ஆனக்காசெடைதூவிவிடே ...............(௬௭)

இதுவுமது

தூவுமெண்ணெய்க்காசெடைதான் சுகமாய் இரண்டுவேளையுமே .............*
மேவிகுழவிக்கிடும்போது மிருத்தகாய்ச்சல்வரட்கணமும் ........................*

கூவியோடும் இரத்தகணம் குளித்தோஷஞ் சட்சவலையுடன் ...................*
பாவாய்பாலர்க்கிடவேதான் பகர்கற்றுழை யென்னையிதே ............ (௭௮)

## பழஞ் சுரத்திற்கு.

## கியாழம்

அரிய * தூதுகாஞ்சோரிவேர் ஆனசிந்தில் பற்படகம் ...........................*
பெரியநொச்சில் பேராமுட்டி பின்னுஞ் சிற்றாமுட்டி யுடன் ......................*
இரிய கடுக்காய தான்கூட்டிக் கியாழம் வைத்து தான்இறுத்து ......................*
உரிய திப்பிலி பொடிதூவி உகந்துகொள் பழஞ்சுரம்போமே..............(௭௯)

* தூது - தூதுவேளை

பழஞ்சுரம்விடாக்காய்ச்சல் - ஆமசுரம் - விஷதோஷம் (மூ) சன்னிக்

கு - ஏலாதிமாத்திரை

## தன்வந்திரி

### எண்சீராசிரியவிருத்தம்

நல்குவீர் நல் ஏலம்கிராம்புமுத்தம் நல் மதுரம் * இருவேலி கடுகுசுக்கு, அல்குவீர் † மதுரம் ‡ ரோசினை நன்னாறி அரியநிலப்பனையில்வேர்தாளீசுந்தான், வல்குவீர்சடாமாஞ்சில்சந்தனந்தூள் வகையிலுப்பைப்பூவுடனே தேவதாரம், மல்குவீர் திப்பிலிரோகணிவகைக்கு வரிசையாய்கால்கழஞ்சு நிறுத்துக்கொள்ளே............................................................................ (௮௰)

* இருவேலி - வெட்டிவேர் † மதுரம் - கொடிமுந்திரிகைப்பழம் ‡ ரோசினை - கோரோசினை.

## இதுவுமது

நிறுத்துமேகல்வத்தில் போட்டபின்பு நிலையான செவ்விளநீர் தன்னைவார்த்து, வறுத்துமே இருசாமம் விடாமல்ஆட்டி வழிமைபோல் ஆகுமிந்தவரிசைபாரு, குறித்துமேமுலைப்பாலால் சாமம்)ரண்டுக் கூசாமல் அரைத்துமே வழித்தெடுத்து, பருத்தி குன்றிபளவாக உண்டைசெய்து * பக்ஷமொன்று நிழல்உலர்த்தி பதனம்பண்ணே. ............................................... (௮௰௧)

* பக்ஷம்ஒன்று - பதினைந்து நாள்

## இதுவுமது

பதனமாய் முலைப்பாலில் உண்டை ஈய பறக்குமேபழஞ்சுரம்விடாதகாய்ச்சல், விதனமாய் * அம்மையார்க்கூந்தல்கொண்டுவிருப்பமாய் கியாழமிட்டு அதனில்ஈய, மதனமந்தபதின்மூன்று சன்னியோடு மாத்தான விஷதோஷங்கெதிகெட்டோடும், அதனமாய் ஆமசுரம் கிளைச்சுரங்கள் அச்சமுற்றகலும் ஏலாதி என்றே.......................................................................... (௮௰௨)

* அம்மையார்க்கூந்தல் - முதியார்க்கூந்தல்

இம்மூன்றுமொருதொடர்

அதிசாரசுரகாசசுவாசவார்த்தி - சுரதாபவிக்கல்தாகத்திற்கு

## மருந்துங்கியாழமும்

* சிங்கிபடன்திப்பிலியும் † விடையர்கூட்டிதேனோடேழைத்துமேகு ழற்றைந்தியே, இங்கிதமாய் சுரகாசவார்த்தியோடு இன்பமுடல் தீரு ‡ மினே சால்ல சேரு, தங்கிய ஆல்மா நாவல் துளிர் தன்னோடே தான்காய்ச்சி அந் சந்திபொடப்பீராகில், § அங்கியெனுஞ் சுரதாபவிக்கலோடு அதிசாரதாக வை அகலுந்தானே.................................................. (அாகூ)

* சிங்கி - கலைமான்கொம்பு † மினே - மின்னே ‡ அங்கி - நெருப்பு.

பித்தசுரம் தாபசுரம் பழவெதுப்புக்கு மேல்பூச்சு

## கோஷ்டஎண்ணெய்

எழுசீராசிரியவிருத்தம்

சிரமதுதணியபசுவின் நெய்ந்நாழிச்சொல்லிடும் பால் இருநாழி..............*
தோன்றும் ஓர்ஆறு நாழிநல்லெண்ணெட்தொகையது சேர்த்தறிஸ்சற்கம்...*
பருப்பெருங் குரும்பைமதுர நல்றுறி வளர்கருப்வல்லே * ரோணி ........*
பாருசெவ்வள்ளிக் கொடிஅமுக்கராவேர்வருமரமஞ்சள் சந்தனமும் ........ *
திருவுளாசுக்கும் † காசுடன் அரக்கு திமர்ந்திடுங் கோஷ்ட மிவ்வகைக்கு ......*
திகழ்ஒருகழஞ்சனைத் தெரித்திதைசெய்கட் ‡ சிரத்திலும் உடப்பினிற்பூச...*
பரவியபித்தசுரம் பரிதாபப்பல் வலசுரம் பழவெதுடபும்........ ...............*
§ பானுமுன்பனிபோற் பறந்திடுமிதன்பேர் பாருநற் கோஷ்டெண்ணெய்ப்ப ரோ............................................................................(அாசு)

* ரோணி - கடுகுரோகணி † காசு - காசுக்கட்டி ‡ சிரத்திலும் - தலையிலும் § பானு - சூரியன்

சகலசுரங்களுமூன்றேமுக்கால் நாழிகையில்விட

## பச்சைக்கர்ப்பூரமாத்திரை

அறுசீராசிரியவிருத்தம்

பச்சைக்கர்ப்பூரந்தான் * பூ-பட்டைசாதிக்காய் வகைக்கு ............... ...*
மச்சைச்சமுஞ்சு இரண்டாக வாளம் அறுசமுஞ்சுடனே ......................*
அர்சக் † குமரிச்சாறதனால் அரைத்து உழுந்து பிரமாணம்...................*
சச்சத்துடனே உலரவைத்து சர்க்கரைதனிலோர் குளிகையிடே ...... (அாகு)

* பூபட்டை - லவங்கப்பட்டை † குமரி - கற்றாழை

இதுவுமது

இடநாழிகைமூன்றேமுக்கால் இல்விரோசனந்தானாகும்........................*
படுமேசுரமுந்தான் தீரும் பண்பாய்வந்தகுளிருக்கு ........................*

சொடுமே குப்லபமேனியிலே சொற்கொடிவேலி மிளகனைத்து ......... *
கொடுமே * விழுதுசரிகூட்டிக் குளிர்வரும் பேதகுணமாமே ......... (அாகு)
*விழுது - திகழுவனைத்தல்

சக்லகாய்ச்சலுக்கும்

## மாத்திரை

ஆடுதின்னுபாலைப்பட்டை அதைநிழல் உலர்த்திக்கொண்டு......... *
சாடிய * கருவாப்பட்டை சமனதாய் இடித்துதூளாய் ......... *
வாடியவஸ்திரகாயம் வன்மையாய்செய்து அத்தை ......... *
படியபுளித்த † நிம்பப்பழச்சாறுவிட்டு ஆட்டே ......... (அாஎ)
* கருவாபட்டை - லவங்கப்பட்டை † நிம்பழம் - எலிமிச்சம்பழம்

இதுவுமது

ஆட்டியேபரித்திக்கொட்டை அளவதாய் உண்டைசெய்து ......... *
கூட்டிய அநுபானத்தில் கொடுசுர வகாய்ச்சல்தீரும்......... *
நீட்டிய புளிப்புகைப்பு புகலவே தற்றும்ஆகா ......... *
நாட்டியவிஷமும்போகும் நளினமதறிந்திடாயே ......... (அாஅ)

(ஊச) சுரத்திற்கு

## மருந்து

விட்ணுவின்காந்திசுக்கு விளம்பிய கடுக்காய் இன்டு ......... *
வட்ட * வாலுடனேகூட்டி வளம்பெறக் கொள்வீராகில் ......... *
எட்சுரம் அறுபத்துநாலும் இடாது இல்லை இல்லை ......... *
விட்டது போகவென்று விளம்பினர்புவியுள்ளோர்க்கே.........(அாக)
* வாலுடன் - வாலுழுவையரிசியுடன்

மீளாத ஐயசுரத்தின்

## குணம்

* ஐயசுரத்தின்குணங்கேளு † அகடுபொருமி கண்வெளுக்கும்'......... *
கையுங்காலுஞ் சோர்ந்துவிழும் கண்கள்உள்ளே தான்வீழும் ......... *
‡ தொய்யல்சுரமுங் விடாததுவும்சொல்லும்தோஷம் ஆறும்போல்......... *
மெய்யும்நாக்குமேவரண்டு விக்கலெடுக்க் மீளாதே......... (அாம)
* ஐயம் - சேஷ்மம் † அகடு - வயிறு ‡ தொய்யல் - துன்பம்

இதுவுமது

மெய்யில்வந்திளஞ்சுரந்தான் விட்டுவிட்டேவெதும்பி......... *
கையுடன்கால்வெதும்பி கன்னங்காயும் நெஞ்சிடிக்கும் ......... *
உய்யும் உழலை வாந்தியுண்டாம் ஓடி ஓடிக்கட்டுமது ......... *
ஐயம் பிழைப்பதரிதுகண்டாய அதிகமாகுஞ்சுரந்தானே ......... (அாமக)

சுரத்திற்குஆகா

## பதார்த்தங்கள்

பாசி என்னைப் இளநீர்போகம் பருகிடுங்குளிர்ந்தசோறு..........................*
காய்ச்சடை தயிர் புளிப்புக் கடுவேலை இனிப்பு பாகு....................................*
மால்தரும் மடமான்கன்றே வந்திடுஞ்சுரத்திற்காகா........................................*
* ஞாலமேல் மனிதர்பேரில் நாட்டிடில்சன்னியாமே ..................(அாய௨)

* ஞாலமேல் - பூலோகத்தின்மேல்

### இதுவுமது

பச்சைமீன் இறைச்சிக் கோழி பழங்கறி தேங்காய்மாங்காய் ......................*
இச்சைநெய்ப் பருப்பு முட்டை எழிலுளபுனுகு * சந்தம் .......................*
† நச்சுள இவைகள் எல்லாம் நாட்டியசுரத்திற் காகா ..............................*
கொச்சைமானிடர்கட்கொண்டால் கொடியமரணம் வந்திடுமே ......(அாய௩)

* சந்தம் - சந்தனம் † நச்சுள - ஆசையுள்ள.

### இதுவுமது

தோசைப்பிட்டுப் பணியாரம் சொல்லும்பயறு அவல்பொரிகள் ............*
வேசை உறக்கம் மஞ்சள்வாடை வேண்டாம்பழங்கறிபழங்கஞ்சி...............*
ஆசையுடனே பொருள்தேடல்யாக்கைபுறக்கம் இவை ஆகா......................*
தோஷமிருந்து பலபிணியாய்ச் சொல்லில் மரணம்வந்திடுமே...... (அாயச)

ஒருமருந்திற்பெரியவர்கட்காயினும் (யஅ) பிராய பாலியர்கட்கும்

ஒக்கும் ஆகையின் குழந்தையின் தாய் க்கொள்ள லாகா

## சுரவகுப்புமுற்றிற்று

அகத்தியர் திருவடிகளே

சரணம்





# சன்னிவகுப்பு.

## சன்னிவருவிதங் கூறுகின்றார்

### மாந்தசன்னியின் குணம்

பத்திபத்தாழ்வால்மாந்தம் பகைசெயும் விதங்கள்மெற்ற ........................*
சுற்றியமயக்கமுண்டாய்ச் சொல்லொணா சன்னி எய்தும் ........................*
முற்றிய சுரமுந்தாக முதிர்ந்திடும் நாவின்முள்ளு ........................*
புத்தியுங் கலங்கிக்கண்ணும் போதவே தாழுந்தானே ................(ஆ௰௫)

### இதுவுமது

மாந்தமேகோபித்தாற்கால்வயிற்போம் உப்பிக்கொள்ளும் ........................*
சாந்தல்போல்மேனிதானும் கருகியேவெருவிச்சோரும் ........................*
சேர்ந்ததோர்பச்சைவெள்ளைச் சிறந்துமென்மலமுந்தியும் ........................*
வாந்தியேபண்ணுங்கண்டாய் வலிப்புடன்சன்னிதானே ............... (ஆ௰௬)

### இதுவுமது

மாந்தமேகோபித்தாற்கால் வயிறுபோம் உப்பிக்கொள்ளும் ........................*
மாந்தமேகோபித்தாற்கால் வாய்தனைவெருவிச்சீறும் ........................*
மாந்தமேகோபித்தாற்கால் மயங்கியேகுளிர்ந்துகாணும் ........................*
மாந்தமேகோபித்தாற்கால் வலிப்புடன்சன்னிதானே ................(ஆ௰௭)

### இதுவுமது

உருக்குஞ் சன்னிமாந்தகுணம் ஓயாதலறும் வாய்ப்பிதற்றும் ........................*
ஒருக்கண்திறந்து ஒருக்கண்ணை உருட்டி விழித்துபார்த்தழுகும் ................*
துருக்கும் ஊசிப்போல்கழுத்து துவளநொந்து உடலமெலாம் ................*
பெருக்கநரம்புந்தான் தெறித்துப் பிழியும்பாசிப்போல்விழியே .....(ஆ௰௮)

### மாந்தசன்னிக்குப்புகை

கஞ்சாவேரும் ஊமத்தைக் கடிய அராயின்தன்வேரு ........................*
* பஞ்சாய் இவைகள் வேப்பெண்ணெய்ப் பையவறுத்துப் பொடியாக்கி ......*
† துஞ்சாநெருப்பு புகைகாட்ட தோற்றுஞ் சன்னி அத்தனையும் ................*
மஞ்சார் குழலாய் அடிதொழுது ‡ மாய்ந்தே போகுங்கண்டாயே...(ஆ௰௯)

* பஞ்சாய் - கோரைக்கிழங்கு † துஞ்சா - சாவாத ‡ மாய்ந்தே-பொன்றி

மாந்தசன்னிக்கு வேறு மருந்து

## தேறையர்

கலிவிருத்தம்

ஓடும்வேளைவேர் * உத்தாமணியின்வேர் ................*
மூடுமாவிலிங்கை முருங்கைப்பட்டை ...................*
யோடுநால்வகைக் கோர்பலமே ரசத் .....................*
தோடுவாங்கி முறித்து சூடாற்றிடே.................(அஉ௰)

* உத்தாமணி - வேலிப்பருத்தி

இதுவுமது

ஆற்றிடாய் பின் அரிசியின் திப்பிலி ........................*
கோற்றிடாய் மிளகோடு சுக்கான தூ .........................*
ளேற்றிடாய் * நவலோகம் இழைத்துடன் ....................*
வார்த்திடாய் சன்னிமாந்தம் போம்பாரிதே...... (அஉக)

* நவலோகம் - நவலோக பூபதிமாத்திரை யிழைத்துக் - கொடுக்கவென்றூர்

பதினெட்டு மாந்தசன்னிக்கு மருந்து

## பிரமமுனி

அறுசீராசிரியவிருத்தம்

சிறு காளா இலையும் * வெள்ளுள்ளி சேர்ந்தவசம்பு ஓமமுடன்............... *
அறிவாய் இடித்து சாற்வாங்கி அரிய) துவளையிட் (டுள்ளுக்கும் ..............*
நெறியாய்கொடுக்கநாள்மூன்று நிகழ்பதினெட்டுமாந்தசன்னி ............... *
தெறிப்பட்டோடும்நோயெல்லாம் சிரசுமுதல்தோஷம்போமே.........(அஉஉ)

* வெள்ளுள்ளி - வெள்ளைப்பூண்டு.

தோஷசன்னி மாந்தசன்னிபித்தசுரம்வாந்திக்கு

## கஸ்தூரிமாத்திரை

வெண்பா

கஸ்தூரி ஒன்றுக் கடம் * ஞாழல் பூ இரண்டு ......................................*
சித்தாவின் கோரோசினை மூன்று - முத்தான ...................................*
மெல்லியர் தன்முலைப்பால் விட்டரைத்துக் குன்றி எடை.........................*
சொல் உருண்டை செய்வாய் துணிந்து......................................... (அஉ௩)

* ஞாழல்பூ - குங்குமப்பூ

இதுவுமது

அணிந்துண்டைவைத்திட்டால் தோஷசன்னி மாந்தசன்னி ..................*
மணிமாந்த பித்தசுரம்வாந்தி - தணிந்தோடும்...................*
முத்தாரம் பூண்டமுகிழ் முலையாயிப்பேர் ..................*
கஸ்தூரிமாத்திரையாங் காண் ..................(அ௨௪)

மாந்தகணசன்னிக்கு கோரோசினை

## மாத்திரை

சீர்சிறந்தமாசிக்காய் திப்பிலிகோரோசினையும் ..................*
கார்சிறந்தகோஷ்டங் கருஞ்சீரம் பேர்சிறந்த ..................*
அக்கராகாரம் அரைத்துமுலைப் பாலிலிட ..................*
இக்கணமேதீரும் இது..................(அ௨௫)

மாந்தகணசன்னி பலசன்னிக்கு

## ஏலாதிமாத்திரை

ஆசிரிய விருத்தம்

ஏலாதி உண்டைக்கு நல் ஏலம் இலவங்கம் எழில் மதுரம் * இருவேலிவேர்...*
இசெக்கு நன்னாறி முந்திரிகை பேரீந் திலாமிச்சு கோரோசினை ..........*
தானி சப்பத்திரி நிலப்பனை சடாமாஞ்சில் சந்தனந் தேவதாரம் ..........*
தன்னுடன் திப்பிலி இலுப்பையின் பூவுந் † தனித்தக் கழஞ்சாகவே.........*
மேலான கடுகுரோகணி கழஞ்சொக்கு மதை மீறுநீர்வார்த்திவைகளை ...*
விழுதாய் அரைத்துண்டை குன் றியளவாகவே வெய்யிற்படாதவகைசெய் ...*
பாலானமொழிமங்கை பாலதனிலேகொடு பார்மாந்த கணமகலுமே ......*
பண்பான ‡ கூந்தற்கியாமுத்திலிட்டிடப் பலசன்னிசயுந்தீருமே .....(அ௨௬)

* இருவேலிவேர் - வெட்டிவேர் † தனித்தக்கழஞ்சு - வகைவகைக்கு ஒவ்வொருகழஞ்சு ‡ கூந்தல் - முதியார்ககூந்தல்

சன்னிசுரகபத்திற்கு

## வேப்பெண்ணெய்

எண்சீராசிரியவிருத்தம்

வேப்பெண்ணெய்ப்படி அரைதான் சங்கிலேச்சாற் விதமானபடி அரைக்கால் பாவட்டைச்சாற், ஆப்பட்ட * முசுறுமுட்டைப்படி அரைக்கால் அடவாக எண்ணெயிட்டுக் கடைமருந்து, மாப்பட்ட சுக்குதிப்பிவசம்பு வளமான மிளகு † இருசீரகந்தான், தாப்பட்டக்கஸ்தூரிமஞ்சட்பூண்டு தான் தனித்துவிருகனெடை வாங்கிக் கொள்ளே ..................(அ௨எ)

* முசுறுமுட்டை - ஓர்வித எறும்பின்முட்டை † இருசீரகம் - நற்சீரகம் - கருஞ்சீரகம்

இதுவுமது

வாங்கியேபொடியாக்கி எண்ணெயிட்டு வளமாணமெழுகுபதம்வடித்து
கொண்டு, தாங்கியேதுட்டெடைதான் ஒருவேளைக்கு தயவாகக்கொடுத்துவர
நம்வியாதி, தூங்கிவிழுஞசன்னிசுரங் கபமுந்தானே சொல்லுகிறேன்பறக்கு
மமெய்தான் ஈது, சாங்கமுள்ள எண்ணெயிதுனைவிடாதே தப்பாதேவெந்நீ
ர்சோற்சாப்பிடாயே.......................................................(அஉஅ)

சன்னிசுரகபத்திற்குவேறு

## வேப்பெண்ணெய்

காப்பிடவேவேப்பெண்ணெய் அரைபடிதானுநந் தல்லேடுதணிக்குட்டி
ளாவிலவேரு, தாப்பிட்டதூதுளைநாட்வேளைவேரும் தருஞ்சீரங்கஸ்தூரிமஞ்
ளாடு, மாப்பிட்ட வெண்காயம் சிற்றரத்தை மரமஞ்சள் இவை யெல்லாம்
ண்ணெயிட்டு, காப்பிட்டே எரித்துபதமாய் இறக்கிக்கரண்டிகொள்ளவியாதி
பாம் காணுதென்றே.......................................................(அஉக)

சன்னிமாந்தத்திற்கு

## புகை

அறுசீராசிரியவித்ருதம்

நக்கிலும் அகிலுங்கூட்டிக் குருசன்னிநாயகந்தான்...............................*
செக்கெனசாம்புராணி திகழ்புகைகூட்டிப்பின்னர்...............................*
நக்கதோர் வேளைவேரும் சாரணை நாலுங்கொண்டு...............................*
துக்கணம் புகைக்கசன்னி மாந்தமும் அகலுந்தானே.................... (அஙடு)

குளிர்சன்னிசுரத்திற்கு இராமபாணம்

## குளிகை

மஞ்சளும் சாதிக்காயும் வருந் * திரிகடுகங்கிராம்பு...............................*
மிஞ்சிய கடுகுரோணி மிகுமரமஞ்சள் நாபி...............................*
அஞ்சிய † நிம்பம் ஓர்நாள்சாறுவார்த்தரைத்துருட்டி...............................*
கொஞ்சியராமபாணங் குளிர்சன்னிசுரங்கள்போமே..................(அஙக)

* திரிகடுகம் - சுக்கு - மிளகு - திப்பிலி † நிம்பம் - எலிமிச்சம் பழச்சாறு

விஷசன்னிசுரம்விக்கல் குளிர்சன்னிக்கு ஏலாதி மாத்திரை

## தன்வந்திரி

எண்சீராசிரியவிருத்தம்

ஈந்திட்டால் ஏலாதி உண்டைக்கேளு இனிதான * திரிகடுகு சாதிக்காயு
ம், ஈந்திட்ட † கிராம்பேலம் ‡ ரோணிமஞ்சள் ஏழில் நாபிசரக்குவகைக்கழ

ஞ்சதாக, ஈந்திட்ட கல்வத்திற்‡பொடியாய்செய்து இருசாமம் பழச்சாறு தன்னலாட்டி, ஈந்திட்டப் பயற்றளவு உண்டைசெய்து இனிமாசிப்பத்திரிபின் நியாழத்துரட்டே.........................................................(௮௩௨)

* திரிகடுகு - சுக்கு - மிளகு - திப்பிலி † கிரம்பு - ஏலம் ‡ ரோணி கடுகுரோகணி

## இதுவுமது

ஊட்டவே விஷசன்னி சுரமும் விக்கல் உறவானகுளிர் சன்னி ஊர் விட்டோடும், நீட்டவே இந்நாலை முந்நாளுக்கி நிகழ்த்தினேன் குழைந்தைகளின் இரக்கத்தாலே, கூட்டவேசிசுவின் நோய்த் தீர்ப்பாராகிற் குருபமுள்ள பிறப்பதுவும் அற்றுப்போகும், தாட்டவே இந்நூல் ஆர்கொடுக்கப்போறுர் சண்டாளர்தங்களுக்கு எய்தாதல்றே.........................................................(௮௩௩)

விஷதோஷசன்னிமாந்தம்பித்தசுரம் வாந்திக்கு

## கஸ்தூரிமாத்திரை

எய்தாமல் கஸ்தூரி கழஞ்சு ஒன்று இதமானகுங்குமப்பூ கழஞ்சிரண்டு, எய்தாமல் * ரோசினையுங் கழஞ்சுமூன்று இவைமூன்றுங் கல்வத்தில் இட்டுக்கொண்டு, எய்தாமல் அமுர்தமெனு முலைப்பால்விட்டு இனிதான சாமம் ஒன்றரைத்துக்கொண்டு, எய்தாமல் குன்றிபோல் நிழல் உலர்த்தி எடுத்துநீ செப்புதனில் அடைத்திடாயே.........................................................(௮௩௪)

* ரோசினை - கோரோசினை

## இதுவுமது

அடைத்திட்ட மாத்திரைதான் ஒன்றெடுத்து அதனைக்கு முலைப்பால் விட்டிழைத்துக்கொண்டு, விடைத்திட்ட முனைநாவில் தீட்டிட்டாற்கால் விஷதோஷ சன்னிமாந்தம் விரிட்டோடும், * சடத்தெழுந்த பித்தசுரம் வாந்தி தீரும் கடைமருந்தின் போக்கறியா கழுதைமாள்பர், குடைத்தெழுந்த குடநகிலமானேனோப் குருவருளால் கஸ்தூரி துளிகையாமே .........(௮௩௪)

* சடத்தெழுந்த - உடலிலெழுந்த) இந்நான்குமொருதொடர்

## ஆமசன்னியின்குணம்

அறுசீராசிரியவிருத்தம்

மூலை உண்ணுதழுகும்பார்க்கும் முகமதுவேறதாகும்..........................................*
பலபல வலிப்புண்டாகும் பாலகன் குரலுங் கம்மும் ..........................................*
மலமது கட்டிமெய்யில் வந்திடுஞ் சுரமுமீந்த ..........................................*
அலமதுவல்லமின்னே ஆமத்தின் சன்னிதானே ........................(௮௩௫)

இதுவுமது

நாகமேமிக உண்டாகும் சரீரத்தில் சுரம்உண்டாகும்.................................*
வாகிலாமலமுந்தியந்து * வண்ணமாம் சுறுப்புண்டாகும்...............................*
நோகுமேவயிறும்ஊதும் † நோக்காமல்சுழிக்கும் நெற்றி...............................*
ஆகுமே ‡ பிரமைபோல ஆமத்தின் சன்னிதானே..................................(அகூ௬)

* வண்ணம் - நிறம் † நோக்காமல் - கண்விழித்து பாராமல் ‡ பிரமை - மயக்கம்

ஆமசன்னிக்கு கியாழமும் உள்ளுக்கும் மேலுக்கும்பூச

## * அண்டத்தைலம்

கடுக்காய்கடுகுரோசணியும் சடியசிவேதை † திரிகடுகு.................................*
முடுக்காய் இடித்துக்காய்ச்சியதை மூரிக்குழவிக்கிந்திடவே...............................*
துடுக்காய்க்கன்னிக்கோழிமுட்டை துய்யத்தைலம்வேப்பெண்ணெய்..........*
அடுக்காய் உள்ளும் மேல் இடவும் ஆமசன்னி அகன்றிடுமே..................(அகஎ)

* அண்டம் - முட்டை † திரிகடுகு - சுக்கு - மிளகு - திப்பிலி.

ஆமசன்னிக்கு வேறு

## குடிநீர்

வெண்பா

சாரணைக்காய் மூச்சுரட்டைத் தன்காய்பொடுதலையும்.................................*
பூரணமாந்திரிகடுகு பூந்துளசி - வாரணியுங்.......................................*
* கொங்கையரோசிரசமும் கூட்டிக்குடிநீர்.........................................*
† உண்கவே ஆமசன்னி ஓடும்..................................................(அகஅ)

* கொங்கை † உண்கவே - என்பது - மெல்லினமறுதலைப்படதொடுத்துவந்தது

ஆமசன்னிக்கு வேறு

## துவாலை

எண்சீராசிரியவிருத்தம்

* கொடிவேலிவேர்ப்பட்டைச்சங்கம்வேரும் சுறுந்தெருக்கு வேர்ப்பட்டை முடக்கற்றானும், வடிவாக † அஞ்செண்ணெய் விட்டுக்காய்ச்சி வர்த்த சன்னி யானதற்கு வாகாய்க்கேளு; துடியாக ‡ அண்டம் வெள்ளுள்ளித்தைலம் துருசாக இறக்கி எங்குந்துவாலைசெய்ய, தடிவான ஆமசன்னி குடுமென்று சாற்றினார் பொதிகைமுனி சாற்றிறோே...................................(அகக)

* கொடிவேலி - சித்திரமூலம் † அஞ்செண்ணெய் - எள்ளெண்ணெய் - ஆமணக்கெண்ணெய் - இலுப்பையெண்ணெய் - புங்கிணெண்ணெய் - வேப்பெண்ணெய் ‡ அண்டம் - முட்டை

## கோர்ரமசன்னியின்குணம்

ஓடுமேவாயுமிதம் நாவிப்பற்றி உடலெங்கும் கனகனத்து சூடுண்டாகும், நாடுமே சதைகளெள்ளாங்குலிக்கிக்காட்டும் நல்லவிழிகால்கைகட் பதைபதைக்கும், தேடுநீ பார்ப்பதற்கு மாந்தமென்று செப்பவே வாதநீர்க் கலந்துக் கொண்டு, பாடுதெற்குவாயில்லைத்தாளைப்பற்றும் பருத்துடம்புநெருப்பதுபோல் மிகவுங்காயும், கூடுமே அசைந்தசைந்து வலிக்கும்பாரு கோராம சன்னிமாந் கொடுமைதானே.................................................................(அசுல)

இஃதைந்தடியான் வந்தச்செய்யுள்

### கோராமசன்னிக்கு

## எண்ணெய்

கோரமையென்றுசொல்லாதேவலிகட்கெல்லாம் கோதில்லாநாருண்டின்வேப்பம்பட்டை, தடுமையில்லா * கார்த்திகையின்கிழங்கும்முள்ளித் தருகருடன் † தவசிவேர்சிவமூலிவேரு, படுமைபடா ‡ சிற்றண்டம் § மூசுறண்டங்கட்பதமரனநெய்கள்வகைபலமேதூக்கு, கடுமையுள்ள ¶ முட்டிக்காய்ச்சாறுநாழிகனவேம்பின்கியாழமதுநாழிகூட்டே...............................(அசுக)

* கார்த்திகைக்கிழங்கு - வெந்தோன்றி † தவசிவேர் - தவசுமுருங்கைவேர் ‡ சிற்றண்டம் - கோழிமுட்டை § முசுறண்டம் - ஓர்விதஎறும்பின்முட்டை ¶ முட்டிக்காய் - தமுட்டிக்காய்.

### இதுவுமது

கூட்டுவெள்ளைச்சாரணைவேர் கொத்தான் வேர்தான் கோதையே ஏழுவகை பலம்இரண்டாய், ஈட்டு நறுவிளக்கெண்ணெய நாழிசேர்த்து ஏலம்சீரகம் இரணடு * ரோணி † காயம், தீட்டுவகை பலம்இரண்டு பொடித்துப்போட்டுத் தீயெரித்து மெழுகாக்கி காசெடையே வாரு' மூட்டோடே யோடுமே வலியகுசுந்தான் மூன்றுநாள் பத்தியமாய் முனைந்துபாரே ...............(அசுஉ)

* ரோணி - கடுகுரோகணி † காயம் - பெருக்காயம்

### தாந்திரீக சன்னியின்

## குணம்

### அறுசீராசிரியவிருத்தம்

வேகமாய்ச்சுரம்உண்டாகும் மேனியும் பதைப்புண்டாகும் ....................*
* மோகமாய்மூலைஉண்ணுது மூர்ச்சையாய்க்கண்ணுறங்கும்....................*
† ஆகமே பசலைக்காட்டி அரையினிற் குளிர்ந்துகாணும் ........................*
தாகமே மிகஉண்டாகும் தாந்திரீக சன்னிதானே ..........................(அசுங)

* மோகமாய் - ஆசையாய் † ஆகம் - உடம்பு

தாந்திரீகசன்னிக்கு

## புகை

வாய்ந்த வேப்பெண்ணெய் வேளை வளரும் ஊமத்தைகஞ்சா ............... *
சேர்ந்திடு முருங்கையோடு சித்திரமூலவேரும் ....................................... *
காந்து * வெள்ளுளி வசம்பு † கம்பளம் ‡ மஞ்ஞையீர்கரு ............................ *
போந்துநீ ஜெனாய் § அண்டம் புகைக்க தாந்திரீகம்போமே .........(அசச)

* வெள்ளுள்ளி - வெள்ளைப்பூண்டு † கம்பளம் - கம்பளி ‡ மஞ்ஞையீர்க்கு - மயிலிறகு § அண்டம் - கோழிமுட்டை.

தீராதசன்னியின்

## குணம்

கண்ணை நாக்கைப்புருவத்தைக்காலைகையை வலித்துமிக ..................... *
* விண்ணைப் பார்க்கும் பெருமூச்சு விட்டுப்பின்னும வலிப்புண்டாம் .......... *
உண்ணமுலையும் ஒவ்வாது உறங்கா உடலு மஞ்சனிக்கும் ............................ *
நண்ணு மிதுவே சன்னியென நவின்றார் முனிவோர்உலகோர்க்கே ...(அசடு)

விண்ணைப்பார்க்கும் - ஆகாயத்தைப்பார்க்கும்

இதுவுமது

எண்சீராசிரிய விருத்தம்

மாந்தகணைப்போராமம் ஒன்றாய்க் கூடிவயிறு விடுந்தான் உப்பும் வாந்திப்பண்ணும், சேர்ந்தசுரம் கால்கையுங் குளிர்ந்திரத்தம் சீதமிகபற்றி நின்று வாயுதள்ளும், போந்தகன் நாவெந்து புண்ணுப்த் தோஷமுற்றுப் போகாமல் சன்னியாய் வலித்துவேர்க்கும், சாந்தமுடன் இதுதீரமாதம் ஒன்று தப்பினால் நோய்ஆறுதிங்கள்மூன்றே, ......................................................... (அசகூ)

இவ்விரண்டு செய்யுளிற் சொல்லியப்பிரகாரம் தீராத சன்னியின் நிதானம் அறிக இங்ஙனம் நோயுறின் உடனே வடவாமுகாக்கினி போன்ற மருந்திட்டு நீங்கச்செய்யின் தெய்வத சித்தந்தான் அங்ஙனமவ்வியாதியை விட்டால் ஒருமாதத்திற் கொல்லும் அதுதப்பினால் மூன்று மாதற்றிற் கொல்லும் அதுவுந்தப்பினால் ஆறுமாதம் அகத்தியங்கொல்லுமென்பர் அன்றியும் குழைந்தைகட்கு (க) சனனியும் பெரியவர்கட்கு (ய௩) சன்னியுமாம்

## சன்னிவகுப்புமுற்றிற்று

அகத்தியர் திருவடிகளே

## சரணம்





# வலிப்பின்வகுப்பு.

மாந்தவலிப்பு வருவிதங் கூறுகின்றார்

## தன்வந்திரி

தன்னிமையால்நோய் உதிக்கும்வாறே தென்னில் தன்வயது பதினெட்டு இருநாட்டுக்குள்ளே, உன்னிமைக்குள் தீனியினால் சற்மத்தாலும் உடம்பிலுள்ளச் சூட்டாலும் வினையினாலும், வென்னிமையாய் நோட்உதித்தவாறிதாகும்விபமென்ன காத்தாதிக் கியாழந்தேற்று, சொன்னிமைக்குள் ஒடிவிடும் இக்குணத்தால் கூறில்லா நூலிதுவாம் முந்நூறைம்றே......................(அசஎ)

## மாந்தவலிப்பின்குணம்

அறுசீராசிரியவிருத்தம்

வயிறுசழியும் விதவிதமாய் மார்பைவலிக்கும்பற்கிட்டும்......................*
பயறுகடித்தாற்போல் * தந்தம்பற்றிக் கடிக்கும் இசிப் பெடுக்கும்...... ...... *
கயிறு முறுக்கி விட்டாற்போல் காலுங்கையுந்தான் இழுக்கும்.................*
† எயிறுதிறக்கவொட்டாது இறங்கா தன்னந்தண்ணீரே ........... ..(அசஅ)

* தந்தம் - பல் † எயிறு - பல் இவ்விரண்டுமொருதொடர்

மாந்தவலிப்புக்கு

## புகை

சேட்டைப் * பரி † உகிர் மயிலிறகு தின்னுமிளகு வசம்புசுக்கு...... ........*
கூட்டக் கடுகுப்பெயத்திக் கூறும்அழிஞ்சில் வெப்பெண்ணெய்...............*
போட்டங் ‡ கம்பளமுஞ் சமனாய்ப் புகழ் § செம்மறியின் ¶ கோட்டுடனே ...*
வாட்டிய புகைக்கவே பிணியும் மாறுதிசிவுமாறிடுமே..... ...............(அசகூ)

* பரி - குதிரை † உகிர் நகம் ‡ கம்பளம் - கம்பளி § செம்மறி - செம்மறிஆடு ¶ கோடு - கொம்பு

மாந்தவலிப்பு சாக்கைவலிப்புக்கு

## மருந்து

எண்சீராசிரியவிருத்தம்

கொடிவேலிவேர்ப்பட்டை சங்கன்வேர்த்தோல் குன்றெருக்கன் வேர்ப்பட்டை இவைதான்மூன்றும், வடிவான விருகனெண்டை தூக்கிக்கொண்டு வளமான வெந்நீராவிட்டு நன்றாய், பொடியாக நறுக்கிவடிக்கட்டியந்த * புனலதனில் விருசனெண்டை குங்குமப்பூ, தூடியாக அரைத்துகொடுவலிப்பு மாந்தத்தொடு சாக்கை வலிப்புமது தொலைந்துபோமே ..............................(அருய)

* புனல் - சலம்

காக்கைவலிப்புக்கு

## மருந்து

காக்கைபிச்சியுங் கொழுப்பும் அதனின் முட்டைக் கனவசம்பு திப்பிலி
யின் கட்டைதானும், நீக்கமறுங் கொஞ்சிதமுதாமைவேரும் நிலவேம்பின்
வேரு மிளகருணை வேரும், போக்குடனே பொடிசெய்தெண்ணெயினிற் போ
டுப் புகழாகக்காயச்சே வறுத்த ஓமம், தாக்குவாய் பொடித்து வெண்காரம்
டள்ளித் தானறுக்கிப்போட்டிறக்கி வைத்துக்கொள்ளே ... ........... (அருக)

இதுவுமது

வெண்பா

கொள்ளவே காக்கைக்கொடுமை வலித்தப்போது ..............................*
கொள்ள ஒருகரண்டியே கொடுக்க - மெள்ளவே...... ...............................*
இப்படிக்காறுதரம் ஏந்திழை யீ ; நல்கிள்.. ............................................*
ஒப்பில்லா காக்கைவலி யோடும்........ ................. ..................(அரு௨)

அள்ளுவலிப்புக்கு

## குளிகை

எண்சீராசிரியவிருத்தம்

பார்க்கவே இன்னமொருகுளிகைகேளு பாங்கான சாதிக்காய் கிராம்
பு ஓமம், கார்க்கவே கரியசீரகமுஞ் சுக்கு கனமானதிப்பிலி கஸ்தூரி மஞ்சு
ள், சார்க்கவே வசம்புடனே சாயமொக்க சரியெடையாய் ஒன்பதுக்குஞ் சமன்
தான்கேளு, வேர்க்கவேவெள்ளைக்காக்கணன் வேர்ப்பட்டைவிதமாகதான்கூட்
டிவெந்நீராலே ..................................................................................... (அருரு)

இதுவுமது

வெந்நீரால் தானரைத்து சுண்டைக்காய்போல் விதமாகதான் உலர்
த்திவைத்துக்கொண்டு, வெந்நீரில் குழைந்தைகட்கு ஏழுநாள் தான் விரைவாக
வே கொடுக்க உப்பாசாது, வெந்நீரில்சாதமிட்டுஉண்பீராலுல்வேண்டியதோர்
நோய்தீரும் விளம்பக்கேளு, வெந்நீரால் சளிஇருமல் கக்கல் காய்ச்சல் மீறிவ
ருஞ் சுரிகுண விச்சுழியும்போமே .............................................(அருச)

இதுவுமது

போருமேஅள்ளுடனே சன்னிதோஷம் பொல்லாதவலியுடனே விஷ
சாக்கள், போகுமேமந்தமுடன் வயிற்றுநோயும் பொருமலுடன் இளைச்சலு
மே போகுஞ்சொன்னேன். போருமே வசம்புதனைச்சுட்டுக்கொள்ளுபோக்கோ
டே பச்சைபென்ருல் பேதிரப்ப. போகுமே சுட்டதனுல் மட்டாம்பேதி போ
குமேமற்ற நோய்ப் புனிதமாமே ................................................(அருசு)

பிற இசிவுக்கு

## மருந்து

அறுசீராசிரியவிருத்தம்

தும்பையிலைபுந்துளசி யிலை துய்யஇஞ்சியிலை மூன்றும் ......................*
சம்பைஇடையாய் வகைவகைக்கு சரியெடை யாகவே நிறுத்து ..............*
பம்பரம்போலதனத்தாளே பகரும்பூண்டோர் ஆறெடையாய் ...............*
நம்பிநிசமுதான்அரைத்து நல்லசிற்று மணக்கிலேயே .................. (அருசு)

இதுவுமது

இலையில்வைத்து தான்சுருட்டி இளகவெதுப்பிச்சாறுபிழி....................*
விலையாய் மூன்றுவேளைக்கும் விரும்பிக் காசள்வாய் கொடுக்க ..............*
துலையுஞ் சேயற் பிறஇசிவு சொல்லாதோடிப் போய்விடும்பின்..................*
மலையுஞ் சிலையுங்கலையாயே மனதிற்பயமாய்ச் செய்வாயே....................*

சகலவலிப்புகட்கும், சன்னிட்குகம்

## சோதிருஷிதைலம்

கலிவெண்பா

ஆதிமறைவிளங்கும் ஆயுர்வேதத்துணர்ந்த..........................................*
சோதிருஷிதைலம் சொல்லக்கேள்...............................நீதியாய்... (அருஅ)
அவுரிவேர் முன்னைவேர் அழிஞ்சில்வேர் சாரணைவேர் ............................*
சிவனார்வேம்பின்வேர் சிறுபுளடி..................................துவரான........ *
சங்கன்வேர் செங்கத் தாரிவேர் வாகைவேர் ........................................*
புங்கன்வேர் நொச்சில்வேர் பூவரசு................................துங்கமுள்ள ...... *
குட்டிக்களாவேரும் குட்டிச்சுமிழ்வேரும் .........................................*
குட்டிவிளாவேர்பெருங்கு தம்பைவேர்...... ......................திட்டமுடன் ......*
முருங்கை மிளகருணைவேர் முட்காவேளைவேர்....................................*
அரியபாவட்டைவேர் ஆதொண்டை...............................விரும்புகிற.......*
வெட்பாலேவேர் எருக்கன்வேர்க் கண்டங்கத்தரிவேர் ..............................*
துப்புகொடிவேலிவேர் தூதுளைவேர் ...........................தப்பில்லா.........*
கூத்தன்குதம்பைவேர் கூறும் * வனமணிவேர் ......................................*
காத்த † வேலிவிட்டுனுங் காந்திவேர் ............................சேர்த்தியுள... .....*
சத்தியின்சாரணைவேர் தளிர்த்தநன்னறிவேர் ........................................*
ஆத்தம்போலாகும் எலியாவின்வேர் ................................சுத்த.............. *
முகைக்கின்றவேர்வகைகள் முப்பத்துமூன்றும் ......................................*
வகைக்கு விருகனெடைவாங்குபத்து ...................... ........அகைக்கும்..........*
நல்லப்பாகல்சாறும் நாய்ப்பாகல்சாறும் ...............................................*
செல் ஆடாதோடைச்சாற் சின்னிச்சாற் ....................வல்ல.....................*
எருக்கிலைச்சாற் புங்கிலைச்சரற் எலிமிச்சம்பழச்சாற்........................ ......*
பெருக்கமுடக்கற்றுன்சாற் பின்னும்............................திருக்குடைய ......*
கரு... குறிஞ்சான்சாற் கனமாவிலிங்கைச்சாற்........................................*

ட்டில் வருஞ்சாற் வகைகள்பத்தும் ……… கூட்டி ……… *
கைவகைக்கு கால்படியாய் வளமாகவே அளந்து……… *
நாசையுடனே சேர்த்து துடியாக ……… டகையில்லா ……… *
ளவால் இரண்டு ‡ வாயசமும்தான் ஒன்று ……… *
வாபெரும் ஓணான் ஒன்று ……… கவ்வா ……… *
யல் ஒன்றுசிற்ருேணான் மூன்றுடும்பு ஒன்று……… *
ல்விழியே ⁑ சப்பக் ¶ கண்டம் ஒன்று ……… வயமானப் ……… *
சைமயிலிறகுபன்பாகஐந்து ……… *
சமாய் நல்ல வடம் தான் ஐந்து ……… இச்சைப் ……… *
சவிஞுட நீரும் டகர் ‑ மேதியின் நீரும் ……… *
சயவெள்ளாட்டின்நீர் மேற் * சிறுநீர் ……… அசையா ……… *
கைவகைச்குகால்படியாய் வண்மையுடன் அளந்து ……… *
தாகையாய்க்கடைசரக்கு சொல்லக்கேள் ……… தகைமைச் ……… *
நஞ்சீரகத்துடனே கஸ்தூரியின்மஞ்சள் ……… *
ரிமையுடன் பூதகரப்பானும்மே ……… வரஞ்சிறந்த ……… *
ஞசள் மரமஞ்சள் வாய்விளங்கங்கடுக்காய் ……… *
ஞ்சைநகர் † கிட்டம் சதகுப்பி ……… மிஞ்சும்நற் ……… *
ற்றரத்தைப்பேரரத்தை செண்பகப்பூதிப்பிலியுங் ……… *
ற்ரும்பெருங்காயம் சாதிக்காய் ……… பற்றுடைய ……… *
சவ்வியங் ‡ குக்கில் சிறு § தேக்கலாப்பொடியும் ……… *
வவ்வகைக் ¶ காறு விருகனெடைக் ……… கவ்வும் ……… *
சம்புவிருகனெடை வரிசையுடன்பத்து ……… *
சை உள்ளிவிருகன் எடைப்பத்தும் ……… நிசம்பெறவே ……… *
சும்வலம்புரிக்காய் விருகனெடையிலொட்டு ……… *
ாசமுறக்கொண்டுவந்துவைத்துமே ……… ஆசையுடன் ……… *
செய்யும்வகைவிபரம் தெளிவாகசொல்லக்கேள் ……… *
மெவிழ்சேர் திவ்ய மடமயிலே ……… பையவே ……… *
ாட்டுவோர் எல்லாம் சதிக்கக்கிடாமலிட்டு ……… *
ட்டிக்கடைச்சரக்கில் வார்த்தரைத்து ……… ஊட்டியே ……… *
ச்சிலைகட்சாற்றைவிட்டுப் பரிவாகதான் அரைத்து ……… *
ச்சமுள்ளங் கோமியங்கள் விட்டரைத்து ……… சச்சுடையாய் ……… *
ளிபதம் ஆனல் சரியெனவே பாண்டத்தில் ……… *
டணிதீயிட்டப் பிற்பாடு ……… வாணியே ……… *
வப்பெண்ணெய் ஓர் நாழி விளக்கெண்ணெய் ஓர் நாழி ……… *
கோப்பாகமுன்மருந்திற் கூடவிட்டுப் ……… பூப்பாக் ……… *
லக்கி அடுப்பேற்றும் போதில் சாக்காய் ஓணான் ……… *
நல்சகமுள்ள வெளவாலும் சொல்முயலும் ……… பிலக்க ……… *
டும்போடு சிற்ருேணான் உக்ரநல்லப்பாம்பும் ……… *
டும்பொன் ருஞ்செய்யா தெடுத்து ……… திடமாய் ……… *
அறுத்துதிரம் பாண்டத் தம்மருந்திற்பிடித்து ……… *
மறுந்துத் தோல் இறகு குடல்வாங்கி ……… குறித்ததோர் ……… *

எண்ணெயிலேதான்விட் டெரித்திரண்டுசாமம் ...... *
வண்மையுடன்தான் இறக்கிவைத்து ......தண்மை...... *
மறுநாள் அப்பெற்றி வளமாக்தான் எரித்து ...... *
வெறுவாமெழுகுபத மேபார்த்து ......அறிவாக...... *
இறைச்சிகளெல்லாம் எடுத்தெறிந்துபோட்டு ...... *
மறைத்துவடிகட்டிவைத்து ......நிறைத்துமே ...... *
உள்ளுக்குக செலைதாம் உண்மையுடன்கொடுத்து ...... *
தெள்ளுதலைமுழுகுந் தேய்த்து ......மெள்ளவே...... *
சர்வாங்கமுந்துவளை தானிட்டேயிதற்கு ...... *
விரைவாகதீரும் வியாதிகேள் ......பரவியெழும்...... *
கோணவலிப்புடனே குமரக்கண்டவலிப்பும் ...... *
காணப்பிறவலிப்புங்காக்கைவலி ......பூணுகிற...... *
கன்னிவலிப்பு தங்காத உள்வலிப்பும் ...... *
பன்னும் ரணவலிப்பும் பார்மீது ......இன்னம்...... *
முகவாதத்தின் வலிப்பு முகசன்னிபின்வலிப்பு ...... *
இசலும் இமைமிடிட்டு ஏனஞ்செட் ......புகலுங் ...... *
குதிரைவலிப்புங் கொள்ளைநடுக்கின் வலிப்பு ...... *
சதிராட்முசல்வலிப்பு † சசவாதம் ......துரிதமுழும் ...... *
பாரீசவாதம் படருஞ்சந்தின் வாதம் ...... *
மாரீசமாம் முடக்குவாதம் ......வாரீச ...... *
ஊன்னங்கால்வாதம் ஊச்சிவாதத்தோடு ...... *
கள்ளமில்லாதக் கணுவாதம் ......மெள்ளவே ...... *
வாதமென்னப்பட்டவையும் வலிப்பென்னப்பட்டவையும் ...... *
பாதகசன்னியென்னப் பட்டவையும் ......ஆதலை நில் ...... *
மெய்யாகதீரும் வினவும் இதற்குபத்யம் ...... *
பொய்யாயப் புகையிலையும் புளியும் ......வெய்யக் ...... *
கருவாடுமீன் இறைச்சிக் கரப்பான் பண்டந்தள்ளி ...... *
பரிவாயிருந்தால் பலிக்குமே ......பெரியவ ...... *
சிறியவர்க்கும் ‡ வைலவர்க்கும் செய்சட்கும் ஆமென்று ...... *
தேறி சோதிருஷிசொல்லை ......நேர் ...... (காச)

* வளமை - ஓரிதழ்த்தாமரை † வேலி - உத்தாமணி ‡ வாயசம் - காகம் § சர்ப்பம் - பாம்பு ¶ கண்டம் - துண்டம் ஓ மேதி - எருமை * சிறுநீர் - மூத்திரம் † கிட்டம் - பிட்டம் ‡ குக்கில் - மைசாட்சி § காறு - வகைக்கூறு ¶ அறுத்துதிரம் - அறுந்தஉதிரம் ஓ இமை - கண்ணிமை * சசவாதம் - முயல்வாதம் † வைலவர் - பாவியர்

## வலிப்பின்வகுப்பு முற்றிற்று

அகத்தியர் திருவடிகளே

சரணம்

# கழிச்சல்வகுப்பு

## மாந்தக்கழிச்சலின்குணம்

அறுசீராசிரியவிருத்தம்

வார்ந்தி * பிரார்த்தி மூர்ச்சையதாய் வாயுங்குரலுஞ் சிரணித்து.......................*
காய்ந்துமேனி வெதுவெதுப்பாய் கைகால்குளிர்ந்து வலிப்புண்டாம்.............*
சேர்ந்துகழிப்பு மலந்தானும் சீர்க்கெட்டிருக்கும் பலவிதமாய் .................*
போந்தமாந்தக்கழிச்சலிது பொல்லாதெனவே புகன்றனரோ.............(௯௰௫)

* பிரார்த்தி - மயக்கம்

மாந்தங்கழிச்சலுக்கு பச்சிலைச்

### சாறு

நல்லவேளைநாய்வேளை நாறும் வேலிப்பருத்தியுடன் ...............................*
சொல்லுக்குப்பைமேனியிலை துதிக்கும் அகத்திப்பழுப்புடனே.................*
வெல்லும்வசம்பு * வெள்ளுள்ளி வேண்டும்படியே சாற்வாங்கி ..................*
உள்ளுங்கொடுத்து துவாலையிட ஒடுங்கழி மாந்தந்தானே ................(௯௰௬)

* வெள்ளுள்ளி - வெள்ளைப் பூண்டு

கழிச்சல்தோஷத்திற்கு உப்பிலிநெய்

### தன்வந்திரி

வெண்பா

உப்பிலியின் பூண்டை உறநறுக்கி ஆவின்நெய் ...................................*
தட்புடனே சேர்த்துதான் நாற்சாமம் - செப்பக் .....................................*
குலரவியில்வைத்து கொடுக்கழிச்சல் தோஷம் .......................................*
அலறியேயோடு மென் றறி.....................................................(௯௰௭)

மாந்தக்கழிச்சல் மாந்த சன்னிக்கு இயாழம்

### பிரம முனி

நல்வேளை ஓர்பிடியும் நாட்டமாய்க்கொண்டுவந்து ................................*
செல்லவே மூன்றுப்பாய்ச்செய்து - வல்லக் .........................................*
கனலதனிற்சட்டியைக் காயவைத்து * உப்பு ............................................*
புனிதமா யொரு † சேரைப் போடு..................................................(௯௰௮)

* உப்பு - சோற்றுப்பு † சேரா - செரங்கை

இதுவுமது

எண்சீராசிரியவிருத்தம்

போட்டதொரு உப்பதுவுஞ்சாம்பலாக புகட்டியேவறுத்துநீ துடைத்துக்கொட்டி, காட்டவேவசம்பதனைத்தட்டிப்போட்டுக் கருகியேதீப்பற்றி வேகும்போது, ஆட்டவேமுன்னறுத்த வேளைதன்னை அதிலிட்டுப்பொன்னிறமாய்வறுத்துக்கொள்ளு, தாட்டவே அரைசெரங்கை நீர்தெளித்து தானதுவுஞ்சுண்டமட்டும்வறுத்துகேளே .................................................. (கூாகூ)

இதவுமது

வறுத்துமறுபடிகொஞ்சம் நீர்தெளித்து மருவியதுசுண்டமட்டும்வறுத்துக்கொள்ளு, வறுத்துமே இன்னமொருபடிதான் நீரை வார்க்குமுன்னே ஓமங்காசெடைதான்போடு,வறுத்துபொரியும்போது சலத்தைவார்த்து மசத்தான கணபதிக்குப்பூசைப்பண்ணு, வறுத்து நீ* எட்டொன்றாய்வற்றக்காய்ச்சி வாஇறக்கிக்கியாழுமொருசங்குபோடே .................................. (கூாய)

* எட்டொன்றாய் - எட்டழாக்குசலத்தை ஒருஅழாக்காககாய்ச்சல்.

இதுவுமது

வெண்பா

போடவேமாந்தத்தில்பொல்லாக் கழிச்சலுமே ..................................*
ஏடவில்மாந்தசன்னியெங்கேவே - ரோடிவிடும் ..................................*
பேர்ச்சொல்லுநில்லாது பேழ்விற்புருநீண்ட..........................................*
சாரளகப்பெண்ணரசேகாண் ............................................(கூாயக)

இந்நான்குமொருதொடர்

கழிச்சலுக்கு வேறு

மருந்து

கீழ்க்காயின்நெல்லிவேர்க் * கேழ்முலைப்பால்விட்டரைத்தே ...................*
வாழ்க் † காமர்ச்சங்களவுவார்க்கவே ‡ காழ்க்கூறும் ..................................*
பொல்லாக்கழிச்சற்பூவுலகைவிட்டிங்கு............................................................*
நில்லேனென்றோடிவிடும்நேர்..................................................(கூாயஉ)

* கேழ் - ஒளி † காமர் - அழகு ‡ காழ்க்கூறும் - வயிரமாகசொல்லும்.

கழிச்சலுக்கு வேறு அபினி

மாத்திரை

எண்சீராசிரியவிருத்தம்

அதிவிடையஞ்சாதிக்காய்சாதிபத்ரி அபினிகடுக்காய்த்தான்றிமிளகு * சீரம், மதிய கருஞ்சீரகமும்வகைவகைக்கு வராகனிடை யாகக்கூட்டி, சதிபில்லா ஏலமதுவிராகன் ஒன்று தழைத்தமாதளந்துளிரும் அத்திப்பட்டை, செதியான இவையிரண்டுங்கியாழம்வைத்துக் கிருபையாய்வார்த்தரைத்து அடையாய்த்தட்டே ...................................................(கூாயங)

இதுவுமது

தட்டியே சட்டிதனைக்காயவைத்து தான் அரசம் இலையில் கட்டிப்புடத் தைப்போடு, அட்டியின்றிக்கியாழமது வார்த்துவார்த்து அரசிலைகரந்தப்புடத் தைப்போட்டுப்போட்டு, இட்டியே இப்படி ஐந்தேழுபத்துஇயல்புடம்போட்டே யெடுத்து அரைத்துமைபோல், கொட்டியே குன்றியளவுண்டைசெய்து குண மாகநிழல் உலர்த்திக் கழிச்சலுக்கே................................ (கூாய௪)

இதுவுமது

கழிச்சலுக்கு எருமைதயிர்வடியிட்டேதான் கண்மணியே ஒரு உண்டை க்கொடுக்கத்திரும், பழிச்சலாஞ்சுரமாகில் வெந்நீர்த்தன்னில்பரிந்துநீஇட்டா ற்கால் பறந்துபோகும், அழிச்சலாங்கழிச்சலுக்கு தகும்பிரகாரம் அநுபானம் அறிந்திட்டால் தீராதுண்டோ, தெழித்தலாம் பதுமாபாங்கம்போற் கண்ணுய் த் திருவளரும்பொதிகைமுனிசெயலாங்காணே........................(கூாய௫)

கணக்கழிச்சலின்

# குணம்

அறுசீராசிரியவிருத்தம்

சீதங்கழியுமலங்கழியும் திரும்பிக்கெட்டப்பால்போலே .................. *
போதக்கழியுங்கறித்தண்ணீர்ப் போலுங்கையுங்கால்குளிர்ந்து ..................*
காதை அடைக்கும்வெதுப்புண்டாம் கையிற்பிள்ளைத்தங்காது ..................*
கோதாய் இந்தகுணங்கண்டால்குலவும் இதன்பேர்கழிகணமே...... (கூாய௬)

கணக்கழிச்சலுக்கு

# கியாழம்

உண்ணும் * ஈருள்ளிப்பத்து ஒருபிடி கருவேல் ஈர்க்கு ..........................*
மண்ணுஞ்சீரகம் ஓர்காசு † இருகூறு வெந்தயந்தான் ..........................*
பெண்ணமாயிவைநிறுத்து வறுத்துநீர்விட்டுக்காய்ச்சி ..........................*
‡ திண்ணமாய்க் கொடுக்கபேதி கழிகணத்திருமென்றே................(கூாயஎ)

* ஈருள்ளி - வெண்காயம் † இருகூறு - இரண்டுபங்கு ‡ திண்ணம் - பலம்

கழிகணம் காய்ச்சல் தாகம் வரகூதிக்கு

# கியாழம்

வெண்பா

இலந்தைநாரத்தை புளி இனியகணப்பூண்டும் ..............................*
கலந்துநெல்லி ஈர்க்குடனேகாய்ச்சியுண்ண - நலமா ..............................*
கழிகணம் உள்வரகூதிக் காய்ச்சலுடன் தாகம் ..............................*
பழிவருமென்றோடும்பார்..............................................(கூாய௮)

